


# காகா காலேல்கர்

விஷ்ணு பிரபாகர்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச் சிற்பம்—கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
பட உதவி: நேஷனல் மியூஸியம், புது தில்லி.)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# காகா காலேல்கர்

*ஹிந்தி மூலம்:*

**விஷ்ணு பிரபாகர்**

*தமிழாக்கம்:*

**அகிலா சிவராமன்**



சாகித்திய அக்காதெமி

*Kaka Kalelkar* — Tamil translation by Akila Sivaraman of Vishnu Prabhakar's monograph in Hindi, Sahitya Akademi, New Delhi, (1991) **Rs. 10**.

ISBN 81 7201 047 8

முதல் பதிப்பு: 1991

சாகித்திய அக்காதெமி

ரவீந்திர பவன், 35, ஃபெரோஸ்ஷா சாலை, புது தில்லி-110 001.

'சுவாதி' மந்திர் மார்க், புது தில்லி-110 001.

29, எல்டாம்ஸ் சாலை, தேனாம்பேட்டை, சென்னை-600 018.

ஜீவன்தார் பில்டிங், 4வது மாடி டைமண்ட் ஹார்பார் ரோடு, கல்கத்தா-700 053.

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை, தாதர், பம்பாய்-400 014.

ADA ரங்கமந்திரா, 109, ஜே. சி. ரோடு, பெங்களூர்-560 002.

ரூ. 10

டயோசிசன் அச்சகம், சென்னை 600 007.

# உள்ளடக்கம்

# முன்னுரை

காகா சாஹப் தம்முடைய வரலாற்றுச் சுருக்கத்தில் இவ்வாறு எழுதுகிறார்:

''1917-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம், 10-ஆம் நாளன்று சம்பாரன் செல்லும் வழியில் பரோடா இரயில் நிலையத்தில் நான் காந்திஜியைச் சந்தித்தேன். 'நான் இப்போதுதான் ஆசிரமம் நிறுவியிருக்கிறேன். எனவே, எனது முழு நேரத்தையும் அதற்கே செலவிட வேண்டியுள்ளது. ஆனால், பலவகை வேலைகளுக்காக எனக்கு வெளியேயிருந்து அழைப்புகள் வருகின்றன. அவற்றை எவ்வாறு மறுப்பது? இப்போதும் ஓர் அழைப்பின்பேரில்தான் சம்பாரன் சென்றுகொண்டிருக்கிறேன். நீங்களோ மிக்க அநுபவம் வாய்ந்தவர். சாந்தி நிகேதனத்தில் ஆசிரமவாசிகளோடு நன்றாகக் கலந்து பழகியிருக்கிறீர்கள். எனவே, நீங்கள் ஆசிரமத்திற்குச் சென்று இருக்கமுடியுமானால், நான் கவலையற்றிருப்பேன்' என்று அவர் சொன்னபோது, நானும் இசைந்தேன். ஆசிரமத்தில் சேர்ந்து அனைத்து அலுவல்களிலும் ஈடுபடலானேன்.''

காகா சாஹப் ஆசிரமத்துக்கு வந்தவுடனேயே, ஜூன் மாதத்தில், சத்தியாக்கிரக இயக்கம் ''கோசரவ்''விலிருந்து, ''சாபர்மதி''க்கு வந்தது. அத்துடன் ஆசிரமப் பள்ளிக்கூடத்திலும் புதிய அமைப்பு ஏற்பட்டது. இதற்குள் காகா சாஹப் சிறந்த ஆசிரியரெனப் பெயரெடுத்திருந்தார். எனவே, ஆசிரமக் கல்விக் குழுவின் மதிப்பிற்குரிய உறுப்பினருமானார். பள்ளிக்கூட நிர்வாகத்தையும் கல்விக் குழு உறுப்பினர்கள் மாறி மாறிக் கவனித்துக்கொள்ள வேண்டியிருந்தது. இதனால் காகா சாஹப் பிற்கு இத்துறையிலும் தேர்ந்த அநுபவமும் வெற்றியும் கிடைத்தன.

ஆனால் விதியானது அவருக்கு வேறு வேலையொன்றை நிர்ணயித்திருந்தது. காந்திஜியும் இதை உணர்ந்திருந்தார். சாந்தி நிகேதனத்தில் அவரைப் பார்த்தவுடனேயே அவரைத் தம்மைச் சார்ந்தவரென இனங் கண்டுகொண்டார். அவரிடம் எப்படி என்ன வேலை வாங்கவேண்டும் என்பதையும் அறிந்திருந்தார்.

அதிர்ஷ்டவசமாக, இதே ஆண்டில் குஜராத் கல்விக் கழகத்தின் இரண்டாவது மாநாடு நடைபெற்றது. காந்திஜி இதன்

தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காகா சாஹப் கட்டாயம் இவ்விழாவிற்கு வரவேண்டுமென்றும், இம்மாநாட்டிற்காக, ''ஹிந்தியே நமது தேசிய மொழியாகத் தகுந்தது'' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுதவேண்டும் என்றும் காந்திஜி கூறியிருந்தார்.

காந்திஜியின் இந்தக் கட்டளையைக் காகா சாஹப் ஏற்றுக் கொண்டார். இவ்வாறு ஒரு மராட்டியர், ஒரு குஜராத்தியரின் தூண்டுதலினால் ஹிந்தி மொழியுடன் இணையலானார். அது வரை ஹிந்தி மொழியில் அவருக்கு அத்துணை ஈடுபாடு இல்லை. கல்லூரி நாட்களில், அவரது ஒரு தோழன், லோகமானிய திலகரின் ''கேசரி'' இதழின் ஹிந்தி வடிவம் தருவிப்பதுண்டு. வட இந்தியா முழுவதும் ஹிந்தியே பெரிதும் பழக்கத்திலிருந்ததால் இந்த ஹிந்தி இதழுக்கு ஆதரவு இருந்தது. ஹிந்தி மொழியறிவு தேவையென்றும், நன்மை தருமென்றும் கருதப்பட்டது.

முதல் முறையாக, காகா சாஹப்பிற்கும் ஹிந்தி மொழியின் பயன் தெரியலாயிற்று. மராட்டிய மாநிலத்தின் பல அறிஞர்கள் ஹிந்தியில் கவிதை புனைந்திருந்தனர் என்பதையும் அவர் அறிவார். பரோடாவில் சயாஜி ராவ் கெய்க்வாட் குஜராத்தியை மக்கள் மொழியாகவும், ஹிந்தியைத் தேசிய மொழியாகவும் ஒப்புக் கொண்டிருந்தார். எனவே இம்மொழிகட்கு மறுமலர்ச்சி தந்தார். இவையெல்லாம் தெரிந்தும் தாமாக இதுபற்றிக் காகாஜி இதுவரை அதிகம் சிந்தித்ததில்லை. ஆகவே, முதலில் குஜராத்தி அறிஞர்களின் கருத்துக்களை அதிகம் ஊன்றிப் படித்தார். பிறகு தமது தாய் மொழியாகிய மராத்தியில் கட்டுரை எழுதினார். கிஷோர் லால் மச்ருவாலா இதனைக் குஜராத்தியில் மொழிபெயர்த்தார். ''இந்தக் கட்டுரை என்னிடம் பெரியதொரு மாற்றத்தை விளைவிக்குமென நான் அப்போது கற்பனைகூடச் செய்ய வில்லை. 1917-ஆம் ஆண்டு இறுதியில் இக்கட்டுரை எழுதப் பட்டது'' என்கிறார் காகா சாஹப்.

இவ்வாறு 1917-ஆம் ஆண்டில் காகா சாஹப்பின் வாழ்க்கையில் முக்கிய திருப்பம் நிகழ்ந்தது. அங்குமிங்கும் நிலையற்று அலைந்த அவருக்கு, குறிக்கோள் பிடிபடத் தொடங்கியது. அவருக்கு அப்போது 32 வயது. இறந்தபோது அவரது வயது 96. முழுமையாக 64 ஆண்டுகள் அவர் ஹிந்திக்கு ஒளிவிளக்காகத் தொண்டாற்றினார்.

அவரது தாய்மொழியோ மராத்தி. ஆனால் தமது இணையற்ற இலக்கியப் படைப்புகளால் குஜராத்தி மொழிக்கும், தேசிய மொழியாம் ஹிந்திக்கும் மிகவும் பெருமை சேர்த்தார்.

# குழந்தைப் பருவமும் குடும்பமும்

காகா சாஹப்பின் முழுப் பெயர்—தத்தாத்ரேய பாலகிருஷ்ண காலேல்கர். குழந்தைப் பருவத்தில் அவரை ''தத்தூ'' என்று அழைத்து வந்தனர். தத்தூ கல்லூரி படிப்பிற்காகப் புணே சென்று கொண்டிருக்கும்போது அவரது வாழ்விற்கு நேர்வழி காட்டும் சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அவர் பொறியியல் வல்லுநராகி மிகுந்த பொருள் சம்பாதிக்க விரும்பினார். நேர்மையான வழி களில் அவருக்கு நம்பிக்கையிருந்தாலும், அந்நியர் அரசின் கீழ் வேலை செய்யும்போது நியாயமான விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டியதில்லையென அவர் நினைத்தார்.

தத்தூ புணேவுக்குப் போகக் கிளம்பிய அதே நாளன்று, அவரது தந்தையும், அரசாங்க வேலை நிமித்தம் புணே சென்று கொண்டிருந்தார். ''சாங்லி'' இரயில் நிலையத்தில் திடீரென அவர்கள் சந்திக்க நேரிட்டது. தந்தையார் தமது நீதித் துறைக்காகப் பிராமிசரி நோட்டுகள் வாங்கச் சென்றுகொண் டிருந் தார். ''காகிதத்தின் தரம் நாளுக்கு நாள் மாறிக்கொண் டிருந்தது. முயன்றால், குறைந்த விலையில் காகிதம் வாங்கி விடலாம். அரசாங்கத்திடம் இதைத் தெரிவிக்கத் தேவையில்லை. இதனால் கிடைக்கக்கூடிய இலாபத்தை நாம் எடுத்துக் கொள்ளலாம். யாருக்கும் தகவலே தெரியாததோடு நமக்கும் எளிதில் அந்தப் பணம் கிடைக்கும்'' என்று அப்போது காகா தம் தந்தையிடம் கூறினார்.

காகா சாஹப் எழுதுகிறார்—''நான் சொன்னதை அவர் அமைதியாகக் கேட்டதாக எனக்குத் தோன்றியது. ஆனால், அவரது மனம் எவ்வளவு புண்பட்டது என்பதை என்னால் அப்போது நினைத்துக்கூடப் பார்க்கமுடியவில்லை.'' சற்று நேரத்திற்குப் பிறகு என் தந்தை உடைந்த குரலில் கூறினார்:— ''தத்தூ, உன்னிடம் இவ்வளவு கீழ்த்தரமான எண்ணங்கள் இருக்குமென்று நான் நினைக்கவில்லை. எனக்குப் படியளப்பவரை நான் ஏமாற்றவேண்டும் என்பதுதான் நீ சொன்னதன் பொருள். உன்னுடைய படிப்பெல்லாம் வீண் வேலை. இறைவன் நமக்குக் கொடுத்துள்ளதைக் கொண்டு நாம் மனநிறைவு அடைய வேண்டும். செல்வம் இன்று வரும்—நாளை சென்று விடும்—நேர்மை தருகின்ற மதிப்போடு இறுதிவரை வாழ்வதுதான் பெருமை. இறந்த

பின் இறைவன் முன்நிற்கும்போது நான் இந்த ஈனச் செயல்களுக்கு என்ன சமாதானம் சொல்ல முடியும்? நீ கல்லூரிக்குப் போகிறாயே —அங்கே படித்து முடித்தபின் இப்படியா நடந்துகொள்ளப் போகிறாய்? அதைவிட இப்படியே நீ திரும்பிவிட்டால் தான் என்ன கெட்டுப்போகும்?'' என்றார் அவர்.

நிலை குலைந்துபோன தத்தூ தந்தையை ஏறிட்டுப் பார்த்தார். அவர் முகத்தில் சற்றுக்கூட ஆத்திரம் இல்லை—ஆவேசம் இல்லை—அதிசயிக்கத்தக்க கம்பீரம் தானிருந்தது. அவரது கூரிய பார்வை தத்தூவின் உள்ளத்தை ஊடுருவிச் சென்றது, கண நேரத்தில் எல்லாம் தலைகீழாக மாறிவிட்ட நிலை. பொருளீட்ட வேண்டுமென்ற பேராசை எங்கோ ஓடி ஒளிந்தது. வெள்ளையரை ஏமாற்ற வேண்டுமென்ற கயமை மாய்ந்தது.

எப்படியோ திசை திரும்பியிருக்க வேண்டிய தத்தூவின் வாழ்வில், உரிய நேரத்தில், அவர் தந்தையின் அறிவுரையால் நேர்ப்பாதை திறந்தது. அதுவே இறுதிவரை அவரை நடத்திச் சென்றது. அப்போதே அவர் பணத்திற்கு அடிமையாவதில்லை என முடிவெடுத்தார். தந்தையின் பெயருக்கு அவர் என்றும் களங்கம் விளைவித்ததில்லை.

இதேபோன்று தமது அன்னையைப் பற்றியும் ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு, காகா சாஹப் தமது நூலில் எழுதியுள்ளார். ''கோயிலுக்குச் செல்லும்போதெல்லாம் தமது தாயார் விலையுயர்ந்த ஆடையணிகளை அணிந்துகொண்டு செல்வதையும், கூடவே பிற அலுவலரின் மனைவிகளையும் வேலைக்காரனையும் கூட்டிச் செல்வதையும் பாலகன் தத்தூ கவனித்திருந்தார். ஒரு நாள் அம்மாவிடமே இது குறித்து வினவினார். 'அம்மா, கோயிலுக்குச் செல்லும்போது ஏன் இவ்வாறு நகைகளையெல்லாம் அணிந்து செல்கிறீர்கள்? போகும் வழி தெரிந்தும் கூட, துணைக்கு வேலைக்காரனையும் கூட்டிப் போவது ஏன்?''

மகனுடைய கேள்விகளைக் கேட்ட தாயார் மனம்விட்டுச் சிரித்தார். ''தத்தூ, நாம் பெரிய அழகான வீட்டில் வசிக்கிறோம். வீட்டில் வேலைக்காரர்—பணியாளர் வசதிகள் இருக்கின்றன. இறைவனது கருணையால்தான் இந்தப் பெருவாழ்வு நமக்குக் கிட்டியுள்ளது. அதனால்தான் கோயிலுக்குப் போகும்போது அத்தனை ஆடையணிகலன்களையும் அணிந்து கொண்டு சென்று—அவனிடம் காட்டுகிறோம். இறைவா! இவை யாவும் உன்னருள்! நாங்கள் மகிழ்ச்சியோடு வாழ்கிறோம்—குழந்தைகள் தந்தாய்—செல்வங்களையும் நிறைவையும் தந்தாய்—இத்தனை பெருமையும் உன் கருணையால்தான். இவற்றால் ஏழைகளுக்கு நன்மைகளைச்

செய்ய அருள்புரிவாயாக! அவர்களது ஆசிகளும் எங்களுக்குக் கிடைக்க வேண்டும். உன்னையும், நாங்கள் மறவாது இருப்போமாக' என்று வேண்டுவோம்.''

இதில் பல பொருள் கொள்ளலாம்—தூற்றவும் போற்றவும் இங்கே வழியுண்டு. ஆனால் அவர் அன்னையின் வாக்கில் நல்ல உட்பொருளைக் கண்டார். ''கோயிலில் பல தரப்பட்டோரும் கூடுகின்றனர். அம்மா சொல்வதைப் போல இறைவனிடம் எதுவும் கேட்காமல், அவனது அருளை எண்ணி நன்றி கூறும் தன்மையிது'' பல ஆண்டுகளுக்குப் பின் இதன் முழுப்பொருள் அவருக்குப் புலனாயிற்று. ''கோயிலில் சென்று அவன் தந்தவற்றை ஏற்றுக் கொண்டு நன்றி கூறும் பாங்கு என் மனத்தில் பதிந்து விட்டது.''

காகா சாஹப் பிறந்த ஆண்டில் தான் இந்தியாவை அடிமைத் தளையிலிருந்து விடுவித்த ''அகில பாரதீய ராஷ்டிரீய காங்கிரஸ்'' என்ற பேரியக்கம் தோன்றியது. 1885-ஆம் ஆண்டு டிசம்பர் முதல் நாள், கார்த்திகை மாதம் கிருஷ்ண பட்சம் 10-ஆம் நாள் செவ்வாயன்று மராட்டிய மாநிலத்திலுள்ள சாதாராவில் காகா பிறந்தார்.

சாரஸ்வத பிராமண குலத்தவரான இவர்கள் எங்கிருந்து எப்போது வந்து பாரதத்தின் தென்மேற்குப் பகுதியில் குடியேறினர் என்பது யாருக்கும் தெரியாது. முதலில் ''ராஜாக்யக்ஷ'' என்று அழைக்கப்பட்ட இவர்கள் கோவாவிற்கு வடக்கே சாமந்தவாடி ராஜ்யத்தின் காலேலி கிராமத்தில் குடியேறியபின்—காலேல்கர் என்பது இவர்களது குலப்பெயராகி விட்டது.

அந்தக் காலத்தில் சாமந்தவாடியில் கொள்ளைக்காரர் பயமும், அரசினரிடம் அச்சமும் அதிகமாக நிலவி வந்தன. எனவே காகாவின் பாட்டனார் ஸ்ரீ ஜீவாஜி பெல்காமிற்கு அருகேயுள்ள கிராமத்திற்குக் குடிபெயர்ந்து வசிக்கலானார். சௌகார் ஒருவரிடம் இவர் பணிபுரிந்து வந்தார். தம்மால் சேமிக்க முடிந்த பொருளை அவர் இந்த சௌகாரிடம் கொடுத்து வைத்திருந்தார். படிப்போ எழுத்தோ ஒன்றும் தெரியாத காலம். எனவே, சௌகார் இறந்த பிறகு இவருக்கு எதுவும் திருப்பிக் கிடைக்காமல் போய் விட்டது. இதனால் காகாவின் தந்தை பாலகிருஷ்ண ஜீவாஜி காலேல்கருக்கு மிஞ்சியது வறுமை மட்டுமே.

ஆனால் அவர் தம் உழைப்பால் முன்னேறி, ஆங்கிலக் கல்வி பயின்றார். முதலில் இந்தியப் படையில் ஏதோ துறையில் நுழைந்த இவர் பிறகு, உள் நாட்டுத் துறையில் பணிபுரியலானார். நாணயத்தினாலும், இடைவிடா உழைப்பினாலும், படிப்படியாக முன்னேறினார். காகா பிறந்தபோது அவர்

சாதாரா கலெக்டர் அலுவலகத்தில் தலைமைக் கணக்கர் பதவியில் இருந்தார்.

இதற்குப் பிறகு அவருக்கு உயர்ந்த பதவியொன்று கிடைத்தது. சந்ததியற்ற இந்திய அரச வம்சங்களின் சம்ஸ்தானங்களை ஆங்கில அரசினர் நிர்வகிக்கலாயினர். இந்த நடைமுறை சரிவர இயங்குகின்றதா என்பதை அவ்வப்போது பாலகிருஷ்ண காலேல்கரை அனுப்பிக் கண்காணிப்பதுண்டு. மாணவராக இருந்த காகாவிற்கோ படிப்பில் நாட்டம் செல்லவில்லை. தந்தையுடன் பல இடங்களுக்கும் செல்வதையே அவர் விரும்பினார். இதனால் நம் ராஜ்யங்களின் தலைநகரங்களுக்குச் செல்லும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. இதனால் ஒரு பக்கம் சுற்றுப் பயணங்களில் ஆசை பிறந்தது. இன்னொரு பக்கம் இந்திய இராஜ்யங்கள் எவ்வாறு நடக்கின்றன; அங்கு மக்கள் என்ன நினைக்கிறார்கள்; ஆங்கிலேயரது அரசு நிர்வாகம் எப்படி இயங்குகிறது போன்ற விவரங்களில் அநுபவம் பெறச் சந்தர்ப்பம் கிடைத்தது.

''தத்தூ'' என்பதன் விரிவான ''தத்தாத்ரேய'' என்ற பெயர் வைத்ததின் பின்னணியில் ஒரு கதையிருந்தது. நான் பிறப்பதற்கு முன்னால் ஒரு பெரியவர், எங்கள் வீட்டிற்கு வந்திருந்தார். ''இந்த முறை உங்களுக்கு மகன் பிறப்பான். அவன் ஸ்ரீ குரு தத்தாத்ரேயர் அளிக்கும் வரப்பிரசாதமாதலால், அவரது பெயரையே சூட்டுங்கள்'' என்று அவர் என் தந்தையிடம் சொன்னார்.

''அவரவர் பெயரை அவரவரே தேர்ந்தெடுக்கக்கூடிய உரிமை வேண்டுமென்று எனக்குச் சில சமயம் தோன்றுவதுண்டு. என்னுடைய பெயரை என்னிடமே கேட்டிருந்தால் நான் என்ன சொல்லியிருப்பேனோ தெரியாது. ஆனால் எங்கோ பளிச்சிடும் விண்மீன்களைச் சார்ந்திராமல்—என் பெற்றோர் விரும்பிய பெயரையே எனக்குச் சூட்டினர். ஜோதிடரைத் தேடிப்போகாமல் ஒரு நாடோடி பக்தரின் யோசனையை அவர்கள் ஏற்றதன் பயனாக எனக்கு இப்பெயர் அமைந்தது'' (மேரே ஜீவன் ப்ரசங், 195).

''தம் வாழ்வைத் தியாகம் செய்தல்'' என்பதே தத்தூ என்ற பெயரின் பொருளாகும். தேசப்பிதாவிடமும், ஹிந்தி மொழியிடமும் தம்மை ஒப்படைத்துக்கொண்டு தொண்டு செய்ததிலேயே காகா தம் பெயருக்குப் பொருளும் பெருமையும் தேடிக் கொண்டார்.

ஆனால் தத்தூவுக்கு அப்போது இதெல்லாம் தெரியுமா என்ன? ஏழு குழந்தைகளில் கடைக்குட்டியான அவர், ''கடைசிக்

குழந்தை பெரியவனாவதில்லை'' என்ற பழமொழியின்படி என்றும் சின்னக் குழந்தையாகவே இருந்தார். தத்தூவின் குழந்தைப் பருவமே இதற்குச் சான்று. நன்னெறி நின்ற பெற்றோர்களின் பேரன்பும், பெரிய சகோதரர்களின் அரவணைப்பும் காரணமாகத் தத்தூவின் உலகியலறிவு பெரிதும் விழிப்படையவே இல்லை. எங்கும் அவர் தனியாகப் போக முடிந்ததில்லை. தனது வலது கை எது எனத் தெரிந்துகொள்ளக் கூடப் பெருமுயற்சி தேவைப்பட்டது. தானே உணவருந்தக் கூடத் தெரியாத அவரை உடன் பிறந்தோர் பெரிதும் நையாண்டி செய்தனர்.

இதனால் அவரிடம் மிகுந்த தாழ்வு மனப்பான்மை குடிகொள்ளலாயிற்று. மனத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தாமல் உள்ளடக்கியே பழகிய அவர் நாளடைவில் கற்பனை உலகிலேயே மிதந்தார். இதுவே பின்னாளில் அவரை இயற்கையின்பத்தில் பெரிதும் ஈடுபட வைத்தது. நதி, கடல், பனி மூடியமலை, காடுகள், வயல்கள், நீலவானம் இன்ன பிற இவரை ஈர்த்து நிற்க, குழந்தைப் பருவத்திலேயே அவர் உள்ளொளியினைத் தேடி ஆராய்ச்சி செய்யலானார்.

காகா தமது தமக்கையைப் பற்றியும் இனிய நினைவுகளை ஏட்டில் பரவ விடுகிறார். சகோதரர்கள் சண்டை—பெற்றோரின் இறையன்பு—கோயில் வழிபாடுகள், படைப்புகள்—இசை—நடனம்—கதை உபந்நியாஸம் முதலியன கண்டும் கேட்டும் இவரது சிந்தனை வளர்ந்திருந்தது. இராஜதர்பார்களில் நடந்த கேளிக்கைகளையும், கலை விழாக்களையும் கண்ட பின் அவரது மனம் கோயில்களில் லயிக்கவில்லை. ''அயல் நாட்டு அரசினரைப் போன்று நமது தேவர்கள் தத்தம் தேவிகளுடன் இன்புற்றிருப்பதாகவே எனக்குத் தோன்றியது.''

பல்வேறு சிந்தனைகளில் இவ்வாறு நிலைகொள்ளாமல் அலைந்த அவருக்குத் தெளிவு எவ்வாறு கிடைக்கும்? அவரது அலைபாய்ந்த சிந்தனையைப்பற்றி அவரே கூறுகிறார்: ''ஒரு நாள் அம்மாவுடன் நான் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தேன். அங்கே ஓர் அழகிய மணமிக்க புத்தம் புதிய ரோஜா மலரைப் பார்த்து அம்மா ஆசைப்பட்டாள். உடனே அதைத் தமது மெல்லிய விரல்களால் பறித்து அங்கே அமர்ந்திருந்த என் தந்தையிடம் விரைந்து சென்று கொடுத்தார். அவரது கண்களில் அப்போது நான் கண்ட பக்தி அளப்பரியது. தந்தை மனம் நெகிழ்ந்து அதை முகர்ந்தார். அன்னையோ மிக்க மகிழ்ச்சியோடு கை வீசிய வண்ணம் திரும்பி வந்தார். தம்மிடம் இருந்த அனைத்தையும் கொடுத்துவிட்ட நிறைவு அவரிடம் தெரிந்தது.

திரும்புகையில் அம்மா சொன்னார்:— 'அப்பாவுக்கு ரோஜா மலர் மிகவும் பிடித்திருந்தது.'' இதைச் சொல்லாமல் இருக்கவும் அம்மாவால் முடியாதென நான் உணர்ந்து கொண்டேன்.''

பெற்றோரிடம் தத்தூவின் பக்தி அளப்பிறந்தது. ஒதுக்கித் தள்ளியபோதும் உடன்பிறந்தோரிடம் அவரது பாசம் சிறந்திருந்தது. அன்னையின் கட்டளை அது. அதிலும் நான் ஒரு குறை சொல்வதுண்டு. ''இலஷ்மணனுக்கோ ஒரே அண்ணன். எனக்கு மேலே ஐந்து பேர்—அவர்களில் யாருமே இராமனைப் போல் இல்லை. என் இலஷ்மணத் தன்மையைப் பயன்படுத்திக் கொண்ட அவர்கள், என்னோடு அடிக்கடி சண்டை போடவும் அடிக்கவும்கூடச் செய்தார்கள். அவர்கள் அப்படி அடித்தாலும் உதைத்தாலும்கூட அவர்களிடம் எனது அன்பு குறையலாகாது என்ற அளவிற்கு எனக்கு நன்னெறி உணர்த்தப்பட்டிருந்தது'' (பட்டே கதம், சமன்வய கே சாதக், 128).

# கல்வியும், புரட்சியும்

1903-ஆம் ஆண்டில் காகா சாஹப் புணேயிலுள்ள ஃபர்குஸன் கல்லூரியில் சேர்ந்தபோது, அவருக்குச் சுமார் பதினெட்டு வயதிருக்கும். ஆனால் குழந்தைப் பருவத்திலிருந்தே அவரது மனத்தில ஓர் எண்ணம் ஏனோ சுற்றிச் சுழன்று கொண்டேயிருந்தது. ''ஆங்கிலேயர் ஆளுகையில் வாழ்வது வெட்கக்கேடானது. அவர்களை இந்த நாட்டைவிட்டு வெளியேற்றி நாம் சுதந்திரம் பெறவேண்டும்''—இதுவே அந்த எண்ணம். இதைக் குறித்துக் காகா சாஹப் எழுதுகிறார்:— ''மிகவும் குழந்தைகளாக இருந்த காலந்தொட்டே நாங்கள் மூன்று சகோதரர்களும் இதைப்பற்றிப் பலமுறை விவாதித்திருக்கிறோம். இந்த எண்ணம் எங்களுக்கு எப்போது உதித்தது? அதைக் கண்டுகொள்ள எவ்வளவோ முயன்றிருக்கிறேன். ஆனால், அதன் தோற்றுவாய் புலப்படவேயில்லை.''

தொடக்கம் எப்போது நிகழ்ந்திருந்தாலும், காகா சாஹப் பிற்கு, இந்த எண்ணம் ஆழமாக வேரூன்றியிருந்தது. வீட்டில் குடும்பச் சூழலில் இலட்சியவாதியான தந்தையிடமிருந்து, இந்த எண்ணம் உதித்ததன்று. யாரிடம் ஊழியம் செய்கிறோமோ அவரிடம் நன்றியோடு நடக்கவேண்டுமென்பதே தந்தை கடைப்பிடித்த இலட்சியம். ஆனால் வீட்டுக்கு வெளியே சந்தித்த பலருக்கு மாறுபட்ட எண்ணங்கள் இருந்தன. 1857-ஆம் ஆண்டுப் புரட்சிக்குப் பிறகு ஆங்கிலேயர் ஆட்சி இந்த நாட்டில் வலுவடைந்துவிட்ட போதிலும் இந்நாட்டு மக்களது நன்மையை எண்ணி அவர்கள் எதுவும் செய்யவில்லை. நம் நாட்டுச் செல்வங்களையெல்லாம் வெளிநாட்டுக்குக் கொண்டு சென்று கொண்டிருந்தனர். இந்நிலையில் படித்த மக்களிடையே அதிருப்தி தோன்றலாயிற்று. ஆங்கிலேயரை எதிர்த்து ஏதாவது செய்ய நினைத்தனர்—ஆனால் எதை எப்படிச் செய்வது என்பது தெளிவாகவில்லை. ''ஆங்கிலேயர்களுக்கு எதிராக இரகசிய இயக்கம் தொடங்க வேண்டும். மகிழ்ச்சியோடு நாடெங்கும் சுற்றி வருகின்ற அவர்களுக்கு இடர் தர வேண்டும். அப்போது அவர்களே இந்த இடத்தைவிட்டு விலக வேண்டும்''—இப்படியெல்லாம் பல கருத்துக்கள் நிலவின.

கல்லூரியில் சேர்ந்தபின், புணேயின் சுதந்திரச் சூழலில் காகா சாஹப் மனத்தில் இந்த விடுதலை வேட்கை மேலும் உரமடைந்தது. இந்தச் சமயத்தில் நாட்டு மக்கள் முன்னே மூன்று வழிகள் தென்பட்டன. ஒருவகைக் கருத்துப்படி, இறைவன் இச்சைப்படியே ஆங்கிலேயர் ஆதிக்கம் ஏற்பட்டிருக்கிறது. எனவே நாம் அவர்கள் நிழலில்தான் வாழ வேண்டும். அவ்வப்பொழுது அவர்களுடன் பேசிப் பார்த்தும், வேண்டுமானால் வலியுறுத்தியும் கொஞ்சம் கொஞ்சமாகச் சில உரிமைகளைப் பெறவேண்டும். மக்களிடையே ஒரு சாராரிடம் அதிருப்தி நிலவுவதை அறிந்திருந்த ஆங்கிலேயர் சிலரும் இருந்தனர். இவர்கள் படித்தவர்களுக்கு நல்ல வேலைகளைக் கொடுத்து அவர்களைச் சரிக்கட்டி வந்தார்கள். பிறருக்கும் மெதுவாகச் சில சலுகைகள் அளிக்கப்படலாயின.

மற்றொரு சாரார் அந்நியர் ஆட்சிக்கு முழு எதிரிகளாயிருந்தனர். எப்படியாவது அவர்களை வெளியேற்றுவதிலேயே குறியாக இருந்தனர். சுதந்திர நாடுகளின் உதவியாலோ அல்லது தேசிய இராஜாங்கங்களின் ஒருமித்த முயற்சியினாலோ அல்லது துப்பாக்கிக் குண்டுகளின் துணையினாலோ—எப்படியோ இந்த வெளியேற்றம் நடந்தே ஆகவேண்டும். அவர்களது குறிக்கோள் உயர்ந்ததாயினும், சில கொலைகள் செய்வதால் என்ன கிடைத்துவிடப் போகிறது? திட்டமிடாத தாக்குதலும் குறைந்த ஆபத்துடையதல்லவே! இருந்தும், மக்களில் பலரது ஆதரவு இச்சாராருக்கு இருந்தது. லோகமானிய திலகர் தீவிரவாதி என்பதையும் அவர்கள் அறிந்திருந்தனர்.

லோகமானியர் முதல் சாராருக்கு முழு எதிரியெனினும், இரண்டாம் சாராரது கொள்கைகளில் வெறி கொண்டு ஹிம்சிக்கும் ‘வழி’யை முழுமையாக ஒப்புக்கொண்டாரில்லை. இந்தப் பைத்தியக்கார எண்ணம் இறுதியில் தேசிய இயக்கத்திற்குக் களங்கம் கற்பித்துவிடும் என்பதையும் அவர் அறிந்திருந்தார். இளைஞர்களிடம் அவருக்கு நல்ல செல்வாக்கு இருந்தது. அவர்களை ஊக்குவிப்பதில் அவர் தயங்கியவர் இல்லை. அவர்களது அரசியல் பற்று அவருக்குப் பிடித்திருந்தது. செயல் வெறிதான் அவருக்குப் பிடிக்கவில்லை. இவ்விஷயத்தில் அவர் சமூக நலத் தொண்டர்களின் அஹிம்ஸை நெறியை விரும்பினார். சமுதாய முன்னேற்றமும் ஒற்றுமையும் வேண்டுமானால் சமூகச் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும். இது குறித்து அவர்கள் லோகமானியரைச் சந்தித்துப் பேசினர்: ‘‘நீங்கள் படிப்பை விட்டுவிட வேண்டும் என்பது என் கொள்கையன்று. படித்துக்கொண்டே தேசத் தொண்டிலும் ஈடுபட வேண்டும். இதனால் முதல் வகுப்பில் தேறக்கூடிய மாணவன்

இரண்டாவது மூன்றாவது இடம் மட்டுமே பெற முடிந்தால், அதுவே தேசத்திற்குச் செய்த தியாகம் என்று கொள்ளலாம்.''

இந்த நேரத்தில் வங்கப் பிரிவினை பற்றிய இயக்கம் வங்காளத்தில் தோன்றியது. நாடு முழுமையும் ஒரு விழிப் புணர்ச்சி அலை புரண்டது. மராட்டி மாநிலத்தின் துப்பாக்கி—தோட்டா கொள்கையை வங்காளப் புரட்சியாளர் வரவேற்றனர். பஞ்சாபில் லாலா லஜ்பதிராய் போர்க்கொடி பிடிக்கலானார். நாளாவட்டத்தில் லால்—பால்—பால் லாலா லஜ்பதிராய் (லால்), பாலகங்காதர திலகர் (பால்), விபின் சந்திரபால் சகி (பால்) ஆகிய மும்மூர்த்திகள் அரசியல் வானில் தோன்றினர்.

இதே காலகட்டத்தில் புணேயில் சாவர்க்கர், பாபட் முதலானோர் இரகசிய இயக்கங்கள் நடத்தத் தொடங்கியிருந்தனர். கல்வித்துறையில் இவர்கள் காகா சாஹப்பைவிட அநுபவ சாலிகள். காகா சாஹப்பிற்கும் இதுவரை சரியான வழியெதுவும் புலப்படவில்லை. எனவே அவர் சாவர்க்கரின் இரகசிய இயக்கத்தில் சேர்ந்திருந்தார். ஆனால், விரைவிலேயே அலைபாய்ந்துகொண்டிருந்த அவரது மனம் நிம்மதியிழந்தது. ''சில ஆயுதங்களைக் கொண்டு நான்கைந்து ஆங்கிலேயர்களைக் கொலை செய்தால், உடனே ஏனையோர் நம் நாட்டைவிட்டுப் போய்விடுவார்களா? மாறாக, அவர்கள் எதிர் நடவடிக்கை மேற்கொண்டு மிதவாதிகளுக்கு ஆசைகாட்டித் தம் வசப்படுத்திக் கொண்டு, தீவிரவாதிகளை ஒடுக்கிவிடுவார்கள்.''

இதுபோன்று மனத்திலெழுந்த எண்ணங்களை அவர் தமது இயக்கத்தினர்களுடன் பரிமாறிக்கொண்டார். மக்கள் முன்னால் தமது கருத்துக்களைச் சொல்வதற்குமுன் இந்த இரகசிய இயக்கத்தவர்கள் நேர்மையான வழியிலே சிந்தித்து ஓர் ஒழுங்கான திட்டம் அமைக்கவேண்டும். அரசியல் புரட்சியால் மட்டும் வேலை நடக்காது என்றும் அவர் கருதினார். சமூகத்தில் வேரோடிவிட்ட சில களைகள் நீக்கப்பட்ட பின்னரே அரசியல் புரட்சியெதுவும் வெற்றி பெற முடியுமென அவர் நம்பினார். ஆனால் ஏனையோர் காகா சாஹப்பின் கூற்றை ஒப்புக்கொள்ளவில்லை. இதனால் அவர் இறுதியில் தம் வழியை மாற்றிக்கொள்ள நேரிட்டது. மனித மனம் ஓயாமல் உண்மைநெறியைத் தேடிக்கொண்டே இருந்தால், சின்னஞ்சிறு நிகழ்ச்சிகள்கூட எவ்வளவோ பாடம் கற்பிக்க முடியுமென்பதைக் காகா சாஹப் வாழ்க்கையிலே பார்க்கிறோம். அவர் கல்லூரியில் படித்தபோது, ஒரு நாள் தர்க்க சாஸ்திரம் பற்றிய தமது குறிப்புரைகளை ஆசிரியர் ஸ்ரீநானா ஓக் என்பவரது பார்வைக்கு அனுப்பியிருந்தார். அவை ''பிளாக்கி அண்ட் சன்ஸ்'' என்ற நிறுவனம் தயாரித்த ''இந்தியன் எக்ஸர்ஸைஸ்

நோட் புத்தகத்"தில் எழுதப்பட்டிருந்தது. ஆசிரியர், "இந்தியன்" என்ற சொல்லுக்கு எதிரே வினாக்குறியிட்டுத் திருப்பியனுப்பி விட்டார். அப்பொழுது காகா சாஹப் இந்தியாவிலேயே தயாரிக்கப்பட்ட நோட்புக்கை வாங்கி அதில் எழுதி ஆசிரியருக்கு அனுப்பினார். ஆசிரியர் ஓக் காகா சாஹப்பை நிமிர்ந்து பார்த்தார். இருவருமே சிரித்துவிட்டனர்.

தன்னாட்டுப் பொருளைத் தேடும் இந்த மௌனப் புரட்சி காகா சாஹப்பிடம் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது. மறைமுகத் தாக்குல் வழிகளை அவர் மனம் வெறுக்கலாயிற்று. இத்துணை சலனங்களுக்கிடையேயும் அவரது கல்விப் பயிற்சி சீராகச் சென்று கொண்டிருந்தது. ஃபர்குஸன் கல்லூரி முதல்வர் ரேங்க்லர் பராஞ்சபேயின் நாத்திக வாதத்தில் அவரது மனம் சென்றது. இதனால் குடுமியும் பூணூலும் அவரிடமிருந்து அகன்றன.

"ஆங்கிலேயரைக் கவிழ்க்க அவர் எப்படியெல்லாம் பாடுபட்டார்? என்ன பயிற்சிகளையெல்லாம் மேற்கொண்டார்? இந்த முயற்சியில் மறைந்து ஒளிந்து வாழ்வதுகூட எவ்வளவோ கடினமாயிருந்தது. சுதந்திரம் அடைவதற்கு வேண்டிய ஆயத்தங்களில் ஆயிரத்தில் ஒன்றென்ன—இலட்சத்தில் ஒரு பகுதியைக்கூட அவர்களால் செய்ய முடியவில்லை. 'தமது குறிக்கோளை வெளிப்படுத்த எப்படி முன்னேறுவது?' என்ற சிந்தனையில் சோர்வுதட்ட ஆரம்பித்திருந்தது. சுவாமி விவேகானந்தரின் வேதாந்த தத்துவங்கள், இராமகிருஷ்ணா மிஷன் பணிகள், டாக்டர் பகவான் தாஸின் சர்வமத நியதிகள், இரவீந்தரின் காவிய அழகு, மிகுந்த வாழ்வியலறிவு, லோகமானியத் திலகரின் தூண்டுதலால் விளைந்த தேசிய உணர்ச்சிப் பிரவாகம் இவையெல்லாம் உந்துசக்திகளாக விளங்கின. இருந்தும் நாட்டைக் கைதூக்கிக் காப்பாற்றும் நிலையோ அதற்கான ஒரு நிர்வாகியோ தென்படவில்லை. நாட்டு மக்களின் சக்தியைக் கொண்டு, தேசபக்தியென்னும் பாற்கடலைக் கடைந்து அரசியல் புரட்சியென்னும், வெண்ணெய் எடுக்க மக்களிடம் போதிய துடிப்பில்லையென்றே தோன்றியது. இதற்கு என்ன செய்வது? எங்கிருந்து தேவையான உணர்ச்சி வேகத்தையும் செயல்திறனையும் கொண்டுவருவது என்பதே எனது பிரச்சினையாக இருந்தது" (சமன்வய கே சாதக், 137)

1907-இல் அவர் பி. ஏ. பாஸ் செய்தார். தந்தையோ, அவர் வழக்கறிஞராக வேண்டுமென விரும்பினார். ஆனால் இவரோ நாட்டு விடுதலையையும் தேசியக் கல்வியையும் பற்றிய எண்ணங்களில் ஆழ்ந்திருந்தார். "நாட்டு விடுதலையைப்பற்றிப் பல தடவை நான் சிந்தித்திருக்கிறேன். ஆனால் அதற்கு இப்போது எனக்குக் கிடைத்த ஒரே வழி 'தேசியக் கல்வி' என்பதுதான்."

இதைத் தவிர காகா சாஹேப் ஸ்ரீ அரவிந்தரின் பத்திரிகையான 'கர்மயோகி'யின் நிரந்தர வாசகர். இவரது கருத்துக்களாலும் காகாவின் பல பிரச்சினைகள் பெரிதும் விலகலாயின. தேசியக் கல்வியின் பொருட்டுத் தம்மையே அர்ப்பணித்துக் கொள்ள அவர் முடிவு செய்தார்.

இந்த நாட்களில் அவரது கவனம் இன்னும் இருவரிடம் திரும்பியது. தென்னாப்பிரிக்காவில் பாரிஸ்டராக இருந்த காந்திஜி ஒருவர்; மற்றொருவர் சுவாமி இராமதீர்த்தர். ஒரு நண்பரது உதவியுடன் சுவாமிகளின் போதனைகளை அவர் மராத்தியில் மொழிபெயர்த்தார்.

ஆனால் தாம் முடிவு செய்தபடி அவர் செயல்படத் தொடங்கும் முன்பாகவே சில நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து நடக்கலாயின. முதலாவதாக, கர்நாடக மாநிலத்தின் முன்னணித் தலைவர் ஸ்ரீகங்காதர ராவ் தேஷ்பாண்டேயின் ஆலோசனையின் பேரில், பெல்காமிலிருந்த தேசியக் கல்வி நிறுவனமான கணேஷ் வித்யாலயத்தின் இயக்குநரானார். ஆனால் அங்கேயிருந்த சூழ்நிலையோ, முன்னேற்றத்திற்கு முற்றும் தடைக்கல்லாயிருந்தது. இதனால் அங்கே இருக்க முடியாமல், தந்தை விரும்பியபடியே சட்டம் பயிலலானார். 1908-இல் முதலாம் ஆண்டுத் தேர்விலும் வெற்றி பெற்றார். இதே ஆண்டில் அவரது அன்புக்குரிய அன்னை உலகை நீத்தார். இலண்டனில் கர்னல் வாயலி கொலையுண்டார்.

நாட்டின் அரசியல் நிலைமை இப்போது நன்றாகச் சூடுபிடித்திருந்தது. சூரத் காங்கிரசில் முக்கிய செயல் திட்டங்கள் வகுக்கப்பட்டன. இவற்றைச் சீர்ப்படுத்திச் செம்மையாக நடத்தும் பொருட்டுத் தேசிய எண்ணங்களைத் தாங்கி நாள்தோறும் வெளிவரும் பத்திரிகை தேவைப்பட்டது. இதனால் ''தைனிக் ராஷ்ட்ரமத்'' நாளிதழ் வெளிவரலாயிற்று. அதன் ஆசிரியர் குழுவில் காகா இடம் பெற்றார். இதே நாளில் ஆறு ஆண்டுகள் தண்டனை பெற்ற லோகமானிய திலகர் மாண்டலே ஜெயிலில் அடைக்கப்பட்டார். மகாராஷ்டிர மாநில அரசினர்க்கு இது பேரிடியாக அமைந்தது. இந்த நிலைமையச் சமாளிக்கும் பொறுப்பு இயல்பாகவே ''ராஷ்ட்ரமத்'' நாளிதழ்மீது விழுந்தது.

இந்தச் செய்தித்தாளின் குரல் எல்லாக் கிராமங்களையும் எட்டியிருந்தது. எப்படிப்பட்ட மனிதர்களெல்லாம் இங்கே பாடுபட்டு உழைத்தனர்! திரு கங்காதர ராவ் தேஷ்பாண்டேயின் தலைமையில் அந்த ஆசிரியர் குழுவின் உறுப்பினர் அனைவருமே நாளடைவில் மகாராஷ்டிரத்தில் பெயர் பெற்றுத் திகழ்ந்தனர்.

இங்கேதான் காகா சாஹப்பிற்கும் சுவாமி ஆனந்திற்கும் இடையே சந்திப்பு நிகழ்ந்தது. பிறவிதோறும் தொடரும் நட்புரிமையில் இருவரும் இணைந்தனர்.

''ராஷ்ட்ரமத்'' பத்திரிகையின் பரந்த கொள்கையே அதன் எமனாகவும் முடிந்தது. நாசிக் கலெக்டர் ஜாக்ஸனின் கொலைக்குக் காரணங்களாக அரசாங்கம் பல நிறுவனத்தவரையும் பெரும் புள்ளிகளையும் தேடியது. ஒரு நாள் அரச ஆணையொன்று பிறந்தது. ''ராஷ்டிரமத்'' பத்திரிகை நிறுத்தப்பட்டது.

மீண்டும் காகா சாஹப் திகைத்து நின்றார். ஆனால் உடனே அவர் விருப்பப்படி செயலாற்ற வாய்ப்புக் கிட்டியது. பரோடாவில் பாரிஸ்டர் கேசவ் ராவ் தேஷ்பாண்டே ஒரு பள்ளிக்கூடம் நிறுவினார். அந்த ''கங்காநாத் பாரதி வித்யாலய''த்திற்கு ஒரு செயலாளர் தேவைப்பட்டார். காகா அங்கே செல்ல ஒப்புக்கொண்டார். இதன் பின்னால் ஓர் இரகசியம் இருந்தது. மராத்திய வரலாறு குறித்துக் காகா மிக்க பெருமிதம் கொண்டிருந்தார். ஆனால் சிறந்த அறிவாளியாகிய அவர், மராத்தியினரால் குஜராத்தி மக்களுக்கு இழைக்கப்பட்ட தீங்குகளையும் கொடுமைகளையும்கூட அறிந்திருந்தார். அப்போது இமயம் முதல் குமரிவரை இணைந்த தேசிய ஒருமைப்பாட்டின் கற்பனை வடிவம் புலப்படலாயிற்று. மாநிலங்களுக்கு இடையே இருந்த வேற்றுமைகளை விலக்க வேண்டிய தருணம் இது. இதையெல்லாம் நினைத்து அவர் பரோடா செல்ல இசைந்தார். 1910-இல் அவரது தந்தை காலமாகிவிட்டார். குடும்பத்தில் ஈடுபாடு குறையலாயிற்று. கங்காநாத் வித்யாலயத்தில் மாதம் நாற்பது ரூபாய்க்கு அவர் வேலை செய்ய ஆரம்பித்தார். அப்போது பலரும் தனி மனிதர்களாக நில்லாமல் குடும்பம் போல் ஒன்று சேர்ந்து சேவையில் ஈடுபட்டிருந்தனர். காலத்தின் தேவை அது. வித்யாலயத்தை நிறுவிய தேஷ்பாண்டே காந்திஜியுடன் வசிக்கலானார். அவர் அரவிந்தரின் தோழரும் தொண்டருமாவார். இவர் ''சாஹப்'' என்று அழைக்கப்பட்டார். காகா சாஹப்பிற்கு இங்கேதான் ''காகா'' என்ற பட்டம் கிடைத்தது. பட்கே ''மாமா'' என்றும், ஹரிஹர சர்மா ''அண்ணா'' என்றும் பட்டம் பெற்றதும் இங்கேதான்.

இங்கே பணிபுரியும்போது அமெரிக்காவின் புகழ்பெற்ற நீக்ரோ தலைவர் டி. வாஷிங்டன் எழுதிய 'அப் ப்ரம் ஸ்லேவரி' (அடிமை நீக்கம்), ''மை லார்ஜர் எஜுகேஷன்'' (எனது உயர் கல்வி) ஆகிய இரண்டு நூல்கள் படிக்கக் கிடைத்தன. இதனால் தேசியக் கல்விக் கொள்கையைப்பற்றி அவரது கருத்துக்கள் விரிந்து பரந்து சென்றன. நாட்டுப்பற்றை யூட்டுதல், புரட்சிக்கு ஆயத்தப் படுத்துதல் மாத்திரமின்றி இந்தியப் பண்பாட்டின்

அடிப்படையில் புதுவாழ்வில் மதிப்பினை உணர்த்துவதும் தேசியக் கல்வியின் அடிப்படையாகும். எனினும் இது வெற்று ஏட்டுக் கல்வியாக இராமல், கலைநலம், கைவண்ணம், தொழில் கூறு களைக் கற்பிக்கும் திறனும் சேர்ந்ததாக அமைய வேண்டும்.

ஆனால் காகாவின் பணி இன்னும் முற்றுப் பெறவில்லை. அரசாங்கமும் அவருக்கு எதிர்மறையாக உதவ முடிவு செய்திருந் தது. கல்விக்கூடத்தின்மீது அவர்களது கோணல் பார்வை இறங்கத் தான் செய்தது. 1911-ஆம் ஆண்டு டெல்லி தர்பாரில் மஹாராஜா சரபோஜிராவ் கேக்வாட் சற்றே தம் சுய கௌரவத்தை வெளிப் படுத்தினார். ஐந்தாம் ஜார்ஜ் மன்னரை வணங்கியபோது அவர் முழுவதும் குனியவுமில்லை; திரும்பும்போது முதுகையும் காட்டி னார் என்று அரசு கோபத்திற்குள்ளானார். வித்யாலயத்தின் ஆட்சிக் குழுவில் பெரிய அதிகாரிகள் பலர் இருந்தனர். அவர் களில் முக்கியமானவர் தேஷ்பாண்டே. அவர் வேலையை விட்ட வுடன் அதிகாரிகள் நிறுவனத்தை மூடிவிட எண்ணினர்.

''தங்களது ஆதரவின்றியும் என்னால் இந்நிறுவனத்தை நடத்த முடியும். இதற்குத் தேவையான பணத்தைப் பொது மக்கள் தருவர். எனவே கங்காதர ராவ் வித்யாலயத்தை நாங்கள் மூடமாட்டோம்'' என்று காகா கூறினார்.

ஆனால் மக்களிடையே பரவிய பீதி காரணமாக, மாணவன் ஒருவன்கூடப் பள்ளிக்கு வரத் தயாராக இல்லை. காகாவின் ஆசை உடைந்தது. ''நான் தோற்றுப் போனேன். ஹிமாலயத் திற்குச் சென்று ஆத்ம பலம் தேட விரும்பினேன். இமயம் செல்ல எனக்குப் பெருத்த அவா இருந்தது. எப்படிப் போவது என்றுமட் டும் எண்ணமிட்டதில்லை. கடைசியில் நான் திட்டமிடாத வழி யில் இமயம் சேரும் பாதை என் முன் திறந்தது.''

''குடும்பத்தவர்களைக் கொண்டுவிட பெல்காம் சென்றேன். அங்கிருந்து எங்கே போகிறேன் என்று யாருக்கும் சொல்லாமல், காசி யாத்திரை போவதுபோல் கிளம்பினேன்.'' (ஹிமாலய் கி யாத்ரா, 3).

காகாவின் இமயப் பயணம் அவர் எதைக் கண்டோ ஓடி ஒளிய மேற்கொண்டதில்லை. இறைவனிடம் புதுநெறி தேடிச் சென்றதே யாகும். எனினும் அவரது குடும்பத்திற்கு மிகவும் தீங்கு விளைத்த தாகும். அவரது பெரிய மகன் டாக்டர் சதிஷ் காலேல்கர் குறிப் பிட்டபடி, அவரது அன்னை மிகவும் அழுதவாறிருந்ததும், வாரத் தில் ஐந்து நாள் உபவாசம் இருந்ததும், கணவர் திரும்பி வர வேண்டுமாய்ப் பிரார்த்தனை செய்ததும் நடந்தவையேயாகும்.

# எங்கெல்லாம் தேடுவதோ?

இமயப் பயணம் அந்த நாட்களில் இன்றுள்ளதுபோல் எளிதானதன்று. இதை இறுதிப் பயணமென்றே அன்று கருதி வந்தனர். எனவே இமயத்தை நோக்கிப் பயணம் புறப்படு முன்பு காகா சாஹப் தமது நண்பர் இராமதாஸுடன் த்ரிஸ்தலி, பிரயாகை, வாராணசி, கயை முதலிய இடங்களுக்குச் சென்றார். அங்கே பெற்றோருக்குச் சிரார்த்தம் செய்த பிறகு கல்கத்தாவிற்குப் புறப்பட்டார். அங்குப் பேலூர் மடத்திலுள்ள இராமகிருஷ்ணா மிஷனைச் சேர்ந்த பெரியாரைச் சந்தித்தார். பிறகு அயோத்தி வழியாக அல்மோடா வந்தார். இங்கிருந்து ஸ்வாமி ஆனந்தரும் கூட வருவதாக ஏற்பாடு. இந்த மூன்று பிரயாணிகளும் இமயத்தில் சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு மைல்கள் கால்நடையாகச் சென்றனர். இவர்கள் சாதாரணப் பயணிகளுமல்லார்; பண்டைய நாளையத் துறவிகளும் அல்லர். நாட்டைச் சுற்றிப் பார்த்தல், இயற்கையெழிலை அநுபவித்தல், மக்கள் சமூகத்தைப் புரிந்துகொள்ளுதல் போன்றவற்றிலும் இவர்களுக்குச் சிறப்பான நோக்கம் இருந்தது.

அவர்கள் என்னென்ன பார்த்தார்கள்—எப்படிப்பட்ட அனுபவங்கள் ஏற்பட்டன என்பவற்றையெல்லாம் காகா சாஹப் தமது ''இமயப் பயணம்'' என்ற நூலில் விளக்கியிருக்கிறார். இந்நூல் முதலில் குஜராத்தியில் எழுதப்பட்டது. அழகிய சொல்லோவியங்களின் சிறப்பிற்காக இந்நூல் குஜராத்தி இலக்கியத்தில் தனியிடம் பெற்றுள்ளது.

இது வெறும் பயணமாக நின்றுவிடவில்லை. ஒன்றிரண்டு இடங்களில் இவர்கள் தங்கித் தவமிருந்தது உண்டு. சுதந்திர பாரதத்தை உருவாக்க வேண்டுமென்ற உறுதிமொழியை நிறைவேற்ற விரும்பியதாகவும், இந்த எண்ணம் இமயச்சாரலில் தியானம் செய்தபோதுதான் தங்களுக்கு உதித்ததாகவும் காகா கூறுகிறார்.

1913-இல் இமயப்பயணம் நேபாளப் பயணத்துடன் முடிந்தது. கலாசார மறுமலர்ச்சியும் சுதந்திரமும் பற்றி எண்ணமிட்ட நேரம் இது. எனவே காகா சாஹப் இராமகிருஷ்ணா மிஷன் கொள்கைகளிலும் ஈடுபாடு கொண்டார். மிஷன் தலைவர் சுவாமி பிரம்மானந்தருடன் கலந்து விவாதித்தார். துறவு வேண்டி

அவரிடம் கேட்டபோது சுவாமிகள் இன்னும் மூன்றாண்டுகள் காத்திருக்குமாறு கூறினார்.

அந்த மூன்றாண்டுகள் முடிவதற்குள் காகாவின் சிந்தனைத் தடங்கள் மாறுபட்டு விட்டன. சுவாமி விவேகானந்தரிடம் மதிப்பிருந்தாலும், துறவறத்தின் தன்மைகளையும், துறவிகளின் கூட்டத்தையும் பார்த்தபின் அவரது ஆசை தளர்ந்து விட்டது. துறவு என்பது மனைவி மக்களுக்குச் செய்கின்ற துரோகமென்று அவருக்குத் தோன்றியது. இதை விடத் தேசியக் கல்விக் கொள்கை அவரது மனத்தில் தீவிரமடைந்து வந்தது. அவர் சாந்தி நிகேதனம் சென்றார். அங்கே அவர் மனம் ஊன்றலாயிற்று.

தேசியக் கல்வி மேம்பாட்டுத் திட்டம் என்ற குறிக்கோளுடன் அவர் பல கல்வி நிறுவனங்களைக் கண்டதோடு சிலவற்றில் சேர்ந்து பணியாற்றினார். ஹரித்வாரிலுள்ள ரிஷிகுலத்தில் ஆறு மாதங்கள் முக்கிய தலைமைப் பதவி வகித்தார். ஸ்வாமி 'ஸ்ரத்தநந்த'ரின் குரு குலத்தைப் பார்த்தபோது, பொது மக்கள் துணையினால் இத்துணை பெரிய நிறுவனம் நடைபெறுவதைக் கண்டு வியந்தார்.

இராஜா மஹேந்திர பிரதாப்பின் ''பிரேம் மஹாவித்யா'' லயத்தையும் அவர் பார்த்தார். ஆசார்ய கிருபளானி, சோயித்ராம் இத்வானி, நாராயணன் மல்கானி இவர்கள் மூவரும் ஓர் ஆசிரமம் நடத்தி வந்தனர். அதன் பெயர் ''சிந்து ப்ரம்ம சர்யாசிரமம்'' என்பது. காகா சாஹப் இங்கும் ஆறு மாதங்கள் இருந்தார். அங்கிருந்து மீண்டும் அவர் சாந்தி நிகேதனம் சென்றார். ''தத்தாத்ரேய பாபு'' என்ற பெயரில் அவர் ஆசிரியராக இருந்தார். அதன்பின் ஆசார்ய கிருபளானியுடனும், கிரிதாரி கிருபளானியுடனும் பர்மா யாத்திரை மேற்கொண்டார். யாருமறியாத ஒரு துறவி வேடத்தில் அவர் பண்டித மதன்மோகன் மாளவியாவிடமும் சென்று அவருடன் கருத்துப் பரிமாற்றம் செய்தார்.

சாந்தி நிகேதனத்தில் ஆசிரியராக இருந்தபோது தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்திருந்த ''காந்திஜி ஆசிரம மண்டலி''யினரை அவர் சந்திக்க நேர்ந்தது. பிறகு 1915-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் அவர் காந்திஜியையும் சந்தித்தார். அவரது ''இந்திய சுயராஜ்யம்'' என்ற நூலைப் படித்தார். வாழ்வின் முழுமையான விளக்கம் அந்நூலில் இருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவர் தேடியலைந்த இலட்சியத்தின் திறவுகோல் கிடைத்ததாக உணரலானார்.

1915-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் மூன்று பெரிய சக்திகள் காகாவைத் தம்பால் ஈர்த்தன. முதலாவதாக, இரவீந்திரநாத் தாகூர். நிரந்தரமாக காகா அவருடன் தங்கிப் பணிபுரிய வேண்டு மென விரும்பினார். இரவீந்தரரைப் பெரிய கவிஞர் என்று மட்டுமின்றிச் சிறந்த மேதை என்றும் காகா மதித்து வந்தார். எனவே, அவரது அழைப்பு எத்துணை விரும்பத்தக்கதாக இருக்கு மெனக் கற்பனை செய்துகொள்ளலாம். ஆனால் எதையோ தேடிக்கொண்டே இருப்பவரை ஏதாவது ஓர் இடத்தில் பிடித்து வைத்திருக்க முடியுமா? பிறகு காந்திஜி வந்தார். அவரும் அழைப்பு விடுத்தார். அவருடன் வெளிப்படையாகப் பேச்சுக் கள் நடந்தன. தேசியக் கல்விக்கும் விடுதலைக்கும் காந்திஜி ஒருவரே எதிர்காலத்தின் வழிகாட்டியென்றும் நம்பிக்கையொளி யென்றும் காகாவிற்குத் தோன்றியது. எனவே இரவீந்தரநாத் தாகூரிடம் இவ்வாறு சொன்னார்: ''உங்களிடம் என் உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்டேனென்று உங்களுக்குத் தெரியும். உங்கள் செயல்கள் எனக்குப் பிடித்துள்ளன. ஆனால் என் மனம் காந்திஜியின்பால் ஈர்க்கப்படுவதையும் நான் உணர் கிறேன். எங்கள் பரோடா இயக்கம் முறிந்தபோது, மன முடைந்து இமயப் பயணம் புறப்பட்டேன். அங்கேயே தங்க முடியாமல், சுயராஜ்ய வேட்கை என்னை மீண்டும் இங்கு இழுத்து வந்தது. உங்களைவிட விரைவாகக் காந்திஜி சுதந்திரம் பெற்றுத் தருவார் என்று கருதுவதால் அவரிடம் சென்றுவிடத் துடிக்கிறேன்.''

குருதேவர் மகிழ்ச்சியுடன் அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார். காந்திஜியே குருதேவரிடம் காகா சாஹபை அனுப்புமாறு கேட்டதாகவும், அவரைத் தாற்காலிகமாக ''கடனாக'' வேண்டுமானால் தருகிறேன் என்று தாகூர் சொன்னதாகவும் பின்னால் தெரிய வந்தது. பல்லாண்டு களுக்குப் பிறகு தாகூர் சாபர்மதி ஆசிரமம் சென்றபோது காந்திஜியிடம் வினவினார்: ''நான் 'கடனாக'க் கொடுத்த தத்தாத்ரேயரை எனக்குத் திருப்பித் தருவதாகத் தெரிய வில்லையே!''

இருவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

ஆனால் காந்திஜியுடனும் காகா இயல்பாகப் பழகினாரில்லை. மற்றொரு சக்தி அவரைத் தம்மிடம் கவர்ந்துகொண்டிருந்தது. கங்காதர வித்யாலயத்தினை நிறுவிய ஸ்ரீ கேசவ்ராவ் பாண்டே அந்த மூன்றாமவர். புரட்சிகரமான எண்ணங்களினாலும் கல்வி யிலே கொண்ட பேரவாவினாலும் இருவரும் சமமானவர்களா யிருந்தார்கள். இதைத் தவிர இமயப் பயணம் செல்வதற்கு முன்

அவர் பாண்டேயிடம் தேவி உபாசனை செய்யும் முறையைக் கற்றிருந்தார். இவ்வாறு அவர் காகாவின் ஆன்மிக குருவாகவும் விளங்கினார். எனவே சாந்தி நிகேதனத்திலிருந்து திரும்பி அவரைச் சந்திக்க பரோடாவின் அருகில் உள்ள சயாஜிபுரம் சென்றபோது, கிராம மக்களுக்குச் சேவை செய்யும் பொருட்டுத் தம்மிடமே அவரைச் தங்கச் செய்ய வேண்டுமென அவர் விரும்பினார்.

ஞானாசிரியனின் கோரிக்கையைக் காகா எவ்வாறு மீற முடியும்? எனவே, அவருடனேயே அவர் தங்கி விட்டார். மனைவியையும், மக்களையும் கூட அழைத்து வந்தார். அங்கே ஒரு பால்பண்ணை நடத்தத் திட்டமிட்டார். மாதாந்திர இதழ், ''ஆக்மோத்தார்'' (ஆன்ம உயர்வு) வெளியீட்டிலும் உதவி செய்தார். ஆனால் பல காரணங்களால் அவருக்கு வெற்றி கிடைக்க வில்லை. அவர் மீண்டும் பரோடா வந்தார். இடையில் ஒரு மாதம் ஆசிரமத்திலும் இருந்தார். ஆனால் நிரந்தரமாக அங்கே குடியேறும் முடிவுக்கு வர முடியவில்லை. ஆனால், அங்கிருந்தோ அடிக்கடி அழைப்பு வரலாயிற்று. கடைசியில் காந்திஜி தேஷ்பாண் டேக்குக் கடிதம் எழுதினார்: ''உங்களிடம் காகா இருக்கிறார். அவரைச் சிறப்பாக நீங்கள் பயன்படுத்திக் கொள்வதாகத் தோன்றவில்லை. இங்கே ஆசிரமத்தில் ஒரு பள்ளிக்கூடம் நடத்த வேண்டும்...'' இங்ஙனம் நீண்டு சென்றது அக்கடிதம்.

தேஷ்பாண்டே கூறினார்: ''இத்தனை பெரிய மகாத்மா கூப் பிடுகிறார்—ஆசிரமத்தில் தேசியக் கல்விக்கான நல்ல திட்டம் இருக் கிறது. கங்கா நாத்தில் நீங்கள் இந்தப் பணியில்தான் இருந்தீர்கள். பாபுவின் ஆசிரமத்தையும் கங்காநாத் நிறுவனமென்றே ஏற்றுக் கொள்ளுங்கள். அங்கே சென்று செயல்படுங்கள்.''

1917-ஆம் ஆண்டு ஏப்ரல் 10-ஆம் நாள்—சம்பாரன் போகும் வழியில் பரோடா இரயில் நிலையத்தில் காந்திஜியே ஆசிரமம் வருமாறு அழைத்தபோது காகா ஒப்புக் கொண்டார். ஞானாசிரிய னின் ஆசியோ முன்பே கிடைத்திருந்தது.

# வாழ்க்கைத் துணைவி

ஆசிரம வாழ்க்கையைப்பற்றி அறிவதற்கு முன்னால் காகா சாஹப்பின் குடும்ப வாழ்க்கையைப்பற்றித் தெரிந்துகொள்வது நல்லது. ஆண்கள் ஆதிக்கம் மிகுந்த நம் சமூகத்தில், ஆணின் முன்னேற்றப் போக்கிற்குப் பெண் தடைக்கல்லாகக் கருதப்படுவதுண்டு. அவள் உண்மையில் ஆணின் வாழ்க்கைத் துணையா, தோழியா என்பதையறிய யாரும் முயன்றதில்லை.

காகா சாஹப் மனைவியின் விஷயத்தில் இந்த வினா தீவிரமாக எழுகிறது. மனைவியையும் குழந்தைகளையும் விட்டுப் பிரிந்து காகா இமயப் பயணம் மேற்கொண்டார். வீடு திரும்ப வேண்டுமென்று தோன்றிய பிறகுதான் அவர் திரும்பி வந்தார். மீண்டும் குடும்பம் நடத்தியது உண்மையெனினும், அவர் திரும்பி வராமலே சென்றிருந்தால்...? இப்போது இந்தக் கேள்வியை விட்டுவிட்டு, அந்தக் காலநிலையை ஊன்றிப் பார்த்தாலும் தவறாகாது. காகா தமது திருமண வாழ்க்கையைப்பற்றித் தாமே சுவைபட எழுதியிருக்கிறார். அந்த நாள் நடைமுறைக்கெதிராக, விவாக சமயத்தில் அவருக்கு வயது சற்றுக் கூடுதலாயிருந்தது. அவருக்குப் பதினேழு வயது. அவர் மனைவி இன்னும் சிறியவள். ஒரே வீட்டில் இருந்தும்கூட கணவன்—மனைவி ஒருவரோடொருவர் பேசிக்கொண்டதில்லை. ஒளிந்து மறைந்து பேசக்கூட வாய்ப்பில்லாத நிலை.

ஆனால் காகா சாஹப் மனைவியுடன் எப்படியாவது பேச வேண்டுமென விரும்பினார். பெரியவர்களை மதித்து நடந்தபோதிலும், மனைவியுடன் ஏன் பேசக்கூடாதென்று அவருக்குப் புரியவில்லை. கடைசியாக ஒரு வழி கண்டுபிடித்தார். அவர் தம் தாய் தந்தையருக்குப் பலவிதமாகச் செய்துவந்த தொண்டுகளைத் திருமணமானபின் அவரது மனைவி செய்யலானார். இவை குறித்து அம்மாவுக்கும், சகோதரிகளுக்கும் முன்னாலேயே காகா மனைவியிடம் பேசுவார். ''அம்மா குளிக்க எல்லாம் தயாரா? தண்ணீர் வைத்தாயிற்றா? துணிமணி எடுத்து வைத்தாயிற்றா?'' வீட்டில் எல்லாரும் சிரிப்பார்கள். மனைவியோ நாணிக் கோணிக் கொள்வாள். அப்பா அம்மாவைப்பற்றிப் பேசுவதைத் தவிர மனைவியோடு நேராகப் பேசுவதேயில்லை. பெற்றோர்பால் இருந்த மரியாதையின் காரணமாக இந்த எல்லைவரைதான்

அவர் சென்றிருந்தார். ஒன்றிரண்டு தடவை இது கேலியாகப் பேசப்பட்டாலும் பின்னால் இயல்பாகிவிட்டது. மனைவியும் பேசாமல் தலையசைத்துவிட்டு "எல்லாம் சரியாக இருக்கிறது" என்று பதில் சொல்வாள் (சமன்வய கே சாதக், 143).

மனைவி ஏதோ வருத்தத்தில் ஆழ்ந்து இருப்பதாகவே அவர் எப்போதும் நினைத்தார். இதற்கு என்ன செய்வது? ஒரு வழி தென்பட்டது. சாப்பாட்டுக்குப் பிறகு ஓர் ஏலக்காய் சாப்பிடுவது அவரது வழக்கம். ஒரு நாள் இரண்டு ஏலக்காய் எடுத்துக்கொண்டு, ஒன்றைத் தாம் வைத்துக்கொண்டு, மற்றதைத் தோலுரித்து மனைவியின் கையில் கொடுத்தார். அதன் பிறகு அவள் மகிழ்ச்சியாகத் தெரியலானாள். ஒரு நாள் அவர் முற்றத்தில் உட்கார்ந்திருந்தார். அக்கம் பக்கம் யாரும் இல்லை. மனைவி அவரருகே வந்து மெதுவாக தைரியத்தை வரவழைத்துக்கொண்டு பேசினாள்: "அந்த ஏலக்காய்த் துகள் உங்கள் அன்பை எனக்கு உணர்த்தி விட்டது. இனிவாழ்வில் எத்தனை துன்பங்கள் வந்தாலும் நான் பொருட்படுத்தமாட்டேன்."

"அவளது இந்த வாக்கியம்—என்னுடன் முதல் முதலாகப் பேசியதை—என்னால் என்றும் மறக்க முடியவில்லை." ஆனால் இது மிக எளிய செய்தியன்று. மனைவியின் மாண்பினுக்கு இது ஓர் ஒளிமிக்க எடுத்துக்காட்டு. பின் வந்த நிகழ்ச்சிகள் இதை நிருபித்தன. காகா சாஹப் பல ஆண்டுகள் தமது வாழ்க்கை இலட்சியத்தைத் தேடியலைந்துகொண்டிருந்தார். "என்னென்ன முயற்சிகள்—எத்தனை சிறைவாசங்கள்—அப்போதெல்லாம் அவரது மனைவிபட்ட பாடுகள் எத்தனை?" காகா ஆசிரமத்தில் சேர்ந்தவுடன், அவரது மனைவி எங்களுக்கும் சின்னம்மாவாகி விட்டாள். பிறகு இதே பொருளில் "காகி" என்றுதான் அழைக்கப்பட்டார்.

ஆசிரம வாழ்க்கையில் "காகி"க்கு தனிப் பிடிப்பில்லாவிட்டாலும், காகா சாஹப்புடன் அவர் அங்கே இணைந்து வாழலானார். தம்முடைய சொந்த எண்ணங்களை அவர் ஒளிக்கவுமில்லை. காந்திஜி அவரது கருத்துக்களுக்கு மதிப்புக் கொடுத்தது குறிப்பிடத் தக்கது. ஏதாவது சொல்லவேண்டுமானால் காந்திஜியே அவரிடம் செல்வார்.

முதலாம் உலகப் பெரும்போர் நடந்துகொண்டிருந்தபோது, பிரிட்டிஷ் அரசாங்க உறவுகளை முற்றும் முறித்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் காந்திஜியின் மனத்தில் வலுப்பெற வில்லை. போரில் ஈடுபட்டிருந்த அவர்களுக்கு உதவி செய்வதை அவர் தவறாக நினைக்கவில்லை. வைஸ்ராயின் அழைப்பின்

பேரில் பிரிட்டிஷ் படைக்கு ஆட்கள் சேர்க்கவும் அவர் இசைந்திருந்தார். முதலில் இந்த வேலை ஆசிரமத்தில் தொடங்கியது. ஆசிரமவாசிகளை அழைத்து அவர் இவ்வாறு கூறினார்: ''படைக்கு ஆள் சேர்த்துத் தர நான் பொறுப்பேற்றிருக்கிறேன். இதற்கு யார் யார் தயார் என்றுகூறி முன் வரலாம்.''

பலவிதமான ஆலோசனைகளுக்குப் பிறகு இரண்டு பேர் மட்டுமே முன் வந்தனர். அவர்களில் ஒருவர் காகா சாஹப். இதைக் கேட்டு ''காகி'' சினந்து பொங்கியெழுந்தார். ''ஆங்கிலேயரின் பக்கம் போரிட காகா செல்வதை நான் எப்போதும் விரும்பமாட்டேன். அவர்களை எதிர்க்கும் போராட்டமானால் அது என்னவென்று எனக்குப் புரிகிறது; நான் தடை சொல்லவும் மாட்டேன். ஆனால் அவர்களோடு சேருவது என்பதை என்னால் நினைக்கவும் முடியாது.''

காந்திஜி, காகியிடம் பேசித் தெளிவுபடுத்த வந்தார். காகி சொன்னார்: ''நான் கோழையென்று எண்ணிவிடாதீர்கள். என் பெயர் லக்ஷ்மி. நான் ஜான்ஸி ராணியின் வரலாறு படித்தவள். கல்லூரி நாட்களில் என் கணவர் தேசிய இயக்கத்தில் சேர்ந்த பொழுது என்றாவது ஒரு நாள் அவர் பிடிபட்டால் தூக்கு மேடைக்குக்கூடப் போகலாம் என்று என் மனத்தைத் திடப் படுத்திக் கொண்டுள்ளேன். நாளையே ஆங்கிலேயரோடு போர் தொடுக்கிறேன் என்று நீங்கள் அறிவித்தால், 'காகா'வைப் போருக்கு நான் அனுப்புகிறேன். ஏன்? என்னுடைய இரண்டு பிள்ளைகளும் போருக்குப் போய் மடிந்தால்கூட நான் அழமாட்டேன். ஆங்கில அரசை வீழ்த்தவேண்டுமென்பதுதான் காகாவின் கொள்கை. அவர்கள் பக்கம் சேர்ந்து ஜெர்மானியரோடு போரிடக் காகாவை நீங்கள் அனுப்ப விரும்பினால், அதற்கு என்னுடைய அனுமதி எப்போதும் கிடைக்காது.''

பல காரணங்களால் இந்தத் திட்டம் மேலே செயலாக்கப்படவில்லை. காகியின் உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்ட இந் நிகழ்ச்சி ஒன்றே போதுமானது. பிறகு காந்திஜியே தமது பிழையை உணர்ந்து இந்த எண்ணத்தைக் கைவிட்டார். ''காகி''யும் இதனால் மிகவும் மகிழ்ந்தார்.

# ஆசிரம வாழ்க்கையிலிருந்து ஒரு காட்சி

**1917**-ஆம் ஆண்டு காகா சாஹப் ஆசிரமத்தில் சேர்ந்தார். அலைந்து திரியும் பயணி தங்குவதற்கு நிழல் கிடைத்தது. இங்கே நிலவிய வாழ்க்கை முறை வியப்பிற்குரியது. அவரவர் சுயமாக எல்லா வேலைகளையும் செய்துகொள்ளவேண்டும். காகா சாஹப் இங்கும் தம் சொந்தக் கருத்துக்களை எடுத்துச் சொல்லிப் புதிது புதிதாகத் திட்டங்களைச் செயல்படுத்தலானார். ஒரு நாள் கூட்டு வழிபாட்டிற்குப் பிறகு இவ்வாறு கூறினார்: ''இன்று முதல் பாத்திரம் தேய்க்கும் வேலைக்கு 'சுத்திகரிக்கும் குழு' ஒன்றை அமைப்போம். பாத்திரம் தேய்க்கும் வேலை நடக்கும் போது யாராவது மாற்றி மாற்றி ஏதாவது நூலில் தாங்கள் படித்ததற்கு விளக்கம் கேட்டுக்கொண்டேயிருப்பார்கள். ஏதாவது விவாதம் முற்றிப்போனால் எல்லோரும் கலந்துகொள்ளலாம். அந்த ஆவேசத்திலேயே பாத்திரங்களும் அதிதூய்மையாகிவிடும்!''

சாந்தி நிகேதனத்தில் இந்த முறை பின்பற்றப்பட்டு வெற்றி கிட்டியதைக் காகா அறிந்திருந்தார்.

''பிறகு கேட்பதற்கு என்ன இருக்கிறது? நரஹரி, கிஷோர் லால்,தேவதாஸ் எல்லோருமே விவாதத்தில் பங்குகொண்டார்கள். பாத்திரம் தேய்க்கும் முறை தங்களுடையது இல்லாவிட்டாலும் எல்லாருமே ஏதாவது பாத்திரத்தைக் கையிலெடுத்துக்கொண்டு உட்கார்ந்துவிடுவார்கள். பேசிக்கொண்டே சாம்பலையும், மண்ணையும் போட்டுத் தேய்க்க ஆரம்பிப்பார்கள். சர்ச்சைக்குரிய விஷயங்களுக்கு ஆசிரமத்தில் குறைச்சலுமில்லை. பாத்திரங்களும் வெகு விரைவாகச் சுத்தமாகிவிடும்'' (சமன்வய கேசாதக், 155).

காகா சாஹப் ஆசிரமத்தில் கல்விக்கூட வேலையைக் கவனிக்க வந்திருந்தார். அங்கே ஆசிரியர் குழுவில் கிஷோர்லால், நரஹரி, ஜகத்ராம் தவே, விநோபா, அப்பா சாஹப், பட்வர்த்தன், மதன் லால் போன்ற ஜாம்பவான்கள் இருந்தனர். காந்திஜியும் எப்பொழுதும் அங்கிருந்தார். காகாவிற்கு மனத்துக்குப் பிடித்த வேலையும் கிடைத்துவிட்டது. வட இந்தியாவில் அவர் அலைந்து திரிந்த காலத்திற்குப்பின் இங்கே வந்தபின் அவரிடம் ஒரு மாறுதல் தென்படலாயிற்று. சொந்தமாகச் சிந்தித்து முடிவு செய்து செயலாற்றும் திறனால் அவர் பல வகைகளிலும் புகழ்

பெறத் தொடங்கினார். காந்திஜியிடம் தம் மனத்தைப் பறிகொடுத்தார். எல்லோருக்கும் ''காகா'' அல்லது ''சிறிய தகப்பனா''ராக விளங்கிய அவர் காந்திஜிக்கு மட்டும் மாணவனாக இருந்தார். காந்திஜியின் பல சீடர்களுள், பத்தோடு பதினொன்று என்று இல்லாமல், சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்தார்.

காகாவிற்குப் பாரதத்தின் பண்டைய வரலாறு, கலாசாரம், பண்பாட்டுச் சிறப்பு ஆகியவற்றில் மிகவும் தனிப்பட்ட ஈடுபாடிருந்தது. மேலும், அரசியல், பொருளாதாரம், புவியியல் போன்றவற்றையும் அவர் விட்டுவிடவில்லை. அவரது மாணாக்கரிடையிலும் இந்தப் பாடங்களில் குன்றாத பேரார்வத்தை அவர் வளர்த்தார்.

மஹாராஷ்டிரம், வங்காளம், ஆரிய சமாஜம் வேரூன்றிய பிற பிரதேசங்கள்—இங்கெல்லாம் சுதேசி இயக்கம் முன்பே தோன்றிவிட்டது. ஆனால் காந்திஜி இதன் தூய நெறியைத் தெளிவுபடுத்தி ஒரு பெரிய கோட்பாட்டிற்காகச் சிறப்புறப் பயன்படுத்தினார். இதைப்பற்றி 1919-இல் காகா ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதன் ஆங்கில வடிவத்தைப் படித்த பிரான்சு நாட்டு அறிஞர் ரோமன் ரோலண்ட், ''குறுகிய நோக்கம்'' என்று குற்றஞ் சாட்டினார். இதனால் இருவரிடையே கடிதத் தொடர்பு ஏற்பட்டது. இறுதியில் ரோமன் ரோலண்ட் சுதேசிக் கொள்கையின் உட்கருத்தைப் புரிந்துகொண்டு தம்முடைய குற்றச்சாட்டைத் திரும்பப் பெற்றுக்கொண்டு, வருத்தமும் தெரிவித்தார். இதேபோலப் புகழ்பெற்ற சமூக விஞ்ஞானி ஸ்ரீ பாட்ரிக் கெடிஸுக்கும் இந்தக் கொள்கையில், ''குறுகிய மனப்பான்மை'' தென்பட்டது. ஆனால் காகா அதன் உட்பொருளை எடுத்துக்காட்டியபின் அவர் தம் எதிர்ப்பைக் கைவிட்டார்.

ஆசிரம வாழ்க்கை என்பது கர்மயோகிகளின் தவநெறி போன்றதாகும். காகா இங்கு ஒவ்வொன்றிலும் ஈடுபட்டு உழைத்தார். தொடக்கத்திலேயே காகாவின் ஆலோசனையின்பேரில், காந்திஜி ஒரு ஹரிஜன குடும்பத்திற்கு ஆசிரமத்தில் இடமளித்திருந்ததால், இந்தக் குடும்பத் தலைவன் தாதாபாயின் மனைவி தானிபஹன் சமையலறையில் உதவலானார். இதனால் ஒரு புயலே வீசியது. பல குடும்பங்கள் ஆசிரமத்தை விட்டு வெளியேறின. ஸ்ரீமதி கஸ்தூரிபா காந்தி உள்படப் பலர் தானிபஹன் கையால் சமைத்த உணவை ஏற்க மறுத்தனர்.

இந்த நேரத்தில்தான் காகா சாஹப் ஆசிரமத்தில் சேர்ந்ததற்காகக் காந்திஜி விருந்தளித்தார். இந்த விருந்திற்குக் காகாவுடன் அவரது மனைவியும், இரண்டு புதல்வர்களும் வந்தனர்.

காந்திஜி மிகவும் மகிழ்ச்சியுற்றார். குடும்பம் குடும்பமாகப் பலர் வெளியேறிக் கொண்டிருந்தனர். இங்கே இவரோ குடும்பத்துடன் தான் வருவேன் என்று சொல்கிறார். தீண்டாமை பற்றிய பிரச்சினையன்று இது. உழைத்துச் சாப்பிட அஞ்சிப் பலர் வெளியேறினர். ஆசிரமச் சூழ்நிலை தூய்மையானது. அதன் நியதிகளுக்கு உட்பட்டு வாழ முழுச் சுதந்திரம் இருந்தது. ஆனால் பலரது கருத்து வேறுபட்டு இருந்தது. அவர்களால் வேலை செய்ய முடியாது. பிறர் தமக்கு உதவி செய்தால் ஏற்றுப் பலனடைய முடியும். இந்த எண்ணம் இல்லாதார் சிலரே. இவர்களில் ஒருவர்தான் காகா சாஹப்.

ஒருமுறை ஒரு விருந்தினர் ஆசிரமத்திலிருந்து விடைபெற்றுச் சென்றுகொண்டிருந்தார். அவரிடம் ஒரு பெரிய இரும்புப் பெட்டி இருந்தது. குதிரை வண்டி கிடைக்கவில்லை. அவரால் அதைத் தூக்கிச் செல்லவும் முடியவில்லை. காந்திஜி காகாவிடம் சொன்னார்: ''இதை எடுத்துக்கொண்டு எல்லிஸ் பிரிட்ஜ்வரை போங்கள். அங்கே வண்டி கிடைக்கும்.''

காகா அந்தப் பெட்டியைத் தம் முதுகில் தூக்கிக்கொண்டு பாலம் வரை சென்றார். பெட்டியின் பாரத்தினால் இடுப்பருகே தோல் உரிந்ததோடு, சட்டையும் கிழிந்தது. வாசலின், ஐயோடின் மருந்துகள் போட்டதில் நான்கு நாட்களுக்குப்பின் இடுப்புப் புண் ஆறிவிட்டது. இதைப்பற்றிக் காந்திஜி எதுவும் கேட்கவுமில்லை, விவாதிக்கவுமில்லை.

இதைத் தவிர ஆசிரம வாழ்வில் பிற நிகழ்ச்சிகளும் உண்டு. காகாவின் கோரிக்கையொன்றைக் காந்திஜி ஏற்றுக்கொண்டார். ஆசிரமத்தில் நல்ல சாப்பாடு கிடைக்கும். ஆனால் பால், நெய் கிடையாது. காகா, காந்திஜியிடம் சொன்னார்: ''ஆசிரம விதிகள் எனக்கு மிகவும் பிடித்துள்ளன. ஆனால் எனக்குப் பால், நெய், வெண்ணெய் ஆகியவை சாப்பிடாமல் இருக்க மனம் இல்லை. அவற்றை இங்கே ஆசிரமத்துக்குள்ளே சாப்பிடவில்லை; அனுமதித்தால் வெளியே சென்று சாப்பிடுகிறேன்.'' காகா இவ்வாறு கேட்டபோது காந்திஜி அனுமதி அளித்தார்.

# குஜராத் வித்யாபீடம்—உயிர்நாடி

குஜராத் வித்யாபீடத்திற்குத் தாம் செய்த சேவையே தமது வாழ்வின் மிகச் சிறந்த பணியெனக் காகா சாஹப நினைத்தார். அந்தக் காலத்தில் பலர் ஆங்கில அரசுக்கு எதிராக இல்லாவிடினும், அவர்களது கல்வி முறையில் அதிருப்தியடைந்திருந்தனர். நாட்டின் பாரம்பரியத்தையும், பண்பாட்டையும் சார்ந்த ஒரு தேசியக் கல்வி நிறுவனத்தின் தேவையை அனைவரும் மிகத் தீவிரமாக உணரலாயினர்.

பல சமூக—சமய நிறுவனங்கள் தத்தம் பல்கலைக் கழகங்களை நிறுவலாயின. ஆரிய சமாஜத்தின் குரு குலம், டி ஏ.வி- கல்லூரிகள், ஹிந்து பல்கலைக் கழகம், அலிகார் முஸ்லிம் பல்கலைக் கழகம்—என்று பலவும் ஆளும் வர்க்கத்தின் ஆதிக்கத்திற்குப் புறம்பே நின்று நமது கலாசாரச் சிறப்பில் ஈடுபாட்டை வளர்த்தன.

அந்நியர் ஆட்சியிலிருந்து விடுதலை வேண்டும் என்ற வேட்கை பெருகி வந்த அந்த நாட்களில் இந்த மாற்றங்கள் நிகழலாயின. லோகமானிய திலகரின் முயற்சியால் பம்பாய்க்கும், புணேயிக்கும் இடையேயுள்ள தலேகாமில் "சமர்த்த வித்யாலயம்" நிறுவப்பட்டது. வங்கத் தலைவர்களான விபின் சந்திரபாலும், அரவிந்த கோஷும் ஒன்றுபட்டு வங்காள தேசியக் கல்வி நிறுவனத்தை ஏற்படுத்தினர். காகா சாஹப்பின் பொது வாழ்வும் ஒரு தேசியக் கல்விக்கூடம் நிறுவுவதில்தான் தொடங்கியது. இமயப் பயணம்—அதன் பின் பல்வேறு கல்விக்கூடங்களின் நிர்வாகம் அல்லது தொடர்பு—இவை இவரது உள்ளத்துத் தாகத்தை மேன்மேலும் வளர்த்தன.

ஆசிரமத்திலும் அவர் கல்வித்துறையில் பணியாற்றினார், அங்கே வந்து இரண்டாண்டுகளில் தேசத்தில் சுதந்திர சங்கநாதம் முழங்கலாயிற்று. காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கம் அவருக்குப் பிடித்தது. இதன்படி 1920-இல் குஜராத்தில் ஒரு தனியார் பல்கலைக் கழகம் நிறுவும் பணி தொடங்கியது.

குஜராத் இராஜ்ய பரிஷத்தின் நான்காவது ஆண்டு விழா ஸ்ரீ அப்பாஸ் தையப்ஜி தலைமையில் அஹமதாபாத்தில் 1920-ஆம் ஆண்டு நடந்தது. அப்போதுதான் காந்திஜியின் ஒத்துழையாமைக்

கொள்கையைப் பின்பற்றுவதென்ற தீர்மானம் நிறைவேறியது. அந்தத் திட்டத்தில் அரசாங்கப் பள்ளிகளையும், கல்லூரிகளையும் புறக்கணித்தல் என்பது ஒரு பகுதியாகும். ஆனால் இந்த நடவடிக்கை வெற்றியடையவேண்டுமானால், மாணவருக்கு வேறு ஒரு மாற்று ஏற்பாடு வேண்டும். இந்தச் சிந்தனைகளின் விளை வாக தேசியக் கல்வி நிறுவனத்தின் தேவை உறுதியாயிற்று. இதைக் குஜராத்தில் தொடங்க முடிவாயிற்று. இதற்கு 12 உறுப்பினர் கொண்ட ஒரு தேசியக் கல்விக் குழு நியமிக்கப் பட்டது. இதில் மூவர் ஆசிரமத்திலிருந்து சேர்த்துக்கொள்ளப் பட்டனர்.

முதலில் இந்தத் திட்டத்தில் சில கருத்து வேறுபாடுகள் இருந்தன. அடிமட்டத்திலிருந்து வேலை தொடங்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டபோது, அனைவரும் ஒப்புக்கொள்ள, வேலையில் வெற்றிபெற முனைப்பு ஏற்பட்டது. கிஷோர்லாலும் காகாவும் குஜராத் முழுவதும் பயணம் செய்தனர். வித்யா பீடத்தின் தோற்றுவாய்க்கு மூல காரணம் என்னவென்பதையும் நாம் எப்படிப்பட்ட விதிகளுக்குக் கட்டுப்பட வேண்டும், எத்தகைய குழப்பங்களிலிருந்து தெளிவுபெறவேண்டும் என்பதை யெல்லாம் மக்களுக்கு எடுத்துரைத்தனர். ''நவஜீவன்'', ''யங் இந்தியா'' பத்திரிகைகளில் காகாவின் கட்டுரைகள் வெளி வந்தன.

தேசத்தின் நிகழ்காலச் சிந்தனைகளிலிருந்து வளர்ந்து முன்னேறி, வளமான வருங்காலத்தை எதிர்நோக்கும் திட்டங்கள் தீட்டிச் செயல்படாவிடில் மக்களுக்கு விடிவில்லை என்பதையும் திடமாகக் கூறினர்.

1920-ஆம் ஆண்டு நவம்பர் 12 திங்கட்கிழமை காந்திஜி குஜராத் பல்கலைக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். அது செம்மையாகவும், சீராகவும் செயல்பட ஆசிரமத்திலிருந்து காகா காலேல்கர், பட்வர்தன், விநோபா, நரஹரிபாய் ஆகிய பெரியோர் அவ்வப்பொழுது ஈடுபட்டு உழைத்தனர். இது இவர்கள் தோற்று வித்த முதல் பல்கலைக் கழகமாகும். எனவே ஆங்கிலப் பள்ளிக் கூடங்களை விட்டு வெளியேறிய அனைத்து மாணவர்களும் இங்கே வந்து சேரலாயினர். மகிழ்ச்சியும் ஊக்கமும் நாளாக நாளாக மேம்படலாயின. உண்மையான தேசபக்தியும், தியாக சிந்தனையும் வளர்கின்ற சூழலில் ஆசிரியரும், மாணவரும் இணைந்து குறுகிய நோக்கங்களைக் களைந்து முன்னேறலாயினர்.

பொருளாதாரப் பாடத்தோடு, காகா சாஹப் ஆங்கிலம், பண்டைய வரலாறு, தர்க்க சாஸ்திரம் முதலியவற்றையும்

பயில்விக்கலானார். ஆரம்பத்தில் வங்காளி மொழி வகுப்புகள்கூட நடத்தினார். கூட்டு வழிபாட்டிற்குப் பிறகு அவர் நிகழ்த்திய உரைகள் மாணவருக்கு மிகவும் பிடித்திருந்தன. அவர் அதிகம் பேசாவிடினும், அவரது சிற்றுரைகளிலேயே அவரது உள்ளத்தில் நெருடிய வேதனைகளும் அநுபவங்களும் நன்கு வெளிப் படலாயின.

பயிற்சி மொழி எதுவாக இருக்க வேண்டுமென்றும் விவாதிக் கப்பட்டது. நாடு முழுமைக்கும் பொதுவான ஒன்றாகக் குஜராத் பல்கலைக் கழகம் அமைந்ததால், காந்திஜி ஹிந்தி மொழி பயிற்சி மொழியாக இருக்க வேண்டுமென விரும்பினார்.

ஆனால் காகா இதை எதிர்த்தார். நாடு தழுவிய கல்வி முயற்சியில் ஈடுபட்டாலும் குஜராத் பல்கலைக் கழகம் முதலில் குஜராத் மாநிலத்தையே சாரும். எனவே, எல்லா நிலைகளிலும் குஜராத்தி மொழியே பயிற்சி மொழியாக இருக்கவேண்டும்; தேசிய மொழி ஹிந்தி என்ற காரணத்தினால் இரண்டாவது இடத்தில் அது மிகச் சிறப்பான முறையில் பயில்விக்கப்படும் என்றார் அவர். ஹிந்தியைப் பலர் ஆதரித்தாலும் காகா தம் கொள்கையினின்று மாறவில்லை. அவர் ஹிந்திக்கு எதிரியில்லை. அவரது தாய் மொழி மராத்தியாயினும், குஜராத்தில் குஜராத்தி மொழியில் அன்றிப் பல்கலைக் கழகம் செயல்படாது என்பதை அறிந்திருந் தார். இந்த உண்மையைப் புரிந்துகொண்ட காந்திஜி, ''காகாவின் விருப்பம் முறையானதே'' என்று ஒப்புக்கொண்டார்.

பல்கலைக் கழகத்தில் ஆங்கிலமும் கற்பிக்கப்படும்—இதுவும் காகாவின் யோசனைதான். அவரது கூற்றுப்படி ராம்ஜஸ் கல்லூரியின் ஓய்வுபெற்ற பேராசிரியர் ஸ்ரீ அஸூத்மல் கித்வானியை இந்தப் பதவிக்கு நியமித்தார். ஆனால் இவர்களால்தான் பின்னால் குழப்பம் விளைந்தது. அன்றாடப் போராட்டங்களால் தளர்ந்துபோன அவர் பல்கலைக் கழகத்திலிருந்து வெளியேற விரும்பினார். அவர் காந்திஜியிடம் கூறினார்: ''ஆசிரமப் பள்ளியே எனது முக்கியப் பணிமனையாகும். குஜராத் மக்களுக் காக இந்தப் பல்கலைக் கழகப் பணிகளில் துணை செய்தேன். இப்போது நான் இல்லாமலேயே இந்தப் பணிகள் நடந்தேறுமாத லால் எனக்கு ஆசிரமம் திரும்பிச் செல்ல அனுமதி வேண்டும்.'' (சமன்வய கே சாதக், 185).

காந்திஜி ஒப்புக்கொண்டார்.

வித்யாபீடத்தை விட்டு விலகிய பின்னும், அவர் அதன் மாணாக்கருடன் தொடர்புகொண்டிருந்தார். பல கூட்டங் களிலும், குழுக்களிலும் அங்கம் வகித்தார். பல ஆசிரியர்கள் அவரைத் தேடி வந்ததுண்டு. பல குஜராத்தி மாணவர்களின்

ஆலோசகராக விளங்கினார். அவர்களுடன் நிரந்தரக் கடிதப் போக்குவரத்தும் இருந்தது. அவரது படைப்புகள் பல மக்களுக்கு எழுச்சியூட்டின. மராத்தி மொழிக்காரர் ஒருவர் குஜராத்தி மக்களுடன் ஒன்றுபட்டது எத்தனை வியப்புக்குரியது!

கித்வானி அவர்களும் பல்கலைக் கழகத்தில் வெகுநாள் நீடிக்க முடியவில்லை. சர்தார் வல்லபாய் பட்டேல் அவருடன் கருத்தொற்றுமை கொள்ளாத காரணத்தால் காகா சாஹப்பிடம் கிருபளானியை அனுப்புமாறு கூறினார். காகாவின் நெருங்கிய தோழரான கிருபளானி உடனே ஒப்புக்கொண்டார். கித்வானிக்கு அவரோடும் ஒத்துப்போக இயலாததால் சில நாட்களுக்குப் பின் வித்யாபீடத்தைவிட்டே சென்றுவிட்டார். இப்போது கிருபளானி மீண்டும் காகா சாஹப்பை வித்யாபீடத்திற்கு வருமாறு அழைத்தார். ஆனால் இதற்குள் காகா சாஹப்பிற்குக் காச நோய் ஏற்பட்டிருந்தது.

# நவஜீவன் ஆசிரியர்—குஜராத்தி எழுத்தாளர்

**1922**-ஆம் ஆண்டில் காந்திஜிக்கு ஆறாண்டு சிறைவாசம் விதிக்கப்பட்டது. அப்போது ''நவஜீவன்'' பத்திரிகைக்கு ஸ்வாமி ஆனந்த் ஆசிரியரானார். சில நாட்களுக்குப் பிறகு அவரும் சிறையிலடைக்கப்பட்டார். இதன்பின் ''நவஜீவனை'' நடத்தும் பொறுப்பு காகா சாஹபின்மீது விழுந்தது. அவரது பெயர் முதலில் 1922 ஜூன் 4ஆம் தேதி இதழில் ஒரு கட்டுரையின்கீழ் பிரசுரமாகியிருந்தது. பிறகு 1923 வரை ''நவஜீவ''னில் அவரது கட்டுரைகள் வெளிவந்தவண்ணம் இருந்தன. கடைசியில் அவரும் இராஜத் துரோகக் குற்றத்திற்காக ஓராண்டு சிறையிலடைக்கப் பட்டார். குற்றத்தை ஒப்புக்கொண்டு அவர் கூறிய வார்த்தைகள் அவர் காந்திஜியின் மாணவர் என்பதற்குச் சான்று பகன்றன.

''காந்திஜி சிறையிலிருப்பதால் நான் 'நவஜீவன்' பத்திரிகை ஆசிரியரானேன். என்னுடைய கட்டுரைகளில் இராஜத் துரோகம் இருப்பதாக அரசாங்க வக்கீல் மிகவும் கஷ்டப்பட்டு நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை. இன்றைய அரசின்மீது அதிருப்தியை மக்களிடையே தோற்றுவிப்பதை நாங்கள் எங்கள் கடமையாகவே கருதுகிறோம். இதை நாங்கள் அஹிம்சா முறையில்தான் செய்து வருகிறோம். எனவே குற்றத்தை நான் ஒப்புக்கொள்வதோடு தண்டனையும் பெறச் சித்தமாயுள்ளேன்.''

காகா சாஹப் ''நவஜீவ''னுடன் எவ்வாறு இணைந்தார்? எவ்வாறு குஜராத்தி எழுத்தாளரானார் என்பதே ஒரு விந்தையான கதை. ''நவஜீவன்'' எப்பொழுது தோன்றியது? ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பியவுடன் காந்திஜி ''யங் இண்டியா'' என்ற ஆங்கிலப் பத்திரிகை தொடங்கியிருந்தார். இதைப்பற்றி அவருக்கு இருவகைக் கருத்துக்கள் இருந்தன. ஒன்று, ஏதாவது பழைய பத்திரிகையை எடுத்துக்கொண்டு நடத்துவது. இதனால் புதிதாக வாசகர்களைத் தேடியலைய வேண்டாம். இரண்டாவது, விளம்பரங்களால் வரும் வருமானத்தில் பத்திரிகை நடத்தாமல் இருப்பது. காகாவிற்கு இரண்டாவது கருத்து உடன்பாடாயிருந்தது. அவர் ஆலோசகர்களிடையே பேசும்போது சொன்னார்—''சமயம், நீதி, நன்னடத்தை, பண்பாடு, கலை

நயம்—முதலியவற்றைப் பேணுவதற்காக ஒரு கோயில் கட்டப் பட்டது. இவையெல்லாம் அங்கே வெகு சிறப்பாக நடந்து வந்தன. இதற்கான செலவுக்குப் பணம் வேண்டி அக்கம்பக்கத்தில் கடைகள் திறக்கப்பட்டன. அங்கே தேவையற்ற நூல்கள் விற்கப் பட்டுத் தீய நெறிகள் பரவலாயின. விளம்பரத்தில் கிடைக்கும் வருவாயில் பத்திரிகை நடத்துவதும் இதேபோலத்தான்.''

சில சமயங்களில் இத்துணை பிடிவாதமாக இருக்கவேண்டி யிருக்கிறது. உண்மை நெறியில் செல்பவர்கள் இதைத் தவிர்க்க முடியாது.

இதன்பின் குஜராத்தி பத்திரிகை நடத்தும் கேள்வி எழுந்தது. ஆங்கில அரசுக்கும், அதிகாரிகட்கும் நமது கருத்துக்களைத் தெரிவிக்க ஆங்கிலப் பத்திரிகை தேவைதான். ஆனால் ஆங்கிலம் தெரியாத தொண்ணூறு விழுக்காடு மக்களது சமுதாயத்தைப் புறக்கணிப்பது மிகவும் நியாயமற்றது. இதனால் காந்திஜி ஒரு குஜராத்தி வார இதழ் வெளியிட முடிவு செய்தார். ஏதாவது பழைய பத்திரிகை கிடைத்தால் நல்லதுதான். ''நவஜீவனும் சத்யமும்'' என்ற ஒரு மாத இதழ் முன்பொரு சமயம் வெளி வந்துகொண்டிருந்தது. அதன் உரிமையாளர் அதைக் காந்திஜி யிடம் ஒப்படைத்தார்.

காந்திஜி ''நவஜீவன்'' என்று அதற்குப் பெயரிட்டு வார இதழாக்கினார். ஸ்ரீ சங்கர்லால் பேங்கர் ஒரு அச்சகத்தை வாங்கினார். இங்கேயே இரண்டு வாரப் பத்திரிகைகளும் அச்சாக லாயின. ஸ்வாமி ஆனந்த் இந்த வேலையைக் கவனித்து வந்தார். அவர் காகாவின் பழைய நண்பர். காகாவின் ஆலோசனையின்பேரில்தான் காந்திஜி இந்த வேலையைச் சுவாமிஜியிடம் ஒப்படைத்தார்.

தேவை ஏற்படும்போதெல்லாம், சுவாமி ஆனந்த் தம் நண்பர் காகாவைத் தேடி வருவார். காந்திஜியின் கருத்துக்களை யும், கொள்கைகளையும் காகா அறிந்திருந்தாலும், மொழிச் சிக்கல் இருந்து வந்தது. காகாஜி தமக்குத் தெரிந்த குஜராத்தியில் சொல்லச் சொல்ல, ஸ்வாமிஜி நல்ல சொற்களில் அமைத்து விடுவார். எனவே கட்டுரையின் கருத்துக்கள் காகாவுடையவை— மொழியோ ஸ்வாமி ஆனந்துடையது. மெள்ள மெள்ள காகா குஜராத்தி மொழியில் எழுதுவதிலும் தேர்ச்சி பெற்றார். இவ்வாறு அவரைக் குஜராத்தி எழுத்தாளராக்கிய பெருமை ஸ்வாமி ஆனந்தைச் சாரும்.

1917-ஆம் ஆண்டு முதல் காகாவின் குஜராத்தி படைப்புகள் வெளிவரலாயின. 1920-ஆம் ஆண்டு அவரது முழுமையான குஜராத்தி நூல் வெளியாயிற்று. அந்த ஆண்டில் குஜராத்தி இலக்கிய வட்டத்தின் ஆண்டு விழா அஹமதாபாத்தில் நடந்தது. அதற்கு அறிஞர் இரவீந்திரநாத் தாகூர் சிறப்பு விருந்தினராக வந்திருந்தார். அப்போது அவரைப்பற்றிக் காகா நீண்ட கட்டுரை யொன்று எழுதினார். ''இதுவே நான் முதலில் எழுதிய குஜராத்திக் கட்டுரையாகும். முன்பெல்லாம் மராத்தியில் முதலில் எழுதிவிட்டு, ஆசிரமவாசிகள் உதவியால் குஜராத்தியில் மொழி பெயர்ப்பேன்'' என்கிறார் காகா. (சமன்வய கே சாதக், 154).

ஆசிரம மாணவர்களுக்குக் காகா தமது இமயப் பயணம் குறித்துக் கூறுவதுண்டு. இவை ஆசிரமத்தின் கையெழுத்துப் பத்திரிகையில் வெளிவந்து கொண்டிருந்தன. பிறகு அவையே, ''ஹிமாலயனோரவாஸ்'' என்ற பெயரில் குஜராத்தி நூலாக வெளிவந்தன. இதன் மூலம் அவர் ஒரு சிறந்த குஜராத்தி எழுத் தாளராக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

நவஜீவன் பத்திரிகையில் வெளியான அவரது கட்டுரைகளை விமர்சிக்கும் வகையில் அவரது வரலாற்றை எழுதிய ஸ்ரீ பாண்டு ரங்க தேஷ்பாண்டே எழுதுகிறார்: ''சமயக் கருத்துக்கள், பெரியோரது பிறந்த நாட்கள், அரசியல் விஷயங்கள், சமூக நிலவரங்கள்—இவற்றைப்பற்றித் தற்கால நிலைமையை ஆராய்ந்து அவர் எழுதிய கட்டுரைகள் இலக்கிய நயமும், சிறப்பும் மிகுந்திருந்தன. அவரது படைப்புக்களின் அடித்தளம் போல் விளங்கிய இந்தக் கட்டுரைகள் 'காலேல்கர் கட்டுரைகள்' என்ற பெயரில் 800 பக்கங்களுள்ள ஒரு பெரிய நூலாகத் தொகுக்கப் பட்டுள்ளது. விடுதலை வேட்கையும் நாட்டுப்பற்றும் கொண்ட காலேல்கரைக் குஜராத் மக்கள் இனங் கண்டுகொள்ள இவையே பெரிதும் உதவின. குஜராத்தின் அனைத்து மக்களும் அவரை மறந்தாரில்லை.'' (சமன்வய கே சாதக், 154).

இம்முறை சிறை சென்றபோது அவர் ''ஓதராதி திவாலோ'' (வடக்குச் சுவர்) என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதினார். இந்தச் சின்னஞ் சிறு நூல் அவரது இயற்கை ஈடுபாட்டிற்கு ஒரு விளக்கம் தருகிறது. இதில்தான் அவர் ''தேவபந்தி''ன் புகழ் பெற்ற மௌலானா ஹுசேன் மஹமத் மதனியுடன் ஏற்பட்ட இனிய அறிமுகத்தைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இருவரும் சாபர்மதி சிறையில் இருந்தனர். தொழுகை வேளையைக் குறிப்பிடுவதற்காக மௌலானா அழைப்புக் குரல்

கொடுப்பார். அதிகாரிகள் இதைத் தடுத்தபோது அவர் சத்யாக்கிரஹம் செய்யவும், உண்ணாவிரதம் இருக்கவும் முடிவு செய்தார். காகா அவருக்குத் துணை நின்றார். இதற்குத் தண்டனையாக இருவரும் தனித்தனி அறைகளில் அடைக்கப் பட்டனர். காகா ஏதாவதொரு சமய நூலைத் தம்முடன் உடன் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டார். குரானின் மராத்தியப் பதிப்பைத் தேர்ந்தெடுத்த அவர் தினமும் அதைப் படித்து அதன் ஆழ்ந்த கருத்துக்களை மௌலானாவிடம் கேட்டறிந்தார். சிறந்த மதப் பெரியார்களிடமிருந்து பலவும் கற்று, காகா கல்விக்கு வயதேயில்லை என்பதை நிரூபித்தார்.

# சுதந்திரப் போராட்ட வீரரும் காசநோயும்

1924-ஆம் ஆண்டு காகா சாஹப் சிறையில் இருந்து விடுதலையானபோது, குஜராத்தின் அரசியல் தலைவர்கள் அவரைப் பாராட்ட முடிவு செய்தனர். மே 13-ஆம் தேதி நடை பெற்ற அரசியல் கூட்டத்திற்கு அவரைத் தலைவராக்கினர். காந்திஜியின் அனுமதியோடு காகா இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஆனால் மூன்று நாள் கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய பின்னரும், அவர் அரசியலில் அதிகம் அக்கறை காட்டாமல் இருந்தார்.

அதே ஆண்டில் இந்தியக் காங்கிரஸ் கூட்டம் பெல்காமில் நடந்தது. காந்திஜி அதன் தலைவரானார். வரவேற்புக் குழுத் தலைவரானார் ஸ்ரீ கங்காதர் ராவ் தேஷ்பாண்டே. காகாவின் பணிகள் ஒரு மாத காலம் தமக்குத் தேவை என்று அவர் காந்திஜி யிடம் கேட்டுப் பெற்றார். அவரது ஆலோசனைப்படி, காகாவிடம் துப்புரவுத் துறைப் பொறுப்பை ஒப்படைத்தார்.

இங்கும் காகா வாளாவிருந்தாரில்லை. அவரது சுய சிந்தனை கட்கு இங்கே ஒரு வெளிப்பாடு. அவர் தமக்கு 150 பிராமணத் தொண்டர்கள் வேண்டுமென்றார். அவர்களை விளித்துக் கூறினார்: ''நான் காந்திஜி ஆசிரமத்தைச் சேர்ந்தவன்தான். ஆனால் என் சுய ஜாதி கௌரவம் எப்படிப் போகும்? நான் பிராமணன். எனவே காங்கிரஸுக்குக் கக்கூஸ்கள் கட்டுதல்— அவற்றைச் சுத்தமாக வைத்தல் முதலியவற்றிற்கு எனக்குப் பிரா மணர்களே தேவை. பிராமணக் குழந்தைகள் கக்கூஸ் சுத்திகரிப் புப் பணிக்குத் தயார் என்று முன்வந்தால், பிராமணர் சமுதாயமே மிகுந்த பெருமிதமடையக்கூடும். (சமன்வய கே சாதக், 174).

அவரது ஜாதி நியாயங்களைக் கேட்டு அனைவரும் சிரித்தனர்.

எல்லாருமே இந்தப் புண்ணிய காரியம் செய்ய விரும்பினர். அவர்கள் கேட்டுக்கொண்டதன்பேரில் 25 விழுக்காடு பிற ஜாதி யரை அவர் சேர்த்துக்கொண்டார்.

அவரது இந்தச் செயல் வெகுவாகப் புகழப்பட்டதென்று அவரே எழுதுகிறார். எதிர்த் தரப்பினர் இந்தச் செயலைக் குறிப் பிட்டு ''சுய விளம்பரம்'' என்றனர். காகா அத்துணை அடக்க மானவரல்லர் என்பது அவர்கள் கருத்து:

வேலைகள் அதிகரிக்க அதிகரிக்க காகாவின் உடல் நலம் குன்றத் தொடங்கியது. அவரது மனைவியும் நோய்வாய்ப் பட்டார். பதினோரு மாதங்கள் வரை அவர் கணவரது பிரிவைத் தாங்கிக்கொண்டார். காகா சாஹப்பும் சிறையில் நோய்வாய்ப் பட்டார். உண்மையில், அவரது இளம் வயதிலேயே பெல்காமில் மருத்துவர் அவரை எச்சரித்திருந்தனர். ''உங்கள் பாட்டனார் வம்சத்தில் காசநோய் இருந்திருக்கிறது. எனவே உங்கள் உடம் பைப் பார்த்துக்கொள்ளுங்கள். குறைந்தது முட்டையாவது சாப்பிடுங்கள்.''

காகா அவரது ஆலோசனைக்குச் செவிசாய்க்கவில்லை. எனவே இப்போது மருத்துவர்கள் காசநோய் இருப்பதாகக் கூறிய தறிந்து அவர் வியப்படையவில்லை. ஸ்வாமி ஆனந்த் இப்போது அவரைக் கவனிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அவர் எங்கிருந்து பணம் புரட்டினாரோ தெரியாது. எங்கெங்கோ அழைத்துச் சென்றார். நர்மதைக் கரை, சமுத்திரக்கரையிலுள்ள வார்டி, புணேயிக்கு அருகிலுள்ள சிஞ்சவர்ட், சிம்மகட் போன்ற இடங்களுக்கெல்லாம் அவரை அழைத்துச் சென்றார். ஸ்யாமள் பாயி, கங்காபா, ஸ்வாமி ஆனந்த் ஆகியோர் தொண்டு செய் தனர். காந்திஜியின் கடிதங்களும் வரும். ''இதற்கெல்லாம் எனக்குத் தகுதியிருக்கிறதா?'' என்று காகாவின் மனத்தில் கேள்வியெழும்.

நாளடைவில் காகாவின் உடல்நலம் மேம்பட்டாலும், நோயி லிருந்து முற்றிலும் விடுபட முடியவில்லை. அஹமதாபாத் ஆசிரமத் திற்கு ஸ்வாமி ஆனந்த் அவரை அழைத்துச் சென்றார். டாக்டர் தல்லல்கர் ஊசிபோட வேண்டுமென்றார். காகா ஒத்துக் கொண்டார். 21 ஊசிகட்குப் பிறகு நோய் தணிந்தது. இந்த நேரத்தில் அவரது மனைவியும், மகன் சதீஷும் கூடவே இருந் தனர். 1927-ஆம் ஆண்டு இறுதியில் இது நடந்தது.

பிறகு இயற்கை வைத்தியமும் செய்துகொண்டார். இதனால் தமது ஆரோக்கியத்தை எப்படிப் பேணவேண்டு மென்று அறிந்துகொண்டார். இன்ப துன்பங்களினின்று விலகி யிருக்கக் கற்றுக்கொண்டார். அப்போது முதல் ''மனிதன் கல்லைப்போல் இருக்கக்கூடாது—சிந்தனை செய்யவேண்டும்'' என்பது வாழ்வின் மந்திரமாயிற்று.

காகா சாஹப் உடல்நிலை தேறிவிட்டது. ஆனால் டாக்டர் தல்லல்கர் வைத்தியம் பார்த்தும் ''காகி''யின் உடல் நலம் தேறவில்லை. வேறு வழியின்றி அவரை அவரது தாயாரிடம் விட்டு வந்தார்.

அங்கே சற்று நோய் குணமாயிற்று. ஆனால் மீண்டும் கிளைத்தது. ''தான் பிழைக்க மாட்டோம்'' என்று தெரிந்தவுடன் ஆசிரமத்திற்கு வர காகி அனுமதி கேட்டார். காகா அப்போது வித்யாபீடத்தில் இருந்தார். காகி மஹாதேவ்பாய் வீட்டிலிருந்தார். இங்கேயே 1929-இல் அவரது இறுதிமூச்சும் பிரிந்தது, அனைவரும் பக்கத்திலிருந்தனர். ''காகி''க்கு நாற்பது வயதே நிறைந்திருந்தது. ''சாபர்மதிக்கரையில் அவரது உடல் அக்கினிக்கு இரையாகியது. அவரது நினைவுகளே எஞ்சி நின்றன. என்னுடைய ஆசிரம வாழ்க்கையில் முற்றிலும் இணைந்து நின்று எனக்கும் என் நண்பர்களுக்கும் என் மனைவி முழுமையாகத் தொண்டாற்றினார்.'' (சமன்வய கே சாதக், 144).

இதைவிடச் சிறந்தமுறையில் ஒரு இலட்சியவாதி வேறென்ன சொல்லிப் பாராட்ட முடியும்?

# வித்யாபீடத்தின் மறுமலர்ச்சியும் தண்டி யாத்திரையும்

குஜராத் வித்யாபீடத்தின் நிலை சரியாக இல்லை. காகா சாஹப் மீண்டும் அங்கே செல்லவேண்டுமென ஆசார்ய கிருபளானி விரும்பினார். ஆனால் அவர் காச நோய்க்குள்ளாகியிருந்தார். பிறகு குணமாகி அவர் ஆசிரமம் திரும்பியபோது காந்திஜி அவரிடம் சொன்னார்: ''வித்யாபீட நிர்வாகம் பிரச்சினையாகி யிருக்கிறது. நீ அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு சிக்கலை விடு விக்க வேண்டும், அது உன்னால்தான் இயலும்.''

காகா சாஹப் பதிலளித்தார்: ''இவையெல்லாம் எனக்குத் தெரியும். நீங்கள் கவலையற்றிருக்க நான் வித்யாபீடப் பொறுப்பை ஏற்கத் தயாராக இருக்கிறேன். கிருபளானி எனக்கு மிக நெருங்கிய நண்பர். எங்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட வழியேயில்லை.''

ஆனால், வேறுபாடு தோன்றியதென்னவோ உண்மை. காந்திஜி கிருபளானியை, 'காதி பிரசார' விஷயமாக மீரட் அனுப்ப விரும்பினார். ஆனால் கிருபளானியோ குஜராத்தை விட்டுச் செல்ல விரும்பவில்லை.'' ''பாபுஜியின் இந்தக் கருத்து உனக்கு முன்பே தெரியுமானால் என்னை நீ முன்பே எச்சரித் திருக்க வேண்டும். நட்புக்குரிய கடமையை நீ ஏன் செய்யவில்லை என்று எனக்கு வியப்பாக இருக்கிறது'' என்றார் கிருபளானி.

காகா பதிலளித்தார்: ''காந்திஜி என்னிடம் தனிப்பட்ட முறையில் பேசுவதையெல்லாம் நான் எப்படி வெளியே சொல்வது? கிருபளானியை நான் சமாளித்துச் சரிக்கட்டிக் கொள்கிறேன்'' என்று அவர் வாக்களித்ததனால் நான் கவலையற்றிருந்தேன். (சமன்வய கே சாதக், 187).

கிருபளானி சமாதானமடையவில்லை. இதனால் இருவ ரிடையே இருந்த ஆழ்ந்த நட்பு விரிசல் கண்டது. இதனால் காகா மிகவும் துன்புற்றார். ஆனால் காந்திஜியின் ஆணைப்படி வேலையையும் செய்ய வேண்டியிருந்தது.

வித்யாபீட விவகாரங்களில் தளர்ச்சி ஏற்படப் பல காரணங் களிருந்தன. ஒத்துழையாமை இயக்கம் நின்று விட்ட காரணத்

தால் பலரது ''தேசிய உணர்வுகள்'' சற்று மங்கியிருந்தன. சுயராஜ்யக் கற்பனையும் கலைந்து விலகிச் சென்றுவிட்டது. மேலும் ஆசிரியர்கள் குஜராத்திற்கு வெளியேயிருந்து வந்து வேலைக்குச் சேர்ந்திருந்த காரணத்தால், ''அவரவர் மாநிலம்'' பற்றிய எண்ணங்களே மேலோங்கியிருந்தன. காந்தீய ஒருமைப் பாட்டுக் கருத்துக்கள் நினைத்தபடி வேரூன்ற முடியவில்லை.

பலவகை மாற்றங்கள் செய்யப்பட்டன. பலருக்கும் மனத் தாங்கல் ஏற்பட்டது. இருப்பினும் உறுதியான முடிவுகள் எடுக்கப்பட்டன. பண்பாட்டு மலர்ச்சிக்கும், தன்னிறைவுடைய தொழில் வளர்ச்சிக்கும் பெரும் திட்டங்கள் தீட்டப்பட்டன. அடிப்படைக் கல்வியெனக் காகா கனவு கண்ட முயற்சியும் நடை பெற்று வந்தது.

இந்தச் சமயத்தில் பர்தோலி சத்தியாக்கிரகம் தொடங்கியது. காகா சில மாணவர்களைத் தேர்ந்தெடுத்து அங்கே அனுப்பினார். ஆனால் வல்லபாய் பட்டேலோ வித்யாபீடம் முழுவதுமே சத்தியாக்கிரகத்தில் பங்குகொள்ள வேண்டுமென விரும்பினார். ''நான் சில மாணவர்களை அனுப்பியிருக்கிறேன். வித்யா பீடத்தை இழுத்து மூடிவிட எனக்கு மனம் ஒப்பவில்லை. நீங்களோ காந்திஜியோ இறுதிச் சண்டையில் இறங்கும்போது நாங்கள் அனைவருமே உடனிருப்போம்'' என்று காகா பதிலனுப்பி னார். ''இந்தச் சத்தியாக்கிரகம் மிகப் பெரியதன்று; குறிப்பிட்ட இடத்தில் நடப்பது; தேசம் தழுவியதன்று; பத்துப் பேர் மட்டும் கலந்துகொண்டால் வித்யாபீடத்தை மூட நேரிடாது'' என்று கருத்துத் தெவித்தார்.

பிறகு அங்கிருந்து தகவலில்லை. ஆனால் ஒருமுறை காந்திஜியே வல்லபாயின் அழைப்பின் பேரில் அங்கு நேரில் சென்றார். அப்போது அரசினர் தழைந்து வந்து, உடன்படிக்கைக் கான பேச்சு வார்த்தைகள் தொடங்கினர். சர்க்கார் தரப்பில் நியமிக்கப்பட்ட இருவரில் நரஹரி பாய் ஒருவர். அவரோ வித்யா பீடத்தின் முக்கிய செயலாளர். காகா சாஹப்பின் உற்ற துணைவர். அவர் இல்லாமல் வித்யா பீடத்தை நடத்த முடியாது. இருந்தும் காகா அவரைப் போக விட்டார். அவர் விவசாயிகள் சார்பில் பெரிதும் திறமையாக வாதாடியபோது அரசுத் தரப்பினர் மலைத்துப் போயினர்.

கடைசியில் உடன்படிக்கை கையெழுத்தாயிற்று.

இப்பொழுது காகா சாஹப் மற்றோர் உயரிய செயலைச் செய்தார். காந்திஜியே அவரை ''நூற்றிருபத்தைந்து சத விகிதம் குஜராத்தி'' என்று அழைக்குமளவிற்கு அவர் குஜராத்தி

மொழியுடன் ஒன்றிப் போனார். குஜராத்தி மொழி எத்துணை விரைவில் வளர்ச்சி பெற முடியுமோ அதற்கு ஆவன செய்யுமாறு காந்திஜி ஒருமுறை சிறையிலிருந்து எழுதியிருந்தார். விடுதலையானவுடன் காகா சாஹப், நரஹரி பாய், மஹாதேவ பாய் ஆகிய மூவர் குழுவையும் அவர் நியமித்தார். இலக்கிய பரிஷத்தின் வளர்ச்சி வட்டம் வேறு வேலை செய்தது. வித்யாபீடமும் தனது வளர்ச்சிக் குழுவொன்றை அமைத்தது. நரஹரிபாய் அதன் இயக்குநரானார். இம்முயற்சிகளின் காரணமாக வித்யாபீடம் குஜராத்தி மொழியின் எல்லா அம்சங்களும் உள்ளிட்ட ஒரு பேரகராதியைத் தயாரித்தது. இதுவே பின்னர் மேன்மேலும் விரிவுபெற்று, குஜராத்தி மொழியின் இலக்கியச் செல்வமாகி விட்டது.

வித்யாபீடத்தின் மற்றொரு பணியாக கிராம சேவைக் கழகத்தை நிறுவ வேண்டியிருந்தது. காந்திஜியின் தொண்டர் ஸ்ரீ நவீன்தாஸ் அமுல்க் ராம், குஜராத் கிராமங்களின் மறுமலர்ச்சிக்காகவும், கல்வித் திட்டங்களுக்காகவும் ஒரு லட்ச ரூபாய் கொடுத்திருந்தார். இதைக் கொண்டு இந்தக் கழகம் உருவாயிற்று. இதற்கான வரவு செலவுத் திட்ட ஆய்வு முதலியன செவ்வனே நடந்தன.

1929-இல் லாகூரில் காங்கிரஸ் மாநாடு கூடியது. காங்கிரஸ் வரலாற்றில் இது மிகச் சிறப்பு வாய்ந்தது. இங்கேதான் ஜவஹர்லால் நேருவின் தலைமையில் ''முழு சுயராஜ்யக் கோரிக்கை'' பிரகடனப்படுத்தப்பட்டு, 1930 ஜனவரி 30-ஆம் தேதி நாடு முழுவதும் உறுதிமொழி எடுத்துக்கொள்ளப்பட்டது. அன்று காலை வித்யாபீடம் பிரார்த்தனைக்குப் பிறகு காகா சாஹப் சொன்னார்: பல்லாண்டுகளாக நான் எதிர்பார்த்திருக்கும் நேரம் வந்து விட்டது. இந்த நாள் மகத்தானது. நாட்டுக்கும்—நம் மனைவருக்கும் மிக முக்கியமானது.

மேலே ஆகவேண்டிய ஏற்பாடுகளில் காகாஜி முனைந்தார். காந்திஜியும் தீவிரமாக இதுபற்றி எண்ணமிடலானார். ஒரு நாள் உப்புச் சட்டத்தை மீற உறுதிகொண்டு உலகையே வியப்பிலாழ்த்தினார். ''நான் முழந்தாளிட்டு வணங்கி வைஸ்ராயிடம் என் பசிக்குப் பிச்சை கேட்டேன். அவர் ரொட்டிக்குப் பதில் கல்லைப் போட்டு விட்டார்.''

இதன் பிறகு 1930 மார்ச் 12-ஆம் தேதி தமது புகழ்மிக்க தண்டி யாத்திரையை மேற்கொண்டார். கையில் ஊன்றுகோல், இடுப்பில் அசைந்தாடும் கடிகாரம், தாவித் தாவி விரைந்து செல்லும் தப்படிகள், காந்திஜியின் இந்த நடைப்பயணம்

வரலாற்றுப் புகழ்பெற்ற காட்சி. 24 நாட்களுக்குப் பிறகு 1930 ஏப்ரல் 5 ஆம் நாள் அவர் கடற்கரையை அடைந்தார். மறுநாள் 6ஆம் தேதி காலை 8½ மணிக்குச் சமுத்திரத்தில் குளித்துவிட்டு, குழந்தைகள் விளையாட்டுப் போல ஒரு பிடி உப்பை அள்ளியெடுத்தார். உலகம் சிரித்தது. ஆனால் அந்த ஒரு பிடி உப்பில் ஒரு பெரு நெருப்பே பற்றிக்கொண்டது. தேசம் முழுவதும் வீறுகொண்டு சிலிர்த்தெழுந்தது (ஸ்லாதீனதா சங்க்ராம்—விஷ்ணு பிரபாகர் 767).

வித்யா பீடத்தின் அனைத்து மாணவர்களும் ஆசிரியரும் இந்தச் சத்யாக்கிரஹத்தில் சேர விழைந்தனர். சுதந்திரப் போரின் ஓர் அங்கமாக இது விளங்கியது. இதில் பங்குகொள்ள முடியாதவர்களும், விரும்பாதோரும் இருந்தனர். அவர்களே இசையாசிரியர்கள். அவர்கள் சமயம் பார்த்து வித்யாபீடத்தை விட்டுச் சென்றனர். சில கலைஞர்கள் சிறை செல்ல விரும்பாமல் தண்டி யாத்திரையைப் படம் பிடித்து மக்களுக்குக் காட்ட விரும்பினர். ஆனால் காகா இதற்கு இசையவில்லை. சுதந்திரம் கிடைக்காமல் கலாசாரம், இலக்கியம், கலை போன்ற செல்வங்கள் எல்லாமே அவருக்குப் பொருட்டாகத் தோன்றவில்லை. கருத்து வேற்றுமைகள் ஏற்படும்போது மேல்பூச்சுக்கும் உடன்பாட்டிற்கும் இடமில்லை. இதே காரணத்திற்காகத் தமது முன்னாள் நண்பர்களையும், தொண்டர்களையும் வித்யாபீடத்திலிருந்து நீக்கவும், துறக்கவும்கூட அவர் தயங்கவில்லை.

இந்தப் போராட்டத்தில் வித்யாபீடம் ஆற்றிய அரும்பணி குறித்துக் காந்திஜி சொன்னார்: ''வித்யாபீடத்திற்காகச் செலவிட்ட தொகை நாட்டிற்கு வட்டியும் முதலுமாகக் கிடைத்துவிட்டது. நூறு விழுக்காடு வெற்றி வித்யாபீடத்திற்கே!''

இதே சமயத்தில் குஜராத்திற்கு வெளியே இருந்த சிலரும் காகாவின் கல்வித் தொண்டினைப் போற்றிப் பாராட்ட எண்ணினர். அவர்கள் வேறு யாருமில்லை. அவரது சொந்த மாநிலமான மகாராஷ்டிரத்தில் 1930-இல், மகாராஷ்டிரத்தின் எல்லாக் கல்வி நிலையங்களும் இணைந்து தலேகாமில் ஒரு பெரும் கல்வி மாநாட்டைக் கூட்டி, அதற்குக் காகாவைத் தலைவராக்கின. குஜராத்தில் அவர் வசித்தமையால் அவர் குஜராத்தி என்றே பல மகாராஷ்டிரரும் நம்பியிருந்தனர்.

ஒருவரது சொந்த மாநிலம் அவரை உணர்ந்துகொள்ளாமலிருப்பதும், குடியேறிய மாநிலம் நம்மவர் என்று போற்றுவதும்

எத்தகைய விந்தை! இதையே பெரும்பேறாகக் கருதிய காகா தம் மாநிலத்தவர் மீண்டும் தம்மை அழைத்துத் தலைமைப் பதவி தந்தபோது சற்று வேதனையுடன் எழுதினார்: ''அமைதிக் கால மானால் நான் நாடு முழுமைக்கான திட்டங்களை அங்கே எடுத் துரைப்பேன். சிறந்த கல்வியாளர் என்று இந்த மாநிலம் பெருமைப்படும் வகையில் ஒரு பேருரையே நிகழ்த்துவேன். சுதந்திர இந்தியா தன் கல்விச் சிறப்பினாலேயே எவ்வாறு உலகுக்குத் தொண்டாற்ற முடியும் என்று எனது இலட்சியங் களைப் பறைசாற்றுவேன். ஆனால் 1930-இல் நான் கல்விப் பாதையைவிட்டு விலகிப் புதிய போராட்டம் தொடங்கிய நாள் முதல், மகாத்மாவின் சுதந்திரப் பாசறையின் முக்கிய படை வீரனாகிவிட்டேன். தலேகாமில் நடந்த தேசியக் கல்வி மாநாட்டின் விளைவாகப் பலரும் தேசியப் போராட்டத்தில் குதித்தனர். இதனால் நான் அங்கே சென்றது வீணாகவே யில்லை. வெற்றியே தந்தது.'' (சமன்வய கே சாதக், 191).

இதில் தன்னம்பிக்கையும் உள்ளது; தன்னிலையுணர்ந்தமை யும் புரிகிறது. காகா தமது அளப்பரிய மன ஆற்றலை வீண் போலி அடக்கத்தின் பெயரால் மறைத்துக்கொண்டதில்லை. இது மகாராஷ்டிரத்தின் சிறப்பியல்புபோலும்!

வித்யாபீட வளர்ச்சித் திட்டங்களில் ஒரு பகுதியாக, அவர் ஒரு தேசியக் கல்வி மாநாடு நடத்த எண்ணமிட்டார். அத்துடன் ஒரு மாணவர் மாநாடும் நடக்கவிருந்தது. அவரது எண்ணங்கள் செயல்படும் முன் 1930-ஆம் ஆண்டு வேறு சிந்தனைகளைத் தோற்று வித்தது. எங்கும் சுதந்திரக் கனல் சூடு பிடித்தது. அதிலே கல்வி யாளர்களும் போராட்டத்தில் பங்கு கொள்ளும் படைவீரர்களாக மாறவேண்டியிருந்தது.

இது ஒரு செயலாக்கத் திட்ட உடன்படிக்கை. மாணவர் மாநாட்டின் வழியாக ஒரு மௌனப் புரட்சியையே உருவாக்க காகா திட்டமிட்டார். அந்நாளில், குஜராத்தின் மாணவர்க் குழுவினர் ஜாதி அடிப்படையில் பிரிந்திருந்தனர். இத்தகைய மாணவர் விடுதிகள் குஜராத்தின் இயற்கையான வசதியான வாழ்விற்கு வகை செய்யலாம். ஆனால், நாட்டுக் கலாசார மேம் பாட்டிற்கு இந்த ஏற்பாடு உகந்ததன்று; ஊறு விளைவிப்பது மாகும். இம்முறையைத் தகர்க்கவேண்டும். இதை மக்களுக்குச் சிறப்புற உணர்த்த எண்ணி மாணவர் மாநாடு கூட்ட நினைத் தேன். முதன் முதலாகப் பொதுமைப் பண்பாட்டிலும் சமூகத்தி லும் ஒருமைப்பாடு மலரவும் வளரவும் வழிசெய்வது எனது

இலட்சியம். ஆனால் சுதந்திரப் போராட்டச் சுழலில் சிக்கிக் கொண்டேன். மறுபடியும் மிகப் பெரிய நிகழ்ச்சிகள் நடக்கலாயின. எனவே மாணவர்கள் ஒன்று சேரும் திட்டம் மேலே செயல்படாமல் நின்றுவிட்டது. (சமன்வய கே சாதக், 192).

காகா சாஹப்பின் கருத்துப்படி தேசியக் கல்வி என்பது அரசியல் ஒற்றுமைக்கு வழி என்பது மட்டுமில்லை. அரசியலோடு சமூகமும், நாகரிகமும் மற்றும் அனைத்துமே பரிணமிக்க, தேசியக் கல்விமுறை ஒன்றே துணை செய்யும் என்பதே அவரது துணிந்த முடிவு.

# பாபுஜியுடன் சிறை வாழ்க்கை

உப்பு சத்தியாக்கிரஹத்தில் பங்கெடுத்துக்கொண்டதற்காகக் காகா சாஹப் தண்டனை பெற்றபோது, காந்திஜியுடன் ஏர்வாடா சிறையில் அடைக்கப்பட்டார். இது அவருக்குக் கிடைத்தற்கரிய பேறாதலால், அதன் முழுப் பயனையும் அடைய விரும்பினார். ''உப்பின் உயர்வு'' என்ற நூலில் இந்தச் சிறை வாழ்க்கையைப் பற்றி அவர் விரித்துரைத்துள்ளார். சிந்தையும் மனமும் ஒன்று பட்டு அநுபவித்ததையெல்லாம் நூலாக எழுத, காகா பெரிதும் ஆசைப்பட்டார். தம் உணர்ச்சிகளை வெளிக்கொட்டி எழுதும் திறன் மட்டும் அவரிடம் இல்லாமல் போயிருந்தால், அவரது உள்ளவேட்கை தணிந்தே இராது.

காகாவின் ஜெயில் வாசத்தின் தாக்கம் பல வடிவங்களில் தெரியலாயிற்று. அவர் கதர்ப் பிரியர். எனவே, இராட்டை சுழற்றக் கற்றார். இன்னும் இராட்டையின் உபயோகத்தைப் பெருக்கும் வழிகளை காகா அறிந்திருந்தார். காந்திஜிக்கு அவை தெரியா.

எப்படிப்பட்ட போராட்ட நாட்கள் அவை? ஒருபுறம் தேசத்தின் தூண்கள் போன்றோர் சிறையில் வாடினர்; மறுபுறம் சமாதானப் பேச்சுவார்த்தைகளில் அரசு ஆர்வம் காட்டியது. டாக்டர் சப்ருவும், டாக்டர் ஜயகரும் மத்யஸ்தம் செய்வதில் முனைந்திருந்தனர். தலைவர்கள் ஒருவரோடொருவர் கலந்தாலோசிக்க வசதியாக, மோதிலால் நேரு, ஜவஹர்லால் நேரு, வல்லபாய் பட்டேல், சரோஜினி நாயுடு, சையத் அஹமத், ஜயராம்தாஸ், தௌலத்ராம் ஆகியோரையும் ஏர்வாடா சிறையிலேயே வைத்திருந்தனர்.

காந்திஜி ஒரு விந்தையான மனிதர். ஒருபுறம் தேச நிலைமை பற்றிக் கடுமையான விவாதங்கள்; மறுபுறம் காகாவுடன் இராட்டையை வைத்துக்கொண்டு தீவிரமான யோசனைகள். ஒரு நாள் காகா சொன்னார்: ''பாபுஜி, எனக்குக் குஜராத்தி மொழியில் ஈடுபாடும், அதன் இலக்கிய வளர்ச்சிக்கான முயற்சியும் உண்டென்பது மட்டுமே உங்களுக்குத் தெரியும். பொறியியல் நுட்பங்களைப் புரிந்துகொள்ளும் திறனும் எனக்கு உண்டென்பது தெரியுமா உங்களுக்கு?''

பாபு சிரித்தபடியே சொன்னார்: ''உங்கள் வாதத்தில் நீங்கள் எப்படியோ வெற்றிபெற வேண்டும். எனக்குத் தெரிந்தது ஒன்றுதான். தக்ளியிலிருந்து நூலை எடுக்க ஒரு கையில் தக்ளியை யும், மறு கையில் இராட்டையையும் சுழற்றுகிறேன். இவற்றுள் ஒரு கைக்காவது விடுதலை கிடைக்குமானால் உங்களுக்குப் பொறியியல் திறனிருப்பதை ஒப்புக்கொள்கிறேன்.''

காகா சவாலை ஏற்றுக்கொண்டார். சிறையில் ஹ்வீலர் என்ற ஆங்கிலேயக் கைதி ஒருவர் இருந்தார். அவரையழைத்துக் காகா விஷயத்தைச் சொன்னார். நூல் சுற்றியுள்ள தக்ளியை நிலை நிறுத்த வசதியாக அவர் அலுமினியத்தால் ''U'' வடிவில் ஒரு பொருளை உண்டாக்கினார். காந்திஜி மிகவும் மகிழ்ந்து இரட்டையைப்பற்றி விவாதிக்கலானார். பிற்காலத்தில் காந்திஜியின் ஏர்வாடா இராட்டை அமைப்பிலும் செய்முறையி லும் காகா முழுமையாகக் கலந்துகொண்டார்.

இந்தச் சிறைவாசத்தில் மற்றொரு முக்கிய விளைவு, விண் மீன்களைப்பற்றிய கல்வியில் காந்திஜிக்குச் சுவையும், உற்சாகமும் ஏற்படுத்தி ஈடுபடச் செய்தது.

காகாவிற்கு இது பிடித்தமான பொழுதுபோக்கு. ஏர்வாடா வில் அவர் திறந்த வெளியில் உறங்க அனுமதி பெற்றிருந்தார். மாலையானால் வானில் விண்மீன்கள் ஒளிவீசும். அவை எவ்வாறு மெள்ள மெள்ளத் தோன்றி வான வீதியில் இரவு முழுவதும் உலா வந்து விடிகாலையில் மறைகின்றன என்பதைக் காகாவின் கவி யுள்ளம் கவனித்துக் களிப்பெய்தி வந்தது. 27 நட்சத்திரங்கள், பன்னிரெண்டு இராசிகள், அவற்றின் தன்மை, இடம் இவையெல் லாம் காகாவுக்கு அற்றுப்படி.

இந்த மகிழ்ச்சியைக் காந்திஜியும் அநுபவிக்கவேண்டுமென அவர் விரும்பினார். எனவே தூங்குவதற்கு முன்பும், அதிகாலையி லும் காந்திஜியின் மனத்தைக் கிரஹங்களின் பக்கமும் நட்சத்திரங் கள்மீதும் திருப்பலானார். காகாவுக்காக அவர் விண்மீன்களைக் கூர்ந்து பார்த்தாலும், அவரது மனம் இதில் லயிக்கவில்லை. ஆனால் காகா தமது முயற்சியைக் கைவிடவில்லை. கடுமையான அரசியல் பிரச்சினைகளிலிருந்தும், தீவிரமான இராட்டைச் சீரமைப்பு சிந்தனைகளிலிருந்தும் காந்திஜி சற்றாவது ஓய்வுபெற வேண்டுமென விரும்பிய காகா பல நூல்களையும் படங்களையும் தருவித்து வான சாஸ்திரத்தில் அவருக்கு உற்சாகமூட்ட மிகவும் பாடுபட்டார்.

1930 ஜூன் 19-ஆம் தேதி காந்திஜியிடம் வந்து சேர்ந்த காகா நவம்பர் 29-ஆம் தேதி விடுதலையாகிச் சென்றுவிட்டார். ஏறக்குறைய இந்த ஐந்தரை மாதக் காலத்தில் காந்திஜியின் மனத்தில் தெளித்த விதை பிறகு 1932-இல் சிறைக்கு வந்தபோது மீண்டும் துளிர்த்தது. புத்துணர்ச்சியூட்டிய இந்த இன்ப அநுபவம் நட்சத்திர தரிசனத்தில் காந்திஜிக்கு ஒரு புதிய ஆத்ம சாதனையையே தந்தது. அவரும் பல நூல்கள் வரவழைத்தார். படித்த பின் காகாவிடம் அனுப்பிவிடுவார். கடிதங்களில் தாம் பெற்ற மகிழ்வை விவரிப்பார். புதுப் பாதை திறந்ததை விரித்துரைப்பார். இந்தக் கருத்துப் பரிமாற்றம் சிறைவாழ்வில் வெகுகாலம் நீடித்தது.

விடுதலை பெற்றபின் தாம் வானவெளியில் பார்த்து மகிழ்ந்ததைக் காந்திஜி ஒரு கட்டுரையாகவே எழுதினார். அதைக் காகாவுடன் பகிர்ந்துகொள்ள எண்ணினார். பெல்காம் சிறையிலிருந்த காகாவுக்குக் காந்திஜி எழுதியிருந்த கடிதத்தில் விண்மீன்களின் எழிலில் அவர் எந்த அளவு மனத்தைப் பறிகொடுத்திருக்கிறார் என்பது தெரியலாயிற்று. ''குஜராத்தி மொழியில் ஒரு நல்ல நூல் வேண்டும். அதில் வான சாஸ்திரத்தின் விவரம் வேண்டும். இரண்டு வெவ்வேறு நூல்கள் விற்பனையாகா. எனவே சுய அநுபவத்தையும், வானியலையும் கலந்து எழுதவேண்டும். நீங்கள் இங்கிருந்தால் உங்களை எழுத வைத்து நானும் உதவியிருப்பேன். எனது அறிவு முதிராத காரணத்தால் நானே எழுதவும் முடியவில்லை. எனக்கு இதில் பிறந்துள்ள பேரார்வம் காரணமாக வானியல் அறிவைச் சமய அறிஞர்கள் கையாண்ட விதத்தையும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.''

காகா சாஹப் விரும்பியபடி இந்தப் பணி முற்றுப் பெறவில்லை.

பல நல்ல குணங்கள் அவரிடமிருந்தும் குறித்த காலத்தில் செய்வது என்ற குணம் காகாவிடமில்லை. எவ்வளவு முடியுமோ அவ்வளவு எதிலும் கட்டுப்படாமல் இருப்பதே அவரது இயல்பு. சுதந்திர மனிதன் காலத்தின் அடிமையா என்ன? மேலும் தாமே உட்கார்ந்து அவர் எழுதுவது கிடையாது. எழுத இன்னொரு நபர் உதவி வேண்டும்.

காந்திஜியுடன் அவர் சிறையில் சேர்ந்திருந்தபோது ஒரு விசித்திர நிலைமை உருவாகியது. காகா எவ்வளவு ஒழுங்கற்றவரோ, காந்திஜி அவ்வளவு ஒழுங்குமுறையைப் பின்பற்றுபவர். ஒரு நாள் காந்திஜிக்கு அரை மணி, முக்கால் மணி ஓய்வு கிடைக்கும் போலிருந்தது. காகாவிடம் வந்து முழுக் கம்பீரம் தோன்றக்

கேட்டார்: ''என்னிடம் அரை மணி அவகாசம் இருக்கிறது. ஏதாவது எழுத வேண்டுமானால் நான் தயார்.''

காகா வெட்கித் தலை குனிந்துவிட்டார். அன்று முதல் அவர் தாமே எழுதலானார். பல யுகங்களாக இருந்த பழக்கம் எப்படி மறையும்? சில காலத்திற்குப்பின் மீண்டும் பழைய வழக்கமே தலை தூக்கிவிட்டது.

கவிஞர், இயற்கை விரும்பி, விண்மீன் அறிவியல் யாவும் தெரிந்தவர். இவர் எந்த விதிகளுக்குக் கட்டுப்பட முடியும்? ஆனால் காந்தியவாதியுமாயிற்றே! முயன்றால் இரு துருவங்களும் என்றாவது இணைய முடியுமென்று பலர் ஆலோசனை கூறியதுண்டு.

# வித்யாபீடத்திலிருந்து வெளியேறும் வரை

காந்திஜி—இர்வின் உடன்படிக்கைக்குப் பிறகு போராட்டம் ஓய்ந்தபோது காகா சாஹப் வித்யாபீடத்தில் சுயராஜ்ய வித்யாலயம் தொடங்கினார். சுதந்திரப் போராட்ட வீரர்கள் விடுதலைப் போரே முடிந்துவிட்டதாக எண்ணிவிடக்கூடா தென்றே அவர் இவ்வாறு செய்தார். முந்தைய போராட்டத்தில் படித்த பாடங்களை நினைவில் கொண்டு அடுத்ததற்குத் தயாராக வேண்டும். போராட்டம் தொடர்ந்து நீடிக்குமென்றே அவர் நம்பினார். அப்படித்தான் நடந்தது. காந்திஜி வட்டமேஜை மாநாட்டிலிருந்து, பைரங் வந்து சேருமுன்பாகவே லார்ட் வெலிங்டன் அடக்குமுறை தொடங்கிவிட்டது. காந்திஜி திரும்பிய வுடன், எல்லாவற்றையும் உள்ளிட்ட ஓர் அவசர ஆணையைப் பிறப்பித்து, தேசிய நல மேம்பாட்டுத் திட்டங்கள் அனைத்தையும் தடை செய்தனர். வித்யாபீடமும் இதற்கு விதி விலக்காக முடிய வில்லை. எல்லாக் காரியதரிசிகளையும் சிறை செய்துவிட்டு, அரசே வித்யாபீட நிர்வாகத்தை எடுத்துக்கொண்டது. இம்முறை காகா சாஹப் பெல்காம் அருகேயுள்ள ஹிடங்லகர் சிறையில் இருந்தார். அவர் தீவிர சிந்தனைவயப்பட்டார். வித்யா பீடத்தில் தமது பணி முடிந்துவிட்டதால் அவர் ஏதாவது தேசியத் திட்டத்தை மேற்கொள்ள விரும்பினார்.

இங்கே அவர் மஹாபாரதம் படித்தார். இரண்டு நூல்கள் எழுதினார். ''ஜீவன்னோ ஆனந்த்'' என்ற நூலில் இயற்கை வர்ணனை செய்துள்ள முதல் அத்தியாயத்தை இங்கேதான் இவர் எழுதினார். அருணோதயத்தின்போதும், அஸ்தமனத்தின் போதும் மேகங்கள் எத்தனை புதிய புதிய வடிவு கொண்டு கந்தர்வ நகரங்களை நிர்மாணிக்கின்றன—என்னென்ன வண்ணங் களால் அவற்றை அலங்கரிக்கின்றன. இவற்றின் வர்ணனை மிக அழகிய சொல்லோவியங்களாகும்.

காகா சாஹப் மனதில் சமூகத் தொண்டு, இலக்கிய சேவை இரண்டும் சம அளவில் இடம் பெற்றிருந்தன. இரவீந்தரர் ஒரு புறமும், காந்திஜி மறுபுறமும் அவரது இதயபீடத்தில் வீற்றிருந் தனர். இயற்கை வர்ணனை நூல்களைத் தவிர,

''ஹிண்டல்ணயாசா பிரஸாத்'' என்ற நூலையும் மராத்திய மொழியில் எழுதினார். ''லோகஜீவன்'' என்ற தலைப்பில் இது குஜராத்தியில் மொழிபெயர்க்கப்பட்டுப் புகழ் பெற்றது. இதை எழுதுவதில் ஒரு கதையே அடங்கியிருந்தது.

இந்தச் சிறையில் இவர் நூல் நூற்க அனுமதிக்கப்படவில்லை. ஏழு நாட்கள் அவர் உபவாசமிருந்தார். அனுமதி கிடைத்தது. உபவாசம் இருப்பவர்களைக் கலகக்காரர்கள் என்று சொல்வதுண்டு. இவ்வாறு இங்கே மற்றொருவரும் இருந்தார். ஸ்ரீ புண்டலிக் கான்கடே என்பது இவர் பெயர். காகாவின் பழைய நண்பர் இவர். இருவரும் இங்கே இணைந்திருக்க முடிந்தது. பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். பேசிப் பேசி என்ன பயன்? நூல் எழுதலாமே என புண்டலிக் நினைத்தார்.

சுயராஜ்யப் போராட்டம் கிராமங்களில் பரவ வேண்டுமானால், கிராம வளர்ச்சித் திட்டம் ஏதாவது தேவை. கிராமவாசிகள் பழைய பழக்க வழக்கங்களில் ஊறிப்போனவர்கள். இவர்கள் மனமாற்றம் அடைந்து புதிய வாழ்க்கை நிலைகளை உணரவேண்டும். அவற்றை எதிர்காலத்தில் அவர்கள் உறுதியாகப் பின்பற்ற வேண்டும். வாழ்க்கையின் புதிய தத்துவங்கள் என்னென்ன, மதங்கள் கூறும் நியமங்களின் உயர்வு என்ன என்றெல்லாம் காகா சாஹப் புண்டலிக் மூலம் எழுதலானார். கிராம வாழ்வின் சீரமைப்பிற்கும் பதிவேடாக அமைந்தது இந்நூல்.

1932-இல் காகா சாஹப் இங்கிருந்து விடுதலையானார். இதற்குள் வெளியே பல சம்பவங்கள் நிகழ்ந்திருந்தன. வட்டமேசை மாநாட்டிலிருந்து காந்திஜி நிராசையுடன் திரும்பியிருந்தார். ஆங்கில அரசு 'பிரித்தாளும் சூழ்ச்சி'யினைக் கையாண்டு மக்களுக்குச் சில உரிமைகள் வழங்குவதைப்போல் ஒரு சட்டம் பிறப்பித்தது. அதில் தீண்டாதவருக்கு ஹிந்துக்களைவிட அதிகம் மதிப்புக் கொடுக்கப்பட்டிருந்தது. அவர்கட்குப் பல சுய உரிமைகளும் வழங்கப்பட்டிருந்தன.''

ஹிந்துக்கள் ஆங்கிலேய சர்க்காரின் தந்திரத்தைப் புரிந்து கொண்டனர். ஆனால் வழி வழியாக வந்த பழக்கங்கள் காரணமாகத் தீண்டாமையெனும் களங்கத்தை அவர்களால் நீக்க முடியவில்லை. ஆனால் காந்திஜி இந்த யோசனையை எதிர்த்து 1932-டிசம்பர் 20ஆம் தேதி ''சாகும் வரை உண்ணாவிரதம்'' மேற்கொண்டார். அரசாங்கமும் மக்களும் துவண்டு போயினர். தேசத்தில் பதற்றநிலை பூகம்பமாக வெடித்தது. ஹிந்து, ஹரிஜனத் தலைவர்கள் காந்திஜியைச் சந்தித்தனர். பேச்சு

வார்த்தை நடந்தது. ஹிந்து தலைவர்கள் தீண்டாமையைக் கைவிட இசைந்தனர். ஆனால் தீண்டாதார் தலைவர் டாக்டர் அம்பேத்கார் முற்றிலும் சமாதானமடையவில்லை. காந்திஜியின் உயிரைக் காக்கவேண்டிய அவசியத்தை முன்னிட்டு இரு தரப்பினரும் வளைந்து கொடுத்தனர். ஏர்வாடா உடன்படிக்கை உருவாயிற்று. இங்கேதான் காந்திஜி "தீண்டாதார்" என்ற பதத்தை விலக்கி, "ஹரிஜன்" (கடவுளின் குழந்தைகள்) என்று புதுப் பெயர் சூட்டினார்.

இதே பெயரில் ஒரு வாரப் பத்திரிகையையும் தொடங்கினார். நிகழ்ச்சிகள் விரைவாக நடந்தேறின. 1933-இல் மீண்டும் மூன்று வாரம் காந்திஜி உபவாசமிருந்தார். சர்க்கார் அவரை விடுதலை செய்தது. சத்யாக்கிரகத்தைக் கைவிட்ட காந்திஜி 1932-ஆம் ஆண்டு இயக்கத்தில் கலந்துகொண்ட வீரர்களின் குடும்பங்களை யெண்ணி, ஆசிரமத்தையே கலைத்துவிட முடிவு செய்தார். ஆசிரம நூல் நிலையத்தை அஹமதாபாத் நகர சபையிடம் ஒப்படைத்தார். சர்க்காரிடம் ஆசிரமத்தை ஏற்று நடத்துமாறு கேட்டார். இதைப் பார்த்து வித்யாபீடத்தின் நூலகத்தையும் நகரசபையிடம் ஒப்புவிக்குமாறு காகா கூறினார்.

இங்கேதான் அவர் ஒரு தவறு செய்தார். வித்யா பீடத்தின் நூல் நிலையம்பற்றி முடிவெடுக்க அவருக்கு அதிகாரம் இருக்க வில்லை. வித்யாபீடத்தின் நிர்வாகிகள் தான் இதைச் செய்ய முடியும். எனவே, சத்யாக்கிரகம் முடிந்தவுடன் நிர்வாகிகள் நகர சபையிடமிருந்து நூல் நிலையத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டனர். இது மிகவும் வருந்துதற்குரியதாயிற்று. இதன்பின் அவர் வித்யாபீடத்திலோ குஜராத்திலோ தங்கவேயில்லை. வெளியேற முன்பே முடிவு செய்திருந்தாலும் இந்த நிகழ்ச்சியினால் உடனே விடை பெறவேண்டியதாயிற்று.

இதற்கு முன்னால் ஒருமுறை அவர் சிறை செல்ல நேர்ந்தது. ஆசிரமம் கலைக்கப்பட்டபின் காந்திஜி மீண்டும் சத்யாக்கிரகம் மேற்கொண்டபோது, இவரும் சேர்ந்து கொண்டார். சர்க்கார் அவரை ஹைதராபாத் சிறையில் அடைத்தது. ஒருமுறை சிறந்த சமூக சேவகர் ஸ்ரீ டாங்கே அவருடன் சிறைத் தோழராயிருந்தார். இருவரிடையே நிறைய பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. "காகா சாஹப் இங்கேதான் "மார்க்ஸ்" பற்றிப் படித்தார். கீதையை விடச் சிறந்த நூல் வேறில்லை என்று நிரூபிக்கவும், கீதையே தனி மனிதன் வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி எனவும், சமூக வாழ்வின் அனைத்து நல்லியல்புகளும் அதில் அடங்கியுள்ளன

வென்றும் அவர் டாங்கேக்காக மராத்தியில் ஒரு கட்டுரை எழுதினார். ''கீதேசே சமாஜ் ரசனா சாஸ்த்ர'' என்ற தலைப்பில் கீதையில் கூறப்பட்டுள்ள தெய்விகக் குணங்களைக் காகா சாஹப் மனித சமுதாயக் கோட்பாடுகளாக எடுத்துக்காட்டியுள்ளார். குஜராத்தியில் ''கீதா தர்மம்'' என்ற பெயரில் இது மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

# சுதந்திர வாழ்வும் தேசிய மொழியும்

காகா சாஹப் வாழ்க்கையில் இன்னோர் அத்தியாயம் முடிந்தது. இப்போது அவர் ஒரு சுதந்திரப் பறவை. 1934-இல் அவர் சிறையிலிருந்து வெளிவந்தபோது, தேசத்தில் காந்திஜியின் "ஹரிஜன் யாத்திரை" நடந்துகொண்டிருந்தது. என்றும் தேசாந்திரியாக இருப்பவருக்கு இதைவிட வேறென்ன வாய்ப்பு வேண்டும்? அவர் காந்திஜியுடன் சிந்து, பஞ்சாப், உத்தரப் பிரதேசம், பீஹார், வங்காளம் ஆகிய வட மாநிலங்களில் சுற்றுப் பயணம் செய்தார். இந்த யாத்திரையின்போது தேசியக் கல்வித் திட்டத்தின் புதுப் புது அம்சங்களைப்பற்றிக் காந்திஜி எடுத்துக் கூறினார். ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு தொண்டர் சென்று குடியேறி, அங்குள்ள வாழ்க்கைநெறியோடு இணைந்து, கல்வி புகட்டவேண்டும் எனக் கூறினார்.

காகா சாஹப் இந்தக் கருத்தைப் பரப்புவதற்காக மஹாராஷ்டிரத்திலும் குஜராத்திலும் பயணம் செய்தார். தமக்காக அவர் குஜராத்தில் ஒரு கிராமத்தைத் தேர்ந்தெடுத்தார். ஆனால் அங்கே சென்று உடனே வசிக்க முடியவில்லை. காந்திஜிக்கு அண்மையிலேயே அவர் எங்காவது வசிக்க விரும்பினார். எனவே வார்தா செல்ல முடிவு செய்தார். ஆனால் இந்தச் சுதந்திரப் பறவையால் ஓரிடத்தில் நிலைத்திருக்க முடியவில்லை. அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதிய ஒருவர் சரியாகவே சொன்னார்: "கிராமத்தினரைப் பற்றிக் காகா சாஹப் என்னவெல்லாம் பேசியிருக்கிறாரோ—எத்தனை கிராமங்களிலெல்லாம் பல இளைஞர்களை ஊக்குவித்துக் குடியேறச் செய்தாரோ—அவரைப் பொறுத்த மட்டில் அவருக்கென்று திட்டமிட்ட ஒரு கிராம வாழ்க்கை மனத்தளவிலேயே கற்பனையாக நின்று விட்டது. எனவே எந்த அடிப்படைக் கல்வி நாட்டு வளர்ச்சிக்கு இன்றியமையாததென அவர் கருதினாரோ—எந்த ஆதாரக் கல்வித் திட்டம் காந்திஜி நமக்களித்த வரமென்று மகிழ்ந்தாரோ—அதை வடிவமைக்க நினைத்தார். ஆனால், துணை நிற்க முடியவில்லை.

இந்த ஆதாரக் கல்வி பற்றிய அவரது கருத்துக்கள் எழுத்து வடிவில் மட்டுமே கிடைத்துள்ளன. இது காகா சாஹப்பின் சிறந்த கொடை என்று மதிக்கத் தக்கது. கவியுள்ளங் கொண்ட ஒரு கலைஞனிடம் இதை விட நாம் ஏன் அதிகமாக எதிர்பார்க்க வேண்டும்?" (சலன்ஸ் க்ருதி கே பரிவாசக், ஜீலனிகண்ட், 160).

1935-இல் நடந்த மற்றொரு சம்பவம், காகா சாஹப் தம் திறமையை வெளிப்படுத்த ஒரு புதிய வழியமைத்தது. அதில் அவர் செயல்முறைகளை விரிவுபடுத்திச் சென்றார் 1917-இல் அவர் ஹிந்தி மொழியுடன் ஒன்றினார். பல காரணங்களால், ஹிந்தி பிரசாரத்தில் தம் திறமையைக் காட்ட அவருக்குச் சந்தர்ப்பம் கிட்டவில்லை. அதைப்பற்றி அவரே கூறுகிறார்: ''நான் ஆசிரமத்தில் சேர்ந்தவுடன் காந்திஜி ஹிந்தி பிரசார வேலை நிமித்தம் என்னைச் சென்னைக்கு அனுப்ப இருந்தார். நான் தைரியமாக இதை மறுத்தேன். நான் உங்களைத் தேடி வந்திருக்கிறேன். உங்கள் எண்ணங்கள், செயல்முறைகள், சிறப்பியல்புகள் முதலியவற்றை அறிந்துகொள்ளும் ஆசை யோடு வந்தவன் நான். ஸ்வராஜ்யம் பெறும் வழியில் ஹிந்தி பிரசாரம் மிக முக்கியமானது என்று நீங்கள் கருதுவது எனக்குத் தெரியும். இருந்தாலும் ஆசிரமத்தைத் தவிர வேறு எங்கும் வேலை பார்ப்பதற்கு எனக்குத் தோன்றவில்லை.'' (சமன்வய கே சாதக் பட்தே கதம், 158).

''பாபுஜி என் பேச்சை ஏற்றுக்கொண்டார். குஜராத் சமூகத்துடன் இணைந்து தொண்டாற்ற வாய்ப்பளித்தார். இதற்கு நான் பிறவி தோறும் அவருக்குக் கடமைப்பட்டிருப் பேன். ஆனால் பிறகு குஜராத்தை விட்டுவெளியேற நான் முடிவு செய்தபோது அதை ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழி யில்லாமல் போயிற்று. எனவே கடைசியில் ஹிந்தி பிரசார வேலைக்கு நான் அகப்பட்டுக் கொண்டேன்.''

குஜராத்தை விட்டுச் செல்ல காகா முடிவு செய்தபோது, தென்னிந்தியாவிற்குச் சென்று ஹிந்தி பிரசார வேலையை நிர் வகிக்குமாறு காந்திஜி கூறினார். ஹிந்தி ஸாஹித்ய சம்மேளனம் நான்கு தென் மாநிலங்களின் ஹிந்தி பிரசாரம் சரிவரச் செய்ய முடியாதபோது—அவர் அதை ஏற்றுக்கொண்டு சுதந்திரமாகச் செய்ய ஆரம்பித்தார். 1934 டிசம்பரில் காகா இந்த வேலை யில் இறங்கினார். பிரசாரத்திற்குத் தேவையான பணத்தை யும் அவரே தேடிக்கொள்ள வேண்டுமென்று காந்திஜி கூறினார். இவ்வாறு அவரது வாழ்க்கையில் ஹிந்தி நுழைந்தது. இரண்டு மாதங்கள் தெற்கே பயணம் செய்த காகா பாரதப் பண் பாட்டைப் பறைசாற்றும் ஹிந்தி மொழி பன்னிரண்டு கோடி மக்களின் தாய்மொழி என்பதை எடுத்துரைத்தார். இதையே தேசிய மொழியாக ஒப்புக் கொள்வதால் நமது பண்பாடு வலிமையும், சிறப்பும் பெறும் என்றார்.

மக்கள் இந்தக் கருத்தை வரவேற்றனர். பணமும் கொடுத்தனர். இந்த ஏற்பாடெல்லாம் முடிந்து, காகா 1935—இல் வார்தா திரும்பினார். அதற்குள் அவர் ஹிந்தியில் ஆழ்ந்து போயிருந்தார். அதே சமயம் ஹிந்தி இலக்கிய மாநாடு இந்தோரில் நடந்தது. தென் மாநிலங்கள் நான்கைத் தவிர, பிற இடங்களில் ஹிந்தி மொழியைத் திட்டமிட்டுப் பிரசாரம் செய்ய வேண்டுமெனக் காந்திஜி கூறினார். ஸ்ரீ புருஷோத்தம் தாஸ் டாண்டன் இக்கருத்தை உற்சாகமாக வரவேற்றார். இது இலக்கிய மாநாட்டின் சார்பாக நடைபெற வேண்டும் எனக் கூறி, காகா சாஹப்பை அதன் உறுப்பினராக்கினார். பல ஆண்டுகளுக்குப் பிறகு இது குறித்து இவ்வாறு எழுதுகிறார்: ''இப்போது இது எனது வாழ்க்கை இலட்சியமாகிவிட்டது. 1934 முதல் 1940 வரை நான் இதே வேலையை முழு முயற்சியுடனும் மகிழ்ச்சியுடனும் செய்தேன். இதில் நினைத்ததை விட வெற்றி பெற்றேன். எந்தக் குறுக்கீடுமில்லாமல் இந்தக் காரியம் நடந்திராவிடில் இந்த நாட்டின் சரித்திரமே வேறுபட்டிருக்கும். இதற்குப் பின்னால் எனது அநுபவம், இந்திய வரலாற்றை நான் கற்ற விதம், காந்திஜியிடம் கிடைத்த வாழ்க்கை லட்சியம்—இவை யாவும் சேர்ந்திருந்தன.''

ஹிந்தி பிரசார வேலையில் நேரிட்ட தடங்கல்கள் ஒருபுறம் இருக்கட்டும். காகாவுடன் ஹிந்தி மொழி பேசாத மாநிலங்களைச் சுற்றிப் பார்த்து அவரது செயல்முறைகளை மதிப்பிடுவோமா?

காகா அஸ்ஸாம் சென்றார். அங்கிருந்து மணிப்பூர் சென்றார். அப்போது அங்கே முன் அனுமதியின்றி நுழைய முடியாது. காகா பிரிட்டிஷ் பிரதிநிதியின் பெயருக்கு 15 ரூபாய் செலவழித்து ஒரு தந்தி கொடுத்தார். தந்தியின் வாசகம் வேலை செய்தது. அனுமதி கிடைத்தது. அதற்குள் பஸ்கள் போய்விட்டிருந்தன. எப்படியோ பகல் முழுவதும் இரயில் பயணம் செய்து பின் இரவில் மணிப்பூர் போய்ச் சேர்ந்தார். அங்கே யாரையும் தெரியாது. எப்படியோ தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு ஒரு பிரசங்கம் செய்தார். அடுத்த நாள் திரும்பிவிட்டார். பல ஆண்டுகட்குப் பின்னர் காகா மீண்டும் அங்கே செல்ல நேர்ந்தது. அங்கு ஏற்பட்டிருந்த முன்னேற்றம் கண்டு காகா திகைத்துப் போனார். மக்கள் பல ஹிந்தி மொழி நிலையங்களை நிறுவியிருந்தனர். இலக்கிய சர்ச்சைகளும் நடந்தன. அங்கிருந்த மக்கள் காகாவிடம் கூறினர். ''பல ஆண்டுகளுக்குமுன் நீங்கள் ஒரு நாள் வந்து ஒரு பிரசங்கம் செய்தீர்கள். மராத்தியர்களும் அஸ்ஸாமியர்களும் உங்களை உடனே புரிந்துகொண்டார்கள். அவர்கள்

துணையுடன் என்னவெல்லாம் செய்ய முடிந்ததோ, அவற்றை நீங்களே பாருங்கள். எங்களுக்கு இதில் மகிழ்ச்சியும் பெருமையும் கூட.''

யாருக்குமே இந்த வெற்றியினால் பெருமிதம் ஏற்படும். இதே போல் கேரள யாத்திரையில் சுவைமிக்க அநுபவங்கள் நம் கண்களைத் திறப்பவையாகும். காகா அங்குள்ள மக்களிடம் மேலே ஆகவேண்டியதைப்பற்றிப் பேசினார். மறுநாள் பொழுது விடிந்தவுடன் ஓர் ஆங்கில ஏடு எழுதியிருந்ததைக் கண்ணுற்ற போது, அது கற்பனைக்கும் எட்டாததாயிருந்தது. பெரிய கொட்டை எழுத்துக்களில் ''வடக்கேயிருந்து மீண்டும் படையெடுப்பு.''; ''காகா சாஹப் ஹிந்தி பிரசாரம் செய்ய தென்னகம் வந்துள்ளார். இன்று கேரளம் வருகிறார்.''

காகாவிற்கு மிகவும் மகிழ்ச்சி. ஆனால் நண்பர்களுக்கோ என்ன செய்வதென்று பிரச்சினை.

காகா சொன்னார். ''நானோ கல்விப் பிரசாரகன். இதனால் வாய்ப்பை நழுவ விடமாட்டேன்.''

யார் பத்திரிகையில் அப்படி எழுதினார்களோ அவர்களைப் பற்றி விசாரித்துத் தெரிந்துகொண்டு, தம் கூட்டத்திற்கு வருமாறு அழைத்தார். திகைத்துப் போன அவர்கள் தம் கருத்தைச் சொல்ல வந்தனர். காகா தம் உரையை இவ்வாறு தொடங்கினார்.

''சகோதரர்களே! நீங்கள் ஒன்றை மறந்துவிட்டீர்கள். நான் வடக்கத்தியன் இல்லை; தென்னிந்தியனும் இல்லை. இடைப்பட்ட பிரதேசத்தில் சற்றே மேற்கே தள்ளியுள்ள மாநிலத்தைச் சேர்ந்தவன். வடக்கே வசிப்பவர்கள் தெற்கே படையெடுத்தால் அவர்களை நாங்கள் தடுத்து நிறுத்துவோம். மகாராஷ்டிரர்களை அவர்கள் எல்லோரும் தெற்கத்தியர் என்கிறார்கள். ஹிந்தி தேசிய மொழியானாலும், என் தாய்மொழி மராத்திதான். வடக்குச் சேனையுடன் சேர்ந்து நான் ஏன் போரிடவேண்டும்? உங்களுக்குத் தலைவனாகி நான் வடக்கோடு போரிட மாட்டேனா?

தொடக்கமே இப்படி விந்தையாக அமைந்தபோது, சந்தேக மேகங்கள் விலகலாயின. ''ஒரு சிலர்—புகழ்மிக்க பிரமுகர்கள்—அவர்கள் இந்நாட்டவரோ, அயல்நாட்டவரோ—பொதுமக்களை ஆண்டு வருகிறார்கள். அவர்கள் நமது மக்கள் பேசும் மொழியை நசுக்குகிறார்கள்.''

முற்காலத்தில் ஆரியர் வடக்கே குடியேறினர். பிறகு தெற்கே வந்து வடமொழியைப் பரப்பினர். நான் வடமொழி உபாசகன். நீங்கள் வடமொழியை விரும்பிப் படிக்கிறீர்கள்.

பிறகு பட்டாணியரும் முகம்மதியரும் வந்தனர். அவரது மத மொழி அரபு மொழி—கலாசார மொழி பாரசீகம், இந்த மொழிகள் அரசாண்டன. இவை நமது வடநாட்டு மொழியுடன் கலக்க உருது மொழி தோன்றியது. பிறகு மேற்கேயிருந்து அந்நியர் வந்தார்கள்—இந்த வரலாறு உங்களுக்குத் தெரியும். அவர்கள் அரசு நடந்துகொண்டிருக்கிறது. இவர்கள் மொழிதான் ஆங்கிலம். இது நமது மக்கள் மொழியாகாது. இந்த மொழியைப்பற்றி விரிவாக உங்களுக்குச் சொல்லுமுன் நான் சொல்ல வந்ததைச் சொல்கிறேன். உங்கள்மீது யாராவது படையெடுத்து வந்தால் எல்லாரும் ஒன்று திரண்டு அவர்களை எதிர்க்கிறீர்கள். அவரவர் உயிரைக் காத்துக்கொள்வது பெரிய காரியமாகிவிட்டது. ஆபத்து நேர்ந்தவுடன், கதவுகளை மூடிவிட்டு, உள்ளே உட்கார்ந்து கொண்டு நம்மைக் காப்பாற்றிக் கொள்வதைவிட, படையெடுத்தவர்மீது நீங்கள் ஏன் படையெடுக்கக்கூடாது? பிந்தைய பத்தாயிரம் ஆண்டுகளில் கேரளத்தில் தோன்றிய மகாபுருஷர் யார்? ஐயமின்றி, ஆதிசங்கரர்தான். கேரளத்து நம்பூதிரி பிராமணர் அவர். கேரளத்தைக் காப்பாற்ற அவர் கலாசாரச் சுவர் எழுப்பவில்லை. அவர் வடக்கே வாழ்ந்தவரது மொழியைக் கற்றுக்கொண்டு அவர்களை எதிர்த்து நின்றார். தனிப்பட்ட ஒரு எளிய கேரள பிராமணன், தேச முழுமையும் சென்று—ஆங்காங்கே வித்வான்களைச் சந்தித்து வாத விவாதம் செய்தார். வடமொழியைக் கற்றுத் தெரிந்து—சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்று—திக் விஜயம் செய்தார். தேசம் முழுவதையும் வெற்றி கண்டு நான்கு மூலைகளிலும் மடங்களை நிறுவினார். அவை இன்றும் நிலைத்து நிற்கின்றன. மேற்கே துவாரகைக்கு அருகில், கிழக்கே ஜகன்னாத் பூரியில், வடக்கே இமயத்தின் மடியில் ஜோஷி மடம், தெற்கே சிருங்கேரி—கன்னியாகுமரி. அப்போது முதல் ஆதிசங்கரரின் சீடர்கள் இங்கெல்லாம் மதப்பிரசாரம் செய்து வருகின்றனர்.

''பிராமணர்கள், முஸ்லீம்கள், ஆங்கில அதிகாரிகள், கிறித்துவ மிஷனெரிகள்—இவர்கள் யாருமே நம்மை ஆளவேண்டும் என்று நாம் விரும்பியதில்லை. இந்திய மக்களின் அரசு வேண்டும். இங்கே மக்களது மொழி வழக்காற்றிலிருக்க வேண்டும். கேரள நாட்டரசு ஆங்கிலத்திலோ, ஹிந்தியிலோ நடக்காமல், மலையாளத்தில் நடக்க வேண்டும்.''

''பாரத ஒற்றுமையையும் காக்க வேண்டுமல்லவா? ஒரு பொதுவான தேசிய மொழியிருந்தால்தான் இது முடியும். நமது திறமையோ. சுதந்திரமோ ஒற்றுமையின்றி நிலைபெறமாட்டா. உலக அரங்கிலும் நம் பெருமை நிலைபெற முடியாது. நாட்டு

மக்களில் பெரும்பாலோர் பேசும் மொழிதான் தேசிய மொழியாக முடியும். எனவே மலையாளத்தோடு, வடக்குவாழ் மக்களது மொழியான ஹிந்தியையும், பயிலுங்கள். பிறகு ஸ்ரீ ஆதிசங்கரரைப் போல வடக்கே படையெடுக்கலாம். உங்கள் நலனைப் பார்த்துக் கொண்டு முடங்கியிருக்க வேண்டுமா? அல்லது எல்லா வகையிலும் ஒற்றுமையை வளர்க்கும் மொழியைக் கற்று, எங்கும் சுற்றி வந்து வாழ வேண்டுமா?

''வடநாட்டை விட்டு நீங்கள் தென்னிந்தியர்கள், ஆங்கிலேயர் நிழலில் வாழ விரும்பினால்—நாட்டைக் கூறு போடுவதாகும். பிறகு ஒவ்வொரு துண்டாக நாடு படிப்படியாக அந்நியர் கைப் படும். நெருக்கடி நேரும். இதைத் தவிர்க்க ஹிந்தி மொழியைக் கற்று அதைப் பரப்பும் பணியை மேற்கொள்ளுங்கள். ஆதிசங்கரர் செய்த அதே பணியை இப்போது வேறு முறையில் செய்து—நாட்டு மக்கள் ஒற்றுமையை வளர்க்க வேண்டும்.'' இவ்வுரையின் எதிரொலியில் முழு எதிர்ப்பும் கரைந்துபோய்க் கேரளத்தில் ஹிந்திப் பிரசார இயக்கம் அவர்களது துணையாலேயே மிகப் பெருமளவில் வெற்றி பெற்றது. (சமன்வய கே சாதக், பட்டேதகதம், 159–161).

காகாவின் இந்தச் சொற்பொழிவிலே அவரது சிந்தனை யோட்டமும் செயல் திறனும் காணக் கிடைப்பதோடு, தேசிய மொழிப் பிரசாரம் ஏன் வேண்டும், எப்படியிருக்க வேண்டும் என்ற வினாக்களுக்கும் விடை கிடைக்கின்றது.

இதுவே சரியான வழிமுறையான சிந்தனையோட்டம்; ஆனால், ஏனோ நாம் விலகிச் சென்றுவிட—அதன் பயன்களை இன்று அநுபவிக்கிறோம்.

# தேசிய மொழியின் உண்மை வடிவம்

ஹிந்தி தேசிய மொழியாவது குறித்து எப்படிப்பட்ட விவாதங்கள் எழுந்தனவோ, அவற்றை உளவியல் அடிப்படையில் புரிந்துகொள்ளவும்—பிறர் புரிந்துகொள்ளச் செய்யவும் காகா சாஹப் மிகச் செம்மையான முயற்சிகள் செய்தார். எல்லா இடங்களிலும் கருத்து வேற்றுமைகள் இருப்பது இயற்கையென்றாலும், காகா சாஹப் எதையும் மனத்தில் முன்கூட்டித் தீர்மானிக்காமல் தெளிவோடு சிந்தனை செய்தார். வரலாற்றை மேற்கோள் காட்டி, ஆங்கிலேயர் பின்பற்றிய பிரித்தாளும் சூழ்ச்சியின் காரணமாக மொழிப் பிரச்சினை உருவாகியிருப்பதைத் தெரிவித்தார். நாடு சுதந்திரமடைந்த பின்னும் இப் பிரச்சினை தீர்வதற்கு மாறாகச் சிக்கலாகிக்கொண்டு வருகிறது. ஒருவரையொருவர் குற்றம் சாட்டியபடி தாம் முன்னேறிக் கொண்டிருந்தாலும், நல்ல மனிதர்களாக இருக்கவேண்டிய நிலையிலிருந்து பின்தங்கியிருக்கிறோம். அறிவியல் வளர்ச்சிகள் பெருகப் பெருக மனித மனமோ அவன் கை நழுவிப் போய்க் கொண்டிருக்கிறது.

இதனுடைய தொடக்கம் எப்போது? 1857-ஆம் ஆண்டு, முதல் சுதந்திரப் போராட்டத்தில் நாம் தோல்வியுற்றதையும், 1885-இல் இந்தியத் தேசியக் காங்கிரஸ் தோன்றியதையும் நாமறிவோம். சிப்பாய்க் கலகத்தை ஒடுக்கியபின் ஆங்கிலேய அரசு முதலில் இந்துக்கள் மீதுதான் கை வைத்தது. ''இது உங்களுடைய நாடு. முஸ்லிம்கள் வெளியிலிருந்து வந்தவர்கள். உங்களைக் கட்டாயப் படுத்தி இஸ்லாமியராக்கியுள்ளனர். இந்நிலையிலிருந்து விடுபடும் வாய்ப்பை நாங்கள் தருகிறோம். எங்கள் மொழியைக் கற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்குப் பெரிய பெரிய பதவிகள் கிடைக்கும். நீங்கள் அரசாளலாம். எங்களிடம் நன்றியோடிருந்தால் போதும்'' என்றனர்.

உண்மையில் இந்துக்கள் ஆங்கிலேயரது மொழியை மட்டும் கற்றுக்கொள்ளவில்லை. அவர்களது நாகரிகத்தையும் நேசிக்கலாயினர். முஸ்லீம்களுக்கோ இந்த எண்ணமில்லை. ஆங்கிலேயர் வருகைக்குமுன் அவர்களே இங்கு அரசர்கள். இவர்களிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றிய ஆங்கிலேயர்களை அவர்கள் எதிரிகளாகவே மதித்தனர். எனவே அவர்களது மொழியில் படிக்க

விரும்பவில்லை. இந்துக்கள் ஆங்கிலம் படித்து, வரலாறும் பயின்றவுடன், சுதந்திரப் பேச்சுப் பேசலாயினர். காங்கிரஸ் இயக்கம் தோன்றியது. இது ஆங்கிலேயர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் முஸ்லீம்களைத் தம் வசப்படுத்த முயன்றனர். ''நீங்கள் தான் இந்நாட்டை ஆண்டு வந்தவர்கள். இந்துக்கள் குடியாட்சி கேட்கின்றனர். அப்படிக் கிடைத்தால் அவர்கள் கை ஓங்கிவிடும். உங்களுக்கு எந்த இடமுமிராது. நீங்கள் காங்கிரஸை எதிர்த்து நில்லுங்கள்; ஆங்கிலம் படியுங்கள், உங்களுக்கு நல்ல நல்ல வேலைகளும் உயர்ந்த பதவிகளும் கிடைக்கும். எங்களிடமும் நல்லெண்ணம் மட்டும் கொண்டிருந்தால் போதும்.''

முஸ்லீம்கள் காங்கிரஸை எதிர்த்தனர். அதை இந்துக்களின் கூடாரம் என்றனர்.

இங்கே பழைமை வழக்கங்களை விரும்பிய இந்துக்கள் ஒரு சாரார் இருந்தனர், அவர்கள் சம்ஸ்கிருதம் கலந்த ஹிந்தியை விரும்பினர். உருதுமொழி முஸ்லீம்கள் மொழியென்பதும், வேற்று நாட்டு எழுத்தில் எழுதப்பட்டு வந்ததென்பதும் அவர்கள் கருத்து. ஆங்கில ஆட்சியை விரும்பியவர்கள் சிலர் இருந்தனர். ஆனால் ஆங்கில மொழியோ நாட்டு முன்னேற்றத்திற்குத் தடையென நினைத்தனர். இவ்வாறு உருது மொழிக்கும் ஆங்கிலத்திற்கும் எதிரிகளான இந்துக்கள் ஹிந்தியை ஏற்றுக்கொள்ளலாயினர்.

பட்டாணியரும், முஸ்லீம்களும் ஆண்ட காலத்தில் தேசியப் பண்புகள் மலர்ச்சி பெற்றதுபோல் இன்று போற்றப்படவில்லையென்பதை அவர்களுக்கு யார் எடுத்துச் சொல்வது? ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடுவதற்கு இந்து, முஸ்லீம், கிறித்தவர், பார்சி ஆகிய வேற்றுமைகளை மறந்து துறந்துவிட வேண்டும்.

இந்தச் சமயத்தில்தான் காந்திஜி ஓர் ஆக்கப்பணியில் இறங்கினார். எல்லோரையும் ஒன்றுகூட்டிச் சுதந்திரப் போர் நிகழ்த்த விரும்பினார். ஒரு பொதுவான தேசிய மொழி அப்போது இன்றியமையாத தேவையாகிவிட்டது. எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய ஹிந்தி மொழிதான் தேசிய மொழியாக முடியும். வட இந்தியர்கள் காந்திஜியின் ஹிந்தியை ஒப்புக்கொண்டனர். ஆனால் உருது மொழியை எதிர்த்தனர்.

மற்றொரு புறம் ஜவஹர்லால் போன்றவர்கள் ஆங்கில அரசை எதிர்த்தாலும் மேனாட்டு நாகரிகத்தை எதிர்க்கவில்லை. ஆங்கில இலக்கியத்தை அவர் மிகவும் விரும்பினார். அவரோ ஆங்கிலமே தேசிய மொழியாகலாமென நினைத்தார். காந்திஜியின்

கொள்கைகளில் ஈடுபட்டு ஹிந்தியை அவரும் ஏற்றபோதிலும், அவரது உள் மனத்தில் ஆங்கிலம் ஆட்சி செய்தது.

முஸ்லீம்களும் காந்திஜியின் ஹிந்தியை ஒப்புக்கொள்ள முடிய வில்லை. தேசப்பற்றுமிக்க ஒரு முஸ்லீம் தலைவர் தமது எண்ணங் களை விளக்கி, தங்களுடைய விவாதத்தைக் காகாவிடம் சொன்னார்.

''தெற்கே வசிக்கும் நீங்கள் எங்களைச் சரியாகப் புரிந்து கொள்ள மறுக்கிறீர்கள். எனவே கவனமாகக் கேளுங்கள். வடக்கே எங்கள் இராஜ்யமிருந்தது. எப்படி இன்று தேச முழுவதிலும் ஆங்கிலம் வழக்கிலுள்ளதோ, அதேபோல அப்போது இந்துக் களும் முஸ்லீம்களும் பாரசீக மொழி கற்றனர். உலகெங்குமே கலாசார மொழியாக இதுவே விளங்கியது. எங்களது மத மொழி யான அரபு மொழியும் ஒரு சிறந்த மொழியே. இரண்டையுமே இந்நாட்டு மக்கள், இந்து—முஸ்லீம் யாராயினும் முறைப்படி கற்றனர். எங்கள் அரசு பாரசீக மொழியில் நடந்தது. இருந்தும் மக்கள் மாண்பினைப் புரிந்துகொண்ட நாங்கள் அரபு மொழியை யும், பாரசீக மொழியையும் விடுத்து ''கடிபோலி'' எனப்பட்ட ஒருவகை ஹிந்தி மொழியைத் தேசிய மொழியாக ஏற்றுக்கொண் டோம். இன்று எவ்வாறு பாரத மொழிகள் அனைத்திலும் ஆங்கிலச் சொற்கள் நுழைந்துள்ளனவோ அதேபோல் ''கடி போலி''யிலும் அரபு மொழியும், பார்சி மொழியும் அதிக அளவில் கலந்திருந்தன. அந்த் மொழியின் பெயர்தான் உருது. அது முழுக்க முழுக்க மக்கள் மொழி. இந்த நாட்டில் நாங்கள அரசாள வேண்டுமானால், உருது போன்ற மக்கள் மொழியே தேசிய மொழி யாக வேண்டும். இப்படி முடிவெடுத்துத்தான் உருது மொழியைத் தேர்ந்தெடுத்தோம்.''

''இப்பொழுது எழுத்து வடிவத்தை எடுத்துக்கொள்ளுங்கள். இந்தியாவின் ஒவ்வொரு மொழிக்கும் வரிவடிவம் உண்டு. தேசிய மொழிக்கு எப்படி எழுத்து வடிவம் அமைய வேண்டுமென ஆலோசித்தோம். இன்று எப்படி ரோமன் எழுத்துக்களைப் பன் னாட்டு வடிவமாகப் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளார்களோ, அதே போல் அந்த நாட்களில் ஆசியா, தெற்கு ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆகிய மூன்று கண்டங்களில் பார்சி மொழி வழக்கி லிருந்தது. அதையே நாங்கள் உருதுவுக்கு ஏற்றுக்கொள்ள விரும்பினோம். அதை முழுவதும் தேசியமயமாக்கிச் சில திருத்தங் களும் செய்தோம். ஆளுபவர்களாக இருந்த நாங்கள் எங்களது அதிகாரத்தையும், ஆசைகளையும் விட்டுக்கொடுத்து மக்களுக்குப் பிடித்த உருது மொழியைத் தேசிய மொழியாக்கிப் பணியாற்றி னோம். இப்போது இந்த அனைத்திந்திய மொழியை விடுத்து,

இந்துக்களின் விருப்பப்படி ஹிந்தியை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது எந்த அளவிற்கு நியாயமானது? நீங்களும் சிந்தியுங்கள். உருது மொழியைப் பார்சி எழுத்தில் எழுதுவது மிக எளிது. இதை விட்டு ரோமன் எழுத்துக்களில்தான் எழுதவேண்டுமென்றாலும் சரி. இதை விட்டு நாகரி எழுத்துக்களை ஏன் எங்கள்மேல் சுமத்துகிறீர்கள்?'' [சமன்வய கே சாதக், 166—67]

பல முஸ்லீம் நண்பர்களுடைய கருத்துக்களைத் திரட்டி அந்தத் தலைவர் கூறிய வார்த்தைகள்தாம் இவை. என்னதான் திருத்தங்கள் செய்தாலும் அரபு—பார்சி சொற்களை விலக்கா விடினும், ஹிந்தி மொழி வளர்ச்சியில் முஸ்லீம்கள் முழுமனத்துடன் பங்குகொள்ளமாட்டார்கள் என்று காகாவிற்குத் தோன்றியது. தேசபக்தியுள்ள ஒரு சில முஸ்லீம்கள் முன்வந்தாலும், முழு முஸ்லீம் சமுதாயத்தின் ஒருமித்த ஆதரவு ஹிந்திக்குக் கிடைக்காது என்று தோன்றியது.

இந்த நிலைமையில் பண்டிட் சுந்தர்லால், காந்திஜியிடம் சொன்னார்: ''ஹிந்தி பிரசாரம் எத்தனை தீவிரமாகச் செய்தாலும் சரி, முற்றிலும் உருதுச் சொற்களை ஏற்றுக்கொண்டாலும் சரி, 'ஹிந்தி என்ற பெயர் இருக்கும்வரை' 'இந்து'க்களின் செயலாகவே இது கருதப்படும். எனவே இரண்டு பெயர்களையும் தவிர்த்து, ஹிந்துஸ்தானி என்று பெயரிட்டு தேவநாகரி, உருது இரண்டு எழுத்து வடிவங்களையும் பயன்படுத்துங்கள். அப்போது தான் முஸ்லீம்களின் ஐயங்கள் மறையும்.''

சுந்தர்லால் கூற்றைக் கேட்ட காந்திஜி ஹிந்தி பிரசார நடவடிக்கைகளில் சில மாறுதல்கள் செய்ய எண்ணினார். காகாவின் அநுபவம் வேறாக இருந்தது. ''பல முஸ்லீம்கள் உருதுவை ஹிந்துஸ்தானி என்றே அழைக்கின்றனர். எனவே சாதாரண மக்கள் ஹிந்துஸ்தானி என்றால் உருது என்றே நினைப்பார்கள். இரண்டு எழுத்து வடிவங்கள் இருந்தால் தேசம் முழுவதிலும் இந்த மொழியைப் பரப்ப முடியாது. சம்ஸ்கிருதம் அறிந்துள்ள காரணத்தால் வங்காளிகளுக்கும், தென்னிந்தியர்களுக்கும் தேவ நாகரி வடிவம் ஏற்கெனவே தெரியும். நாட்டு ஒற்றுமைக்காகக் கஷ்டப்பட்டு நாகரி லிபி கற்றுக்கொள்ள மக்கள் விரும்பவில்லை. ஆனால் இரண்டு லிபிகள் பயில வேண்டுமென்ற அளவுக்குத் தேசிய உணர்ச்சி ஏற்படுமெனச் சொல்ல முடியாது. நாகரி லிபியை அனைவரும் ஒப்புக்கொள்ள சில திருத்தங்கள் செய்து வருகிறேன். அதிலேயே எனது முழுச் சக்தியும் செலவழிந்துவிட்டது. உருது லிபியைப் பரப்புவது எளிதன்று. அதுவும் முழுமையானதல்ல. எழுதும்போது பல பிழைகள் வரும். உச்சரிப்புக்கும் எழுத்துக்கும்

ஒற்றுமையில்லை. எனவே அதைப் பொதுவானதாக ஏற்றுக் கொள்ள முடியாது'' என்றார் காகா.

''சில முஸ்லீம்கள் வெளிப்படையாகவே சொல்கிறார்கள், ஹிந்துஸ்தானி என்ற பெயரில் காந்திஜி ஹிந்தியைத்தான் புகுத்து கிறாரென்று. எனவே நாம் இதில் சேரக்கூடாது.'' வட இந்தியர் களோ ஹிந்துஸ்தானி என்ற பெயரில் உருதுதான் பேசப்படும் என்கிறார்கள்.

எல்லாவற்றையும் கேட்ட பிறகுகூட, காந்திஜி தமது கொள்கையில் உறுதியாக நின்றார். காகா சாஹப் அவர் சொன்ன படி செய்யவேண்டியிருந்தது. அதற்கு அவர் இசைவும் தெரிவித் தார். அதனால்தான் ஹிந்திப் பணியில் காகா ஈடுபட்டார்.

1935-இல் இந்தோர் மாநாட்டில், ஹிந்தி மொழியைப் பரப்பு வதற்காக ''ராஷ்டிரபாஷா பிரசார சமிதி'' நிறுவப்பட்டது. இதை நடத்தும் பொறுப்பு காகா சாஹப்பிடம் ஒப்படைக்கப்பட்டது. அதன் அலுவலகம் வார்தாவில் அமைக்கப்பட்டது. 8 மாநிலங் களில் காகா சாஹப் பிரசார வேலையை மேற்கொண்டார். ஒவ் வோர் இடத்திலும் ஒரு நிறுவனமும் அமைத்தார். ஸ்ரீ புருஷோத்தம்தாஸ் டாண்டனும், காகாவும் மிக நெருங்கிய நண்பர்களாயிருந்தனர். எனினும் காந்திஜியின் ஹிந்தி பிரசாரம், இரண்டு லிபிகளின் வழக்காறு இவைபற்றி கருத்து வேறுபாடுகள் வளரலாயின. அடிப்படையிலேயே இத்தனை எதிர்ப்புக்கள் இருந்தமையால், காந்திஜியின் திட்டத்தை மாநாட்டுப் பணி களுடன் இணைக்காமல் தனியாகப் பரிசீலிக்க வேண்டுமென்றனர்.

நண்பர் சொன்னார்: ''நீங்கள்தான் எல்லா ஏற்பாடும் செய் திருக்கிறீர்கள். காந்திஜியே இதை சம்மேளனத்திலிருந்து பிரிக்க விரும்பினால் எனக்கு உடன்பாடு. ஆனால் அவரது புதிய ஹிந்துஸ்தானிக் கொள்கையை என்னால் ஏற்க முடியாது.'' எப்படியோ வேறு வழியின்றி அவர் சம்மதித்தார். காகா காந்திஜி யிடம் சென்று சொன்னார்: 'பாபுஜீ, ஹிந்தி பிரசார விஷயத்தில் நீங்கள் பேசாமலிருக்க முடியுமானால், எட்டு பிரதேசங்களின் பிரசார வேலையை சம்மேளனத்திலிருந்து பிரித்துவிடுவோம். டாண்டன் ஒப்புக்கொண்டுள்ளார். அவர் பேசிக்கொள்வார். சுதந்திரம் கிடைத்த பிறகு, முறைப்படி பிரசாரம் செய்யலாம். எல்லாவற்றையும் சம்மேளனத்திடம் ஒப்படைத்தால் பாரதத்தில் ஹிந்துஸ்தானி என்ற பெயரில் இரண்டு லிபிகளைப் பரப்புவது இயலாத செயல். நான் இதை இப்போது எடுத்துச் சொன்னால் மக்களுக்குப் புரியாது. அனைத்து மொழியினரும் நாகரி லிபியை ஏற்றுக்கொள்ள நான் முயன்று வருகிறேன். கர்நாடகத்தில்

தொடங்கிவிட்டோம். வங்காளத்தில் கடுமையான எதிர்ப்பு. அங்கே வங்க மொழி இலக்கியத்தை நாகரி லிபியில் வெளியிடுவோம். டாண்டனிடம் நான் அனுமதி பெற்றிருக்கிறேன். இந்நிலையில் பாரதத்தின் தேசிய மொழிப் பிரசாரத்தில் இரண்டு லிபி சொல்லித்தர இயலுமென எனக்குத் தோன்றவில்லை.'' [சமன்வய கே சாதக், 168]

அப்பொழுது காந்திஜி ஒப்புக்கொள்ளவில்லை. அவர்களது மற்ற வேண்டுகோளுக்கும் அவர் செவிசாய்க்கவில்லை. தேசத்தில் இதற்கு எதிர்ப்பு ஏற்பட டாண்டன் காந்திஜியிடம் கூறினார்: ''எட்டு மாநிலங்களில் காகா சாஹப் துணிவோடு பிரசாரம் செய்வதை ஏற்றுக்கொள்கிறேன். இவற்றைச் சம்மேளனத்தின் பெயரில் செய்வதால் என்னிடம் ஒப்படைத்துவிடுங்கள்'' என்றார்.

''ஹிந்துஸ்தானி என்ற பெரிய புது நடவடிக்கை வேறு மேற்கொண்டால் உங்களுக்குத் தொந்தரவொன்றும் வராதே?',

டாண்டன் மிகவும் மகிழ்ந்து ''அப்படியே செய்யுங்கள். உங்கள் புது முயற்சிக்கு என் ஆசிகள். எங்கள் வேலையைத் திருப்பித் தாருங்கள். அது போதும்'' என்றார்.

காந்திஜி அவ்வாறே செய்தார். 1942-இல் அவரது தலைமையில் ''ஹிந்துஸ்தானி பிரசார சபா'' நிறுவப்பட்டது. இதற்கிடையே ''வெள்ளையனே வெளியேறு'' இயக்கம் ஆரம்பித்துவிட்டது. எனவே ஹிந்தியைப் பரப்புவதற்கான எல்லா முயற்சிகளும் தேய்ந்து மறைந்து போயின.

# "வெள்ளையனே வெளியேறு" இயக்கம்

1942-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 8ஆம் தேதி பம்பாயில் ''வெள்ளையனே வெளியேறு'' என்ற தேசிய முழக்கம் எதிரொலித்தது. மறுநாளே காந்திஜி முதலிய எல்லாத் தலைவர்களும் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டனர். நாடு முழுமையும் கடும் அடக்குமுறை இடிபோல் இறங்கியது. காகா சாஹேப் 20 நாட்கள் பிரசார வேலைகளில் ஆழ்ந்திருந்தார். பிறகு சர்க்கார் அவரையும் சிறைக்குள் தள்ளிவிட்டது. இம்முறை இவர்கள் தங்கள் பிரதேச மக்களுடன் தொடர்புகொள்ள முடியாமல் செய்துவிட்டனர். காகா காலேல்கர், விநோபா பாவே, கிஷோர்லால், மச்ருவாலா முதலிய தலைவர்களைத் தமிழ் நாட்டிலுள்ள வேலூர் சிறைக்கு அனுப்பினர். கிட்டத்தட்ட மூன்றாண்டுகள் சிறைவாசம். எப்போதும்போலப் படிப்பது, கேட்பது போன்ற செயல்கள் மட்டும் நடந்தன. கீதை, ஞானேஸ்வரி, வானியல் ஆகியவை படித்தார். இரண்டு அகராதிகளை எழுதினார். ''கீதா ரத்னப்ரபா'' என்ற நூலில் கீதையில் பயன்படுத்தியுள்ள தத்துவார்த்தம் மிகுந்த சொற்களைத் திரட்டித் தந்துள்ளார். மற்றொன்று காந்திஜி தொகுத்த "கீதா பதார்த்த கோஷி''ல் கண்ட சிறப்புச் சொற்களுடன் தொடர்புடையது.

இம்முறை ஸ்ரீ கிஷோர்லால் மச்ருவாலாவின் ஒத்துழைப்போடு பிலிப்பைன்ஸ் தீவின் தொழுநோயாளிகளின் வாழ்க்கையைப் பற்றிய கட்டுரையொன்றைக் குஜராத்தியில் மொழிபெயர்த்தார். இந்தச் சுயசரிதை நூலுக்குக் குஜராத்தியில் ''மான கண்டியரோ'' என்று பெயர். குருதேவரின் ''மாலஞ்ச்'' என்பதன் மராத்தி மொழிபெயர்ப்பும் இப்போதுதான் செய்யப்பட்டது. கீதாஞ்சலி, நைவேத்யம் ஆகிய கவிதைகளுக்கு மராத்தியில் விளக்கம் இங்கேதான் எழுதப்பட்டது. நாகரி லிபியைச் சீரமைக்கும் பணியில் முனைந்து, வினோபா—கிஷோர்லால் இருவரது துணையுடன் அதற்கொரு வடிவம் கொடுத்தார். 1935-இல் இந்தோரில் நடைபெற்ற ஹிந்தி இலக்கிய மாநாட்டில் மொழிச் சீர்திருத்தம்பற்றிய கூட்டத்திற்கு இவர் தலைமை ஏற்றார்.

அவர் வேலூர் சிறையிலேயே மூன்றாண்டுகளும் தங்கவில்லை. கொஞ்ச நாட்கள் மத்தியப் பிரதேசத்திலுள்ள சிவனி ''ஸ்பெஷல்'' சிறையிலுமிருந்தார். இங்கிருந்துதான் 1945-இல் விடுதலை

யானார். இதற்குமுன், அதாவது 1935-க்கும் 1945-க்குமிடையே ஹிந்துஸ்தானி மொழி பிரசாரத்திற்குச் செய்த காரியங்களைச் சற்றுக் கவனிப்பது நல்லது.

1938-இல் மிக முக்கிய நிகழ்ச்சியொன்று நடந்தது. காந்திஜி அப்போது சேவாகிராமத்தில் இருந்து வந்தார். அங்கே ஈச்சங்கள்ளிலிருந்து வெல்லம் தயாரிக்கப்பட்டு வந்தது. வங்காளத்தில் இந்த முறை வழக்கத்தில் இருந்தது. குஜராத்தில் புதிய ஈச்சங் கள் அருந்துவது மிகவும் பலத்தைத் தருமெனக் கருதப்பட்டது. ஆகவே பார்சிகள் பலர் அருந்துவதுண்டு. அதிலிருந்து வெல்லமும் தயார் செய்வதை அனைவரும் அறிந்திருந்தனர்.

கிராம குடிசைத் தொழிலாகக் காந்திஜி இந்த வெல்லம் தயாரிப்பதை நடத்தலானார். கூடவே புது ஈச்சங் கள் அருந்தும் திட்டமும் கொண்டுவந்தார். எல்லா ஆசிரமவாசிகளும் அதி காலையில் ஈச்சங் கள் அருந்தலாயினர். 1938-இல் ஜூலை 30ஆம் தேதி காகாவும் தம் தோழர்களுடன் ஈச்சங் கள் குடித்தார். அப்போது அவர் வார்தாவிலிருந்தார். அப்போது அங்கு நாலா பக்கமும் காலரா கண்டிருந்தது. காகாவும் நண்பர்களும் காலரா வால் பீடிக்கப்பட்டனர். பாபுஜிக்குச் செய்தி எட்டியது. மறுநாள் நிலைமை தீவிரமடையவே, சுசீலா நய்யாரையும், அமருதலால் நானாவதியையும் அவர்களிடம் அனுப்பினார். அதற்குள் காகாவின் நண்பர் ஸ்ரீ பாண்டுரங்க புர்கே மரணமடைந்துவிட்டார். இரண்டு நாட்களுக்குப் பிறகு மற்றொரு தோழரான ஸ்ரீ கஜானந்த தாப்கேயும் மறைந்தார். பெண்கள் விடுதியைக் கவனித்துக் கொண்டிருந்த ஆசார்ய நானா ஆட்வலேயும் காலமானார்.

காகா சாஹப் ஹோமியோபதி மருந்துகள் சாப்பிட்டு வந்தார். இருந்தும் ஆகஸ்ட் 42 வரை கொஞ்சமும் குணம் தெரிய வில்லை. அவரது கண்கள் பஞ்சடைந்து குழிவிழுந்தது போலாயின. கைகள் சில்லிட ஆரம்பித்தன. உடனே வைத்தியம் மாற்றப்பட்டது. அலோபதி வைத்தியர் அவருக்கு 200 சிசி குளுகோஸும் ''சலை''னும் ஊசிமூலம் ஏற்றினார்.

மாலைப் பிரார்த்தனை அவரது அறையிலேயே நடந்தது. நல்ல கூட்டம்—பலர் அறைக்கு வெளியே உட்காரவேண்டியதா யிருந்தது. எல்லோரும் கூட்டாகப் பாடல்கள் பாடிப் பஜனை செய்தனர். மஹாதேவ் தேசாய் ''இறைவன் கட்டாயம் நம் குரலுக்குச் செவிசாய்ப்பான்'' என்றார். மறுநாள் காலை காகா சாஹப்பின் முகத்தில் தெளிவு கண்டது. புதுச் சக்தி பிறந்தது. ஆனால் பூரண குணமடைய அவருக்குப் பல நாட்களாயின.

இதற்கிடையில் அவர் கலீல் ஜிப்ரானின் நூலான ''சைன்ட் அண்ட் ஃபோம்'' மராத்தி மொழியாக்கம் செய்தார். பிறகு அது ''ம்ருகஜலாந்தில் மோதி'' என்ற பெயரில் வெளியாயிற்று.

இதைப்பற்றி விவாதம் கிளம்பியது. முக்கியமாகக் காந்திஜியை எதிர்த்த மராத்தியத் தோழர்களை அவர் ஈச்சங் கள்ளில் விஷம் கலந்து கொன்றுவிட்டதாகக் குற்றஞ்சாட்டிப் பத்திரிகைகளில் செய்திவந்தது. காந்திஜிக்கு அவப்பெயர் உண்டாக்கக் கிடைத்த எந்த வழியையும் அவர்கள் விட்டுவைக்கவில்லை. அப்போது காகா சாஹப் போன்ற அவருடைய உண்மை பக்தர்களது மனநிலை எப்படியிருந்திருக்கும் என்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம்.

1934-இல் காந்திஜியின் தலைமையில் குஜராத்தி இலக்கிய சம்மேளனத்தின் பன்னிரெண்டாவது ஆண்டு நிறைவு விழா அஹமதாபாத்தில் நடைபெற்றது. அதன் ஓர் அங்கமாக நடை பெற்ற கலா பரிஷத்தின் தலைவராகக் காகா சாஹப்பும் இருந் தார். இதே ஆண்டில் அவரது குஜராத்திக் கட்டுரைகளின் தொகுப்பு வெளியாயிற்று. ''ஜீவன் விகாஸ்'' என்ற நூலும் இதே ஆண்டில் வெளி வந்தது. காந்திஜி சேவா சங்கமும் இதே ஆண்டில் நிறுவப்பட்டது. ஒவ்வோர் ஆண்டும் இதன் ஆண்டு விழா நடைபெற்றது. இங்கே பல கருத்துக்களும், ஆலோசனை களும் கலந்த விவாதம் நடைபெறும். ஆன்ம வளர்ச்சி பெறுவதே இதன் நோக்கமாகும். இந்தச் சங்கத்தின் மற்றொரு நோக்கம்—காந்தியக் கொள்கைகளைச் செயலாக்கும் தொண்டர்களுக்குத் தேவைக்குத் தக்கபடி பொருளுதவி செய்வதுமாகும். சங்கத்தின் செயல்திட்டங்களுக்கு ஒரு பாதை அமைப்பதற்காக 1938 ஆகஸ்ட்டில் ''சர்வோதயம்'' என்ற ஹிந்தி மாதப் பத்திரிகையும் தொடங்கப்பட்டது. காகா இதன் ஆசிரியரானார். தாதா தர்மாதிகாரி இதன் துணை ஆசிரியரானார். காகா அங்கிருந்த தால் காந்தியக் கருத்துக்கள் மட்டுமல்லாமல், ஆகாய வர்ணனை யும், இமயக் காட்சிகளும்கூட இங்கே இடம் பெற்றன. காகா சாஹப் இவையன்றித் தாமே பல கட்டுரைகள் எழுதி ஹிந்திக்கு அரிய தொண்டாற்றினார். பல காரணங்களால் 1948-இல் இந்தப் பத்திரிகை வெளியீடு நின்றுபோயிற்று.

காகா ஆசிரியராக இருந்த பத்திரிகைகளில் இரண்டு ஆண்டுகள் வெளியான ''சப்கி போலி'' (39–44) பல கோணங்களிலும் மிக முக்கியமானதாகும். வழக்கத்திலுள்ள பிரச்சினைகளைக் கையாள்வதில் காகாவிற்குள்ள திறமையைச் சில நாட்களில் நின்றுவிட்ட பத்திரிகைகளில்கூடப் பார்க்க முடியும். இங்கே இன்னொன்றும் சொல்லித்தான் ஆகவேண்டும். காந்திஜியின்

ஆணைப்படி அவர் ஹிந்துஸ்தானி பிரசார வேலையில் ஈடுபட்டிருந்தாலும், வடமொழி கலந்த ஹிந்தியைத்தான் அவர் கையாண்டார்.

1937-இல் காந்திஜி நாட்டு மக்கள்முன்பு புதிய திட்டமொன்றைச் சமர்ப்பித்தார். இந்த வார்தா கல்வித் திட்டம் பின்னர் ''ஆதாரக் கல்வித் திட்டம்'' என்ற பெயரில் பரவலாயிற்று. இதைப்பற்றி விவாதிக்க நாட்டின் பல பாகங்களிலிருந்தும் கல்வியாளர்களை அழைத்து ஒரு மாநாடு நடத்தத் திட்டமிடப்பட்டது. அனைவரும் இதை வரவேற்றனர். அதே கூட்டத்தில் ஹிந்துஸ்தானி ஆதாரக் கல்விக் கழகம் உருவாக்கப்பட்டு, சேவாகிராமத்தில் அதன் முக்கிய அலுவலகம் அமைந்தது. காகா சாஹப் மிக ஆர்வத்துடன் திட்டம் வகுப்பதுபோன்றவற்றில் துணை செய்தார். சேவாகிராமிலும் வார்தாவிலும் நடைபெற்ற கல்விக் கூட்டங்களிலும் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். ராஷ்டிரபாஷா பிரசார வேலை நிமித்தம் செல்லுமிடங்களில்கூட வார்தா கல்வித் திட்டம் நடைபெறும் பள்ளிகளிலும், நிறுவனங்களிலும் உரைகள் நிகழ்த்தினார். இந்தத் திட்டத்தைப்பற்றித் தமது சொந்தக் கருத்துக்களையும் தமது கோணத்தினின்று எடுத்துரைப்பார். காந்திஜியின் ஒவ்வொரு செயல் திட்டமும் காகாவின் செயல் திட்டமாகவே மாறியிருந்தது.

ஹிந்தி மொழியை எட்டு மாநிலங்களில் பரப்பிய கதையும், சம்மேளனத்திலிருந்து விலகியதும், மற்றைய விவரங்களும் முன்பே தரப்பட்டுள்ளன. இங்கே இன்னொரு கோணத்திலும் இதை ஆராய்வது நல்லது. தென்னிந்தியாவின் ஹிந்தி பிரசார வேலையைத் தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபை கவனித்து வந்தது. அவர் இதன் செயற்குழு உறுப்பினராக இருந்ததால், அவ்வப்பொழுது இந்தப் பகுதிகளில் பயணம் மேற்கொண்டு பிரசாரம் செய்ததுண்டு.

வடக்கேயிருந்த எட்டு மாநிலங்களின் பிரசார வேலை அவர் மீது முழுமையாக விழுந்தது. அவர் அதை வெற்றிகரமாக எப்படிச் செய்தார் என்பது கவனிக்கவேண்டிய விஷயம். சிந்து மாகாணத்தின் முக்கிய நகரங்களில் சென்று உரையாற்றினார். தமது நண்பர் டாக்டர் நாராயண் மல்கானியின் தலைமையில் ஒரு வட்டார அலுவலகம் தொடங்கினார். அவருடன் இரண்டு சிந்தி மாணவர் இருந்தனர். அவர்களைச் செயலாளர்களாக்கினார். மொஹன் சதோராவையும் சென்று பார்த்தார். பண்பாட்டின் காவலர் இத்தகு இடங்களை எவ்வாறு மறக்க முடியும்? பலமுறை அவர் குஜராத் பயணம் செய்தார். ஹிந்தி பிரசாரத்தில் அவருக்குப் பல தொண்டர்கள் இருந்தனர். நாட்டு விடுதலை

இயக்கத்தில் இவ்வாறு ஹிந்தி இரண்டறக் கலந்துவிட்டது. சிந்து, குஜராத், பம்பாய், மஹாராஷ்டிர, நாக, விதர்ப்ப பிரதேசங்களில் பிரசாரகர்களை நியமிக்கத் தேவையே இல்லாமல் போயிற்று. ஆங்காங்கிருந்த ஆசிரியர்களுக்கென சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் ஹிந்தி வகுப்புக்கள் நடந்தன. இதற்கு முன்பும் இங்கு ஹிந்தி கற்பிக்கப்பட்டுவிட்டது. இந்த மாணவர்கள் தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையின் தேர்வுகளில் அமர்ந்து வந்தனர். பின்னர் வார்தா சமிதியுடன் இணையலாயினர்.

மஹாராஷ்டிர முழுமைக்குமாக நிறுவப்பட்ட சங்கத்திற்கு ஸ்ரீ சங்கர் தேவ் தலைவரானார். நானா தர்மாதிகாரி அமைச்சரானார். சுதந்திர இயக்கத்தின் ஓரங்கமாக மாறிவிட்ட ஹிந்தி பிரசாரம் திட்டமிட்டபடி நடக்கலாயிற்று. விதர்ப்பம் மஹாராஷ்டிரத்திலிருந்து வேறுபட்டது. அதில் கிருஷ்ணதாஸ் ஜாஜு, தாதா சர்வாதிகாரி, கண்ணம்வார் (பம்பாயில் பிறகு முதன் மந்திரியானவர்), காகா ஆகியோர் அங்கம் வகித்தனர்.

அலிகார், உத்கல், வங்காளம் இங்கெல்லாம் முதலிலேயே ஹிந்திபிரசாரப் பணி நடந்துவந்தது. பாபா ராஜன்தாஸ் இதை நடத்திவந்தார். இறுதிவரைக்கும் அவர் இந்தப் பதவியில் நிலைத்திருந்தார். வங்காளத்தின் பல மார்வாடி நண்பர்கள் இதற்குத் துணை நின்றனர். அஸ்ஸாம் ராஷ்டிர ஸமிதியின் தலைவராக அன்றைய தாற்காலிக முக்கிய மந்திரி கோபிநாத் பர்தலே ஆனார். மணிப்பூர் அஸ்ஸாமின் அங்கமாக இருந்தது.

மேற்கிந்தியாவில் இருந்ததுபோல இங்கே எளிதாக வேலை நடக்கவில்லை. பிரசாரம் செய்வதில் பல இன்னல்களைத் தாங்க வேண்டியிருந்தது. இருந்தும் காகாவின் நிர்வாகத் திறன் மக்களோடு ஒட்டிப் பழகிய தன்மை இவற்றால் பிரசாரம் நன்கு நடந்தது தெரிகிறது. ஆசிரியர்கள் சம்பளத்திற்கு அமர்த்தப் பட்டிருந்தனர்.

பம்பாயின் காங்கிரஸ் அரசாங்கம் காகாவின் தலைமையில் ''ஹிந்துஸ்தானி போர்டு'' ஏற்படுத்தியது. இதனால் பம்பாயில் எல்லாப் பள்ளிகளிலும் ஹிந்திப் பாடம் ஆரம்பமாகியது. அப்போது தேசிய மொழியின் அரசாங்கப் பெயர் ''ஹிந்துஸ்தானி'' என்பது. மறைந்த டாண்டனும் இதற்கு இசைந்தார். எனினும் பிறகு இந்தப் பெயரோடு இரண்டு எழுத்து வடிவங்கள் இணைக்கப்பட்டன. ஹிந்தி இலக்கிய சமமேளனம் இந்தப் பெயரை நிராகரித்தது. இதை மனோதத்துவ அடிப்படையில் காகா எப்படி அணுகினார் என்பது முன்பே சொல்லப்பட்டது. சிலர் வேறுவிதமாக நினைத்து ஹிந்தி இலக்கிய சம்மேளனத்தின்

மீதும், டாண்டன்மீதும் ஹிந்து மகா சபையின் தாக்கம் இருப்பதாகக் குற்றம் கூறியதுண்டு. காகா சாஹப் ''ராஷ்டிரபாஷா பிரசார சமிதி''யின் துணைத் தலைவர் என்ற முறையில், ஹிந்தி வார்த்தைகளையே பயன்படுத்தவேண்டுமென விரும்பினார். தேர்வுக்குப் படிக்கவேண்டிய நூல்களில் உருதுச் சொற்களை இயன்றவரை விலக்கவேண்டுமென்றும் கூறினார்.

காகா இவற்றை ஒப்புக்கொள்ளவில்லை. அவர் தலைமைப் பதவியை இராஜினாமா செய்தார். ஆனால் விஷயம் இத்துடன் முடியவில்லை. 1940-இல் புணே மாநாட்டில் காந்திஜியின் ஹிந்தி பிரசாரத்தில் சற்று மாறுதல் செய்யப்பட்டது. ''நாகரி, பார்சி'' என்ற இரண்டு வடிவங்களில் எழுதப்படுகிறது என்பதை மாற்றி—முக்கியமாக நாகரீயிலும், எப்போதாவது பார்சியிலும் எழுதுவது என்றாயிற்று. மாணவர் யாராவது விரும்பினால், உருதுவில் விடை எழுதலாமா என்ற கேள்வி எழுந்தது. காகா இதனால் தவறில்லை என்று நினைத்தாலும், சம்மேளனமும், டாண்டனும் அவர்களது தேர்வுகளில் நாகரி லிபியிலேயே எழுதவேண்டுமென முடிவு செய்தனர்.

இவ்வாறு தேசிய மொழிப் பிரசாரத்தில் சம்மேளனத்தின் ஈடுபாடு நாடோறும் வளரலாயிற்று. ஆனால் இதன் காரியத்தில் துணை செய்வதோ, ஒரு பைசா செலவழிப்பதோ கிடையாது. இடைநிலையில் சமிதியின் ஊழியர்கள் தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையைப் போல் தனித்துச் செயல்படுவதே தமக்குச் சிறந்ததெனக் கருதினர். 1946 அபோஹர் சம்மேளனத்தில் இந்தக் கருத்து மேலும் வலுவடைந்தது. 'டாண்டன் அம் மாநாட்டில் பேசுகையில், ஹிந்தியில் ஹிந்தி நடை, உருது நடை இரண்டும் வெவ்வேறானவை. தம்முடைய நடவடிக்கைகளிலும் ராஷ்டிரபாஷா பிரசார் சமிதி வேலைகளிலும் ஹிந்தி நடையிலுள்ள மொழியே ''ஹிந்தி'' என்ற பெயரில் வழங்கும் என்றும், அதுவே தேசிய மொழியாகப் பரப்பப்படும் என்றும் கூறினார்.

பின்னால் நிகழ்ந்தவை நமக்குத் தெரியும். 1942-இல் டாண்டன்ஜி அனுமதியுடன் காந்திஜி ஹிந்துஸ்தானி பிரசார சபையை நிறுவினார். தான் இரண்டு லிபிகளையும் அறிந்திருப்பதைக் கட்டாயமாக்கினார்; ஹிந்துஸ்தானி மொழியில் இரண்டு நடைகளும் ஒன்றுகலந்தன. எந்தச் சொல்லையும் விலக்குவதும் இங்கில்லை. காந்திஜி, இராஜேந்திரப் பிரசாத், ஜமனாலால்ஜி, காகா சாஹப் முதலானோர் சமிதியிலிருந்து விலகு முன்பாகவே மஹாராஷ்டிர-அஸ்ஸாம் மாநில சமிதிகள் சுயேச்சையாக இயங்கலாயின. அவை சம்மேளன சமிதி நியதிகட்கு உட்படத் தேவையில்லை. மாநில நிறுவனங்களும் சுதந்திரமாகவே செயல்பட்டன.

# பாரதம் சுதந்திரம் பெற்ற பின்னும்...

**1945**-இல் காகா சாஹப் சிறையிலிருந்து விடுதலை பெற்றார். அவரில்லாதபோது, ஹிந்துஸ்தானி பிரசார சபா வேலைகளை ஸ்ரீ அம்ருத்லால் நாநா கவனித்துக்கொண்டிருந்தார். ஆனால் காந்திஜியும் காகா சாஹப்பும் சிறையிலிருந்து வெளிவந்த பிறகே திட்டமிட்டபடி வேலைகள் செவ்வனே நடந்தன.

பல மாநில சமிதிகள் வார்தா சமிதியுடன் தொடர்பை முறித்துக்கொண்டு ஹிந்துஸ்தானி பிரசார சபையுடன் இணைந்திருந்தன. ஆனால் குஜராத்தைத் தவிர பிற இடங்களில் சபையின் வேலைகள் ஒழுங்காக நடைபெறவில்லை. நாட்டில் இனக் கலவரம் கொழுந்துவிட்டெரியலாயிற்று. ஆகஸ்ட் 47-இல் சுதந்திரமடைந்தவுடனேயே நாடு துண்டாடப்பட்டு வெவ்வேறு பகுதிகளாகப் பிரிந்தும் விட்டது.

ஹிந்துஸ்தானி பிரசார சபை முதலில் கடைப்பிடித்த விதிகளின்படி, ஆரம்பத் தேர்வுகள் அந்தந்த மாநில சமிதிகளிடம் இருந்தன. காபில், விசாரத் தேர்வுகளை மட்டும் சபையின் தலைமையகம் நடத்தியது. குஜராத்தில் ஹிந்துஸ்தானி பிரசாரப் பொறுப்பு 1946-இல் குஜராத் வித்யாபீடத்திடம் ஒப்படைக்கப்பட்டது.

நாடு இரண்டாகப் பிரிந்தது. ஆங்காங்கு வகுப்புக் கலவரம் தாண்டவமாடியது; இறுதியில் காந்திஜியின் மரணத்திற்கு இதுவே காரணமாயிற்று. ஒவ்வொரு யுகத்திலும் ஏதாவது ஓர் இயேசு நாதர் சிலுவையில் அறையப்படுகிறார். கொஞ்சகாலம் எல்லாரும் திகைத்துச் செயலற்றுப் போயிருந்தனர். பிறகு மார்ச் மாதம் வார்தா சேவா கிராமத்தில் ஒரு மாநாடு கூட்டப்பட்டது. தேசம் முழுவதிலுமிருந்து பல தலைவர்கள் அங்கே கூடினார்கள். ஆக்கப்பூர்வமான செயல்களில் ஈடுபட்டுள்ள எல்லா நிறுவனங்கம் இணைந்து ஒரு குடைக்கீழ் நின்று பணியாற்ற வேண்டுமென்று காந்திஜி விரும்பினார். குமரப்பா இம்மாநாட்டில் இந்த யோசனையை முன்மொழிந்தார். இதை அனைவரும் ஆமோதிக்க, ''சர்வ சேவா சங்கம்'' ஏற்பட்டது. காகா சாஹப இட்ட பெயர் இது. இதனுடைய விதிமுறைகளை உருவாக்கவும் அவர் பெரிதும் உதவினார்.

இந்த மாநாட்டில் ஆண்டுதோறும் சர்வோதய சம்மேளனம் நடக்கவேண்டுமென்றும் முடிவாயிற்று. இவற்றில் ஒரிஸ்ஸாவின் அனுகுல் என்ற இடத்திலும், ஹைதராபாத்தில் சிலராம்பள்ளி என்ற இடத்திலும் நடந்த சம்மேளனங்களில் காகா தலைமை யேற்றார்.

1949-இல் காந்தி நினைவு நிதி நிறுவப்பட்டது. இதன் அங்கமாக காந்தி நினைவாலயம் ஏற்பட்டு, இதற்கு காகா இயக்குநரானார். அவர் இதை இரண்டு பகுதிகளாகப் பிரித்தார். ஒன்றில் நூலகமும், வாசகர் கூடமும் அமைந்தன. நூலகத்தில் காந்திஜி படைத்த இலக்கியங்கள் அனைத்தும் வைக்கப்பட்டிருந்தன. இன்னொரு பகுதியில் காந்திஜி பலருக்கும் எழுதிய கடிதங்களின் போட்டோ காப்பிகள் வைக்கப்பட்டன. அவருக்குக் கொடுக்கப் பட்ட பட்டங்கள், அவரது படங்கள், அவர் பயன்படுத்திய பொருட்கள் யாவும் இங்கே பாதுகாக்கப்படுகின்றன.

இதே ஆண்டில் பாரதத்தின் அரசுச் சட்டம் நாகரி லிபியில் எழுதப்படும் ஹிந்தியை அரசு மொழியாக அங்கீகரித்தது. காந்திஜி மதித்தவைகளைச் சட்ட அமைப்பாளர்கள் முழுமையாக ஏற்க வில்லை. இதைப்பற்றி ஹிந்துஸ்தானி பிரசார சபை, வார்தாவில் தனது கூட்டத்தில் விவாதித்து, காந்திஜி வகுத்த திட்டப்படியே நடக்க முடிவு செய்தது.

''காந்திஜியைப் புரிந்துகொண்டு பின்பற்றியதால் எத்தனை முடியுமோ அத்தனையும் செய்தேன். ஸ்ரீ சுந்தர்லால் அறிவித்தபடி இரண்டு லிபிகளோடு ஹிந்துஸ்தானி பிரசாரம் செய்ய அவரை உதவிக்கு அழைத்தேன். அவரோ, இந்த இரண்டு லிபிகளையுமே தவிர்த்து, ரோமன் லிபியில் நடத்த விரும்புகிறேன் என்றார். எவ்வளவோ எடுத்துக் கூறியும் காந்திஜி ஒரு முடிவு செய்திருந்தா ரெனின் அது தேச நன்மைக்காகத்தான் இருக்கும் என்று நான் கருதினேன்.'' காகா சாஹப் தனது சுயசரிதையில் இவ்வாறு கூறுகிறார்:

மாநில சமிதிகளிலே பேரின் பஹன் நடத்தி வந்த பம்பாய் சமிதி மாத்திரம் இரண்டு லிபிகளிலும் தேர்வு நடத்தியது. வார்தா சபையுடன் தொடர்பு வைத்திருந்தது. குஜராத்திலோ ஒரு லிபி யில்தான் தேர்வு நடக்கவேண்டும் என முடிவு செய்யப்பட்டது. உருது ஒரு சிறப்புப் பாடமாகத் தனியே கற்றுக்கொடுக்கப்பட்டது. அஸ்ஸாமிலும் ஒரு லிபி மட்டும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

1950 ஜனவரி 26-ஆம் தேதி பாரதம் குடியரசாயிற்று. டாக்டர் இராஜேந்திர பிரசாத் முதல் குடியரசுத் தலைவரானார். அதனால் ஹிந்துஸ்தானி பிரசார சபையின் தலைமைப் பதவியி னின்று அவர் விலக நேர்ந்தது. அவ்விடத்தில் காகா நியமிக்கப்

பட்டார். டாக்டர் இராஜேந்திர பிரசாத் உறுப்பினராகிச் சபா காரியங்களுக்குத் துணை நின்றார்.

சபையின் ஒரு கிளை டெல்லியில் திறக்கப்படவேண்டுமென வெகு நாளாக முயற்சி நடந்து வந்தது. 1955-இல் காந்தி ஹிந்துஸ்தானி சாஹித்திய சபை என்ற பெயரில் இந்தக் கிளை தோன்றியது. காகா பாரத அரசிடம் இதற்காக நிலம் கேட்டார். டாக்டர் இராஜேந்திர பிரசாத், மௌலானா அபுல்கலாம் ஆஸாத் ஆகியோரது பரிந்துரையினால் ''ராஜ்காட்''டின் அந்த காந்தி நினைவு நிதிக்கு இடம் கிடைத்தது. இங்கேதான் காந்தி ஹிந்துஸ்தானி சாஹித்ய சபையின் கட்டடம் இப்போது எழுந்துள்ளது. காகா இதற்கு "சந்நிதி'' என்று பெயரிட்டார். 1951-இல் காந்தி நினைவாலயம் டெல்லியில் ஏற்பட்டபின் அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிட்டார். ''சந்நிதி''யில் வந்து வசிக்கலானார். மறு ஆண்டு சபையின் தலைமை அலுவலகமும் டெல்லிக்கு மாற்றப் பட்டது.

இதே ஆண்டில் பாரத அரசு காந்திஜியின் கடிதம், உரை போன்ற பலவற்றையும் உள்ளிட்ட அனைத்து இலக்கியப் படைப்புக்களையும் காலக் கிரமப்படி புதுப்பிக்க முடிவு செய்தது. ''சம்பூர்ண காந்தி இலக்கியம்'' என்று ஒரு தனித்துறை ஏற்படுத்தப்பட்டது. இதன் ஆலோசனைக் குழுவில் காகாவும் இடம் பெற்றிருந்தார்.

காகா எத்தனை சமிதிகளிலும், இலக்கியங்களிலும் தலைவராகவும் ஆலோசகராகவும் இருந்தார் என்பதைச் சரியாகச் சொல்ல முடியாது. அவர் என்றும் வெறும் கௌரவ உறுப்பினராக இருந்ததில்லை. எந்த நிறுவனத்தில் சேர்ந்தாலும் அதன் விதி முறைகளில் தீவிர ஈடுபாடு காட்டிச் சுறுசுறுப்பாக உழைத்தார்.

இங்கு இன்னொரு செய்தியையும் பற்றிச் சிந்திக்கவேண்டும். காகா ஆசிரியராக இருந்த பல பத்திரிகைகளுக்குள்ளும் ''மங்கள் ப்ரபாத்'' சற்று வேறுபட்டது. 1950 ஜனவரி 26 முதல் இது சபையின் முக்கிய வெளியீடாக இருந்தது. இந்த மாத இதழை காகா அச்சிட்டு நடத்தினார். 1957-இல் இது வார இதழாயிற்று. பின் 1959-இல் மாதமிருமுறை வெளியாயிற்று. இதன் சிறப்பு என்னவென்றால் இதில் பெரும்பாலும் காகாவின் கட்டுரைகளே மிகுந்திருக்கும். காகா சாஹப் மறைந்த பிறகும், ''மங்கள் ப்ரபாத்'' இன்னும்கூட அவரது நினைவைத் தாங்கி அவரது இலக்கியங்களை அவரது தோழர்களுக்கும், ரசிகர்களுக்கும் அளித்து வருகின்றது.

காகாஜி எழுத்துக்கள் கணக்கில் அடங்குமோ!

# ஆய்வாற்றலும், சொற்றிறனும்

காகா சாஹேப் பல வகைகளிலும் புகழீட்டிய பெருந்தகை யாளர். இயற்கையை வழிபடுபவர். விண்மீன்களை ஆராய்ந்தவர்—காந்திஜியின் பக்தர்—சிறந்த செயலாளர்—உயர்ந்த இலக்கிய வாதி—இவையெல்லாம் அவர் முயன்று பெற்ற தகுதிகளாகும். அவர் பிறவியிலேயே நுண்ணறிவு வாய்க்கப் பெற்றிருந்தார். அவரது சிறப்பான சொந்தக் கருத்துக்கள் இதன் விளைவேயாகும். இலக்கியத்திலும் சரி, பொறியியலிலும் சரி, அவருக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது.

நாகரி லிபியில் அவர் கொண்டுவந்த சீர்திருத்தங்கள், பொறியியலறிவை அடிப்படையாகக் கொண்டனவேயாம். அறிவியல் சார்ந்தனவாக அவை இருக்கவேண்டுமென அவர் ஆராய்ச்சி மேற்கொண்டு முயன்றார். 1935 ஹிந்தி காந்திய சம்மேளனத்தில் எழுத்து சீர்திருத்த சமிதியின் தலைமையை ஏற்றுக்கொள்ளு முன் காந்திஜியிடம் அனுமதி வேண்டினார். நாட்டிற்கும், ஹிந்திக்கும் இதனால் நன்மை உண்டாகும் என்றும் கட்டாயம் இந்தப் பொறுப்பை ஏற்குமாறும் காந்திஜி கூறினார்.

காகா இந்தப் பொறுப்பை ஏற்றார். காந்திஜி சொன்னார்: ''நான் பாரத மொழிகள் அனைத்திற்குமே நாகரீ லிபி பொதுவாக இருக்க முடிந்தால் நன்றாயிருக்குமென ஆரம்பத்திலே நினைத்ததுண்டு. இதனால் மக்களது நேரம் பெரிதும் மிச்சப் படும். பாரத மொழிகள் ஒன்றுக்கொன்று நெருங்கி வரவும் இது உதவும்.''

இந்தோர் மாநாட்டில் ஒரு மொழி சீர்திருத்தக் குழு ஏற்படுத்தப்பட்டு, காந்திஜி விரும்பியபடி காகா அதன் தலைவராக்கப் பட்டார். பல ஆண்டுகள் முயற்சி செய்த பின் குழு சீர்திருத்தங்களை ஒப்புக்கொண்டது. புருஷோத்தம்தாஸ் டாண்டன், டாக்டர் பாபுராவ் சக்ஸேனா போன்ற மொழி நூல் அறிஞர்கள் இதில் காகாவுக்கு மிகவும் உதவினர்.

இந்தக் குழுவினர் ஒப்புக்கொண்ட திருத்த முறைகள் முதன் முதலில் வார்தாவில் வெளியிடப்பட்ட நூல்களில் மேற்கொள்ளப் பட்டன. பிறகு குஜராத், பம்பாய், மஹாராஷ்டிரம் ஆகியவை ஒன்றாக இணைந்திருந்த மாநிலத் தலைநகரான பம்பாயின்

"ஹிந்துஸ்தானி போர்டு" தனது நூல்களில் இதைப் பின் பற்றியது. குஜராத்தியில் வெளியான காந்திஜியின் சுயசரிதத்தின் ஒரு பதிப்புங்கூட இந்த லிபியில் வெளியானது.

"வெள்ளையனே வெளியேறு" இயக்கத்தின்போது காகா சாஹப்புடன் வினோபா, கிஷோர்லால் பாயி ஆகியோரும் சிறையிலிருந்தனர். இம்மூவரும் சேர்ந்துதான் நாகரி லிபியின் திருந்திய வடிவம் அமைத்தனர். முக்கிய திருத்தம் அகர வரிசையிலேயே தொடங்கியது. உயிரெழுத்துக்கள் பன்னிரெண்டில் ஆறெழுத்துக்கள் முன்பு வழங்கியபடியே இருக்க, பிற ஆறு எழுத்துக்கள் புது வடிவம் பெற்றன.

காகா சாஹப் சொன்னதன்பேரில் காந்திஜி நவஜீவன் அச்சக நிறுவன உரிமையாளர் ஜான்ஜி தேசாய்க்கும் இதே முறையைப் பின்பற்றுமாறு அறிவித்தார். "ஹரிஜன் சேவக்" பத்திரிகை இந்த வகையில்தான் அச்சாகியது. காந்திஜியின் பல நூல்கள் அவரது மறைவுக்குப் பின் சில ஆண்டுகள் வரைகூட இதே லிபியில் அச்சாயின.

ஆனால் கடைசியில் ஹிந்தி மொழி வல்லுநர்கள் காகா சாஹப் கொணர்ந்த மொழி சீர்திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. பண்டித கோவிந்த் வல்லப பந்த் அனைத்து மாநில முதலமைச்சர்கள் மாநாட்டை லக்னோவில் கூட்டினார். அவர்கள் உயிரெழுத்து மாற்றங்களை ஒப்புக்கொள்ளவில்லை. அப்படியே இந்த முறை கைவிடப்பட்டு விட்டது.

லக்னோ கூட்டத்தில் குறில் இகரத்திற்கும், நெடில் ஈகாரத்திற்கும் திருத்தங்கள் முன் மொழியப்பட்டன. ஆனால் மாணவர்களுக்கு இதில் பிடித்தம் ஏற்படவில்லை. சம்மேளனம் ஒப்புக்கொண்ட மற்றொரு திருத்தத்திற்கு மொழி வல்லுநர்கள் உடன்படவில்லை. இதுபோன்று காகாவின் அனைத்து முயற்சிகளும் வீண்போயின.

இதை நமது துர்ப்பாக்கியமென்றே சொல்லவேண்டும். அவரது கருத்தை ஏற்றிருந்தால் பல வசதிகள் ஏற்பட்டிருக்கும். இந்தியா போன்ற பெரியதொரு நாட்டின் தேசிய மொழியாகப்போகும் ஹிந்திக்கும் ஆங்கிலத்தைப்போல் சுருக்கெழுத்துக்கள் வேண்டுமெனக் காகா எண்ணமிட்டதுண்டு. அப்போது ஹிந்தி தட்டச்சுப் பொறியில் "டைப்" செய்யவும் வசதியாக இருக்கும். எனவே இவற்றைக் குறித்து மிக்க தொலைநோக்குடன் ஆழ்ந்த அறிவியல் அடிப்படையில் அவர் சிந்திக்கலானார். அதிர்ஷ்டவசமாக இதே நேரத்தில் டாணா ஜில்லாவைச் சேர்ந்த கஜானன் டாங்கே மராத்தி மொழிக்குச் சுருக்கெழுத்து தயாரித்துக்கொண் டிருந்

தார். 37—38-இல் அவர் வார்தாவில் காகாவுடன் வாழ்ந்து வந்தார். இருவரது நோக்கமும் ஒன்றுபட்டிருந்தது. நாலா வகையிலும் சிந்தித்து இருவரும் செயலில் இறங்கினர். ஸ்ரீ தால்கே சுருக்கெழுத்தினைப்பற்றி ஒரு நூலே எழுதியுள்ளார்.

இவர்கள் வெளிநாட்டு அறிஞர்களுடன் கடிதத் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தனர். எந்தெந்த எழுத்துக்கள் அடிக்கடி பயன்படுகின்றன, அவற்றிற்கு உரிய இடம் தட்டச்சுப் பொறியில் எங்கே அமைந்திருக்கிறது, அதற்கு எந்த விரல் செயல்படுகிறது, நிரந்தர எழுத்து வரிசை எப்படியிருக்கவேண்டும் என்றெல்லாம் ஆராய்ந்தனர். இவற்றை நுட்பமாகச் சிந்தித்தபின் ஒரு தட்டச்சுப் பலகை தயாரித்தனர்.

காகா சாஹப் சிந்திப்பதோடு செயலிலும் இறங்கினார். தால்கேயைப் போல் பாண்டுரங்க பூர்வே என்ற நண்பரும் கூட இருந்தார். அவரே தட்டச்சு செய்வதுண்டு. சில சமயம் இருவரும் போட்டி போடுவதுண்டு. காகா சொல்ல சொல்ல டாங்கே சுருக் கெழுத்தில் எழுத, புர்கே நேராக ''டைப்'' அடித்துக்கொண்டே செல்வார். இந்தப் போட்டியால் காகாவுக்கு இவ்விரண்டு முறை களின் பயனும் தெரியலாற்று.

இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக அமல்படுத்த மாணவர் களும் தேவைப்பட்டனர். இதனால் சமிதியின் சார்பில் வார்தா வில் சுருக்கெழுத்தும், தட்டச்செழுத்தும் கற்பிக்கும் வகுப்புகள் தொடங்கின.

1948-இல் நாடு சுதந்திரமடைந்தபின் மத்திய அரசினர் நாகரி சுருக்கெழுத்துக்கும், தட்டச்செழுத்துக்கும் ஒரு குழு அமைத்த போது, காகா அதன் தலைவரானார். ஒரு திட்டம் உருவாகியது. பல ஆண்டுகட்குப் பிறகு அரசாங்கம் அதை மக்கள் பார்வைக் காகப் பிரசுரித்தது. பிற மொழிகளின் ஒலி வடிவங்களைச் சேர்த்து எழுதவும், டைப் அடிக்கவும் வசதியாகச் சில மாற்றங்கள் கொண்டு வரப்பட்டன. இதே முறையில் ''டைப்ரைட்டர்'' உருவாகியது. நாகரி லிபியின் அந்த திருந்திய வடிவமே இன்று எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள ஒன்றாகும். அவ்வப்போது சில பய னுள்ள சீர்திருத்தங்களும் செய்யப்பட்டன.

இதேபோல் காகா நாகரி டைப்பற்றியும் சிந்தித்தார். நாகரி எழுத்துக்களின் அச்சுக்கோப்பு மூன்றடுக்குகளில் நிகழும். ஆங்கிலத் தில் ஒரு தட்டே போதுமானது. அங்கே குறில்—நெடில் இல்லை. எல்லாம் சமம். இதை நாகரியிலும் கொண்டுவர அவர் புனே சென்றார். அங்கே ஒரு கலைஞர் உதவியுடன் மேற்கோடுகள் இல்லாத அழகிய எழுத்துக்களை உருவாக்கி—ஒலி வேறுபாடு

களுக்குப் பக்கத்தில் குறியீடுகள் கொடுக்கலானார். பிறகு தட்டச்சுக்கள் செய்வித்தார். 39–40ஆம் ஆண்டில் இந்த முறையில் ''சப்தி போஷி'' பத்திரிகை அச்சாகியது. மஹாராஷ்டிரத்தின் ஸ்ரீ பிஜாபூர்கரும் இந்த முறையை அமலாக்கினார். டெல்லியில் ஹிந்துஸ்தான் டைம்ஸ் அச்சகமும் இம்முறையை எப்போதாவது பின்பற்றுவதுண்டு.

பாரதத்தைப் போன்றதொரு பரந்து விரிந்த நாட்டிற்கு ஹிந்தியை ஏற்ற தேசிய மொழியாக்க எத்தனை எத்தனை பாடு பட்டார்? அதன் சொல்வளம் மேம்பட, ''சப்தி போஷி''யில் எத்தனையோ கட்டுரைகள் எழுதினார். பல வெளிநாட்டுச் சொற்களுக்கு நம்மிடமே பல சொற்கள் இருப்பதை அவர் உணர்ந்திருந்தார். சோம்பல் காரணமாகவோ, மனத்தின் பலவீனம் காரணமாகவோ நாம் அவற்றைப் பயன்படுத்துவதில்லை. பழைய சொற்கள் இல்லாத இடங்களில் பொது வழக்காற்றிலுள்ள மக்கள் எளிதில் கையாளக்கூடிய சொற்களை மேற்கொள்ளலாம். இவற்றைப் பயன்படுத்தும்போது பொருள் விளங்குவதால் கிடைக்கும் தெளிவு பிறமொழிச் சொற்களைக் கையாளும்போது கிடைப்பதில்லை.

நாடு எப்போது தன் சொந்த மொழியில் செயலாற்ற முனைந்துள்ளதோ அப்போது தனது மண்ணுக்கேயுரிய சொற்களஞ்சியத்தைத் திறக்கத்தான் வேண்டும். நாம் நமது மொழியைப் பற்றிச் சிந்திக்காமலேயே, அவர்களது சொற்களை அப்படி அப்படியே கையாள்கிறோம். இப்படிச் சொந்த அறிவை அடகு வைத்துவிட்டு, நமது மொழிக்கே எதிராகச் செயல்படுகிறோம். யாருக்குத் தமது மொழியில் புதுப்புது சொற்களை உருவாக்கும் ஆற்றலும், பயிற்சியும், திறமுமுள்ளதோ, அவர்கள் பிறமொழிக் குவியலிலிருந்து என்னென்னவற்றை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சிந்திக்கவேண்டும். இயன்றவரை சிரமமின்றிப் புழங்கக்கூடிய புதுச் சொற்களைக் கையாளவேண்டும். அவற்றைப் பரப்புதல் மற்றொரு வேலை. இரண்டும் செய்தால்தான் நாம் நமது மொழிமீது உண்மையான பற்றுக்கொண்டவர்களாவோம்.

காகா சாஹப் வெற்றுப் பேச்சாளரல்லர். பன்மொழி வல்லுநர். குஜராத்தி, மராத்தி மொழிகளில் சிறந்த இலக்கியங்கள் படைத்தவர். இவை தவிர, கொங்கணி, கன்னடம், ஆங்கிலம், வங்காளம் இவற்றையும் நன்கு அறிந்தவர். ஆங்கிலத்தின் ஆயிரமாயிரம் சொற்களுக்கு இயல்பான வழக்காற்றுச் சொற்கள் தந்தவர் இவர். பன்மொழிக் கல்வி அவருக்கு என்றும் சுமையாக இருந்ததேயில்லை. அவர் ஆக்கிய சொற்கள் பொருள் பொதிந்தும்,

சுவை மிகுந்தும், நமது பண்பாட்டுடன் ஒன்றியும் இருந்தன. இதைப் பல சான்றுகள் காட்டி நிரூபிக்கலாம்.

காகா தாம் மேற்கொண்ட முயற்சிகளில் எத்துணையளவு வெற்றி பெற்றார் என்பது முக்கியமில்லை. அவர் எவ்வளவு ஆழ்ந்து சிந்தித்தார், முயற்சிகள் செய்தார், மக்களும் அரசாங்கமும் முனைந்து செயலாற்றவும் முடிவெடுக்கவும் வழி வகுத்தார் என்பதுதான் முக்கியம். வெற்றிமட்டுமே ஒருவரது பெருமைக்கு உரைகல் ஆகாது. வெற்றிபெற மேற்கொள்ளும் இடைவிடா உழைப்பும், தன்னலமற்ற தொண்டுமே உண்மை அளவுகோல்களாகும்.

இத்தகைய மதிப்பீட்டிலும் காகா என்றும் முதலில் நிற்கிறார்.

# என்றும் தேசாந்திரி

ரிக் வேதத்தின் முக்கிய ரிஷி மனு சந்தாவுக்கு உபதேசிக்கப் பட்ட மூலமந்திரம் இதுதான்: ''நடந்துகொண்டேயிரு.'' எப்படி மழைக்காலம் தொடங்கியவுடன் நண்டு தன் கால்களால் பூமியில் வளை தோண்டி வழி அமைத்துக்கொண்டு செல்கிறதோ, அவ் வாறு பயணத்திற்கு வாய்ப்புக் கிடைத்தவுடனேயே மனிதனின் கால்கள் அவனைக் கேட்காமலேயே நடக்க ஆரம்பிக்கின்றன. ''எங்கே போகிறாய் என்று யாராவது கேட்டால், எனக்கே தெரியாது. எத்தனைதூரம் போகமுடியுமோ அதுவரை போவேன் என்பான். பல இடங்களுக்கும் செல்லுதல்—சுற்றிப் பார்த்தல்—புதுப் புது அநுபவங்களைச் சந்தித்தல்—இவைதான் எனக்குத் தெரியும். கண்கள் எதையோ தேடுகின்றன—உடல் பரபரக் கின்றது—எனவே கால்கள் நடக்கின்றன—இதைத் தவிர வேறெதுவும் எனக்குத் தெரியாது. எல்லையற்று நிற்கும் கால ஓட்டத்தைப் போல அகண்ட பூமியின் சௌந்தர்யச் சிறப்புக் களைக் காணச் செல்வதே எனது நோக்கம்.''

நாடோடி அல்லது தேசாந்திரி என்ற சொல்லே காகா சாஹப்பைப் புரிந்துகொள்ளப் போதுமானது. அவரது உள்ளம் விரிந்து பரந்து காணும் வானவெளியை நாடி எப்போதும் அலைந்துகொண்டிருந்தது. காந்திஜியின் ஆக்ஞைக்குக் கட்டுப் பட்டு அவர் குஜராத் வித்யாபீடத்தில் தங்கி இருந்து வேலை செய்தார். சற்று வாய்ப்புக் கிடைத்தாலும் உடனே விடுதலை பெற்ற பறவையாகிப் பறந்து சென்றுவிடுவார். ராஷ்டிரபாஷா ஹிந்தி பிரசார வேலை முழுக்க முழுக்க அவருக்குப் பாரதச் சுற்றுப் பயணமாகவே அமைந்தது.

1912 முதல் 1927 வரை அவரது பாதச் சுவடுகள் எத்தனை எத்தனை வழித்தடங்களில் பதிந்தன. 1912-இல் தேச விடுதலைக் காக வழி தேடி மன அமைதியின்றி அலைந்தார்; மறுபுறம் ஆத்மார்த்தமான பேரின்பத்தை மனம் நாடிச் சென்றது. அனைத் தையும்விட்டு இமயப் பயணம் மேற்கொண்டார். இயற்கையிடம் அவருக்கு அளவிறந்த ஈடுபாடிருந்தது. எப்போதும் ஓடிக்கொண் டிருக்கும் நீர்ப்பெருக்கிடந்தான் அவர் நடந்துகொண்டேயிருக்கும் பயணப் பாடத்தைக் கற்றார். விண்மீன்களின் அழகில் அவர் திசையை மட்டுமல்ல, கம்பீரத்தையும் கண்டிருக்கிறார். பரந்த

வானவெளியில் மூழ்கி ஒளிக்கிரணங்களின் கூட்டத்தில் அமைந்துள்ள பல உலகங்களை அவை கண்டுபிடித்துக் காட்டும் விந்தை தான் என்ன? இந்த அளவு இவற்றின் அழகில் ஈடுபட்டிருந்த ஒரே காரணத்தினால் காந்திஜியைப் போன்ற ஒருவரைக்கூட இவரால் இந்த இரகசியங்கள் பொதிந்த விண்மீனுலகிற்கு ஈர்க்க முடிந்தது.

உள்ளபடி பார்த்தால் இமயமலையிடம் இவருக்கு இயல்பானதோர் பரவசம். எத்துணை தூரத்திலிருந்தாலும், பாதை எத்தனை கடினமாக இருந்தாலும், இமயத்தின் நீர்வீழ்ச்சிகள் தம் இன்னிசையால் இவரைத் தம்மிடம் இழுத்துச் சென்றுகொண்டிருந்தன. தன்னாட்டினைச் சுற்றிப் பார்த்ததைப்போல வெளி நாடுகளிலும் அவர் பயணம் செய்துள்ளார். ஏதோ மனம்போனபடி கால்போகிற போக்கில் செல்கிற வழிப்போக்கன் அல்லர் இவர். எங்கும் பாரத கலாசாரத்தின் முக்கிய தூதுவராகச் சென்றதோடு, ஏனையோர் கலாசாரத்தின் சிறப்புகளையும் அறிந்துகொண்டு வந்தவர். இயற்கை வர்ணனைகளோடு அவரது எழுத்துக்களில் சிறந்த பண்ணோக்குக் கண்ணோட்டத்தின் இயல்புகளையும் பார்க்கமுடிகிறது. ''எனக்கு வாழ்வின் இளமையின் துடிப்புமட்டும் இருந்தால் தெரியாத பல இடங்களிலிருந்து வரும் அழைப்பை நான் தள்ளியிருக்கவே மாட்டேன். தெரியாததைத் தொடர்ந்து சென்று, உணர்ந்து, வெற்றி கண்டு—நம் அறிவின் எல்லைகளைப் பெருக்குவதே வாழ்வில் மகிழ்ச்சி தருவதும், அறிவுக்குச் சிறப்பூட்டும் விருந்துமாகும். அறிவியல் வளர்ச்சியினால் தெரியாதவற்றைப்பற்றி ஓரளவு தெரிந்து கொள்ளலாம். மற்றொரு வகையில் உலகியலறிவு பயணம் செய்வதால் கிடைக்கிறது. எத்தனை எத்தனை இடங்களுக்குச் செல்கிறோமோ, அத்துணைக்கத்தனை நமது திறமையும் வளர்கிறது, சிறந்த சமூகவாதியும் ஆகிறோம்.

சிந்தனைகளில் புத்தம் புதிய சொந்தக் கருத்துக்களை, நுணுகி ஆராய்தல், ஆழ்ந்து பயின்று மறைபொருட்கள் அனைத்தையும் இயல்பாக வெளிக்கொணரும் ஆற்றல்—இவற்றைக் காகா சாஹெப்பிடம் நாம் உணரும்போது இவ்வியல்புகளுக்கு மூலகாரணம் அவர் மேற்கொண்ட பயணங்களின் தாக்கமே எனலாம். தமது பயணங்களில் அவர் சிறந்த இலட்சியங்களைத் தேடினார். உயர்ந்த குறிக்கோள் எதுவென்று பார்த்தால், உள்ளத்தின் பல எண்ணங்களிடையே ஒருமை கண்டு பரமாத்மாவை உய்த்துணர்தலேயாகும். தமது ஆப்பிரிக்கப் பயணம் குறித்து அவர் இவ்வாறு எழுதுகிறார்: ''இந்து கலாசாரத்தின் உண்மைப் பொருளை உணர்ந்துகொண்ட பிறகு, உலகத்தின் எல்லாச் சமயங்களிடத்தும் மரியாதை தோன்றுகிறது. எல்லா மதங்களுமே

எனக்கு உயர்ந்தவை என்றும், நல்லவையென்றும், என்னுடையவையென்றும் தோன்றுகின்றன. இதே கண்ணோட்டத்தில் உலகின் எந்த நாடுமே எனக்குப் பாரதத்தைப் போலவே புனிதமாகவும், வழிபடத்தக்கதாகவும் தென்படுகின்றது. எந்த பக்தி பூர்வமான ஆசையுடன் இமயம்வரை பயணம் செய்தேனோ அதே போல் ஆப்பிரிக்கா நாட்டைச் சென்று பார்க்கவும் ஆசைப்பட்டேன். உலகின் எல்லா நதிகளும் எங்கும் நிறைந்துள்ள உலக அன்னையின் வடிவங்கள்—ஒவ்வொரு நீருற்றும் இமயத்தின் மாலை நேரம்போன்று புனிதமானதேயாம். ஒவ்வொரு மலையும் இமயம்போல் தெய்விகமானதேயாகும். ஒவ்வொரு நதியும் இறைவனது புகழையும் அருளையும் பாடுகின்றது. இப்படி எண்ணமிட்டுக்கொண்டுதான் நான் ஆப்பிரிக்கா சென்றேன். இமயத்தைப் பற்றிக் காகா எழுதியதாவது—''உலகத்தின் எல்லாப் பேரரசர்களின் அனைத்துச் செல்வங்களையும்விட மிக உன்னதமானது இமயம். எல்லாம் வல்ல பரம்பொருளாம் மஹாதேவனே இமயத்தில் வாழ்கிறார். இவரே உலகம் முழுமைக்கும் எல்லா நலன்களையும் அளித்துக் காப்பவர்; எனினும், பற்றற்று அமைதியாக நிஷ்டையிலிருப்பவர். இமயம் சென்று அதையே இதயத்தில் இருத்தி, தியானம் செய்ய யாரால் முடிகிறதோ அவரே வாழ்வை வென்றவராவார். அவருக்குப் பல கோடி வணக்கங்கள்.''

இமயத்தின் பகுதிகளிலும், பாரதத்தின் பிற புண்ணியத் தலங்களிலும் தமக்கொரு ஞான வழியையும், உண்மை நெறியையும் தேடிப் பயணம் செய்த காகா சாஹப், காந்திஜியுடனும், ஹிந்தி பிரசார வேலை தொடர்பாகவும் பலமுறை இந்தியா முழுமையும் பயணம் செய்துள்ளார். எத்தனை முக்கியமான வேலையில் மூழ்க நேர்ந்தாலும், நதி, கடல், மலை, வானம் போன்றவற்றின் இயற்கையெழிலில் அவர் என்றும் அடிமைப்படாமல் இருந்ததில்லை. 1950 முதல் 72 வரை ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஐரோப்பா, ஆசியா கண்டங்களில் கலாசாரப் பயணம் மேற்கொண்டார். ஜப்பான் அவரது மற்றொரு வீடாகவே மாறிவிட்டிருந்தது. 1954 முதல் 72க்குள் அவர் ஆறு முறை ஜப்பான் சென்றுவந்தார்.

பாரத அரசாங்கம் வெளிநாடுகளுடன் சிறந்த முறையில் கலாசாரத் தொடர்புகொள்வதற்காக ''பாரதீய கலாசார சம்பந்த பரிஷத்தை'' நிறுவியது. மௌலானா அதன் தலைவரும், காகா அதன் துணைத் தலைவருமாயினர். 1950 மே மாதம் வரை அவர்கள் ''கிழக்காப்பிரிக்கா''வில் பயணம் செய்தனர். இந்த அநுபவங்களை ''அக்கரையிலுள்ள நமது அண்டை நாட்டினர்'' என்ற தலைப்பில் 1951-இல் குஜராத்தியில் வெளி

யிட்டார். அவ்வமயம் பாரத அரசின் பிரதிநிதியாக அங்கு ஸ்ரீ அப்பா பந்த் இருந்தார். இதைப்பற்றி அவர் கூறினார்: ''மனிதர்களிடையே தூய நட்பு மலரும் தருணத்தில் மதம், குலம், பண்பாடு முதலியவற்றிலுள்ள வேறுபாடுகள் எப்போதும் குறுக்கிட்டதில்லை. நமது பல கூட்டங்களில் ஆங்கிலேயர், ஆப்பிரிக்கர்கள், இந்தியர்கள், அராபியர்கள் குழுமியிருக்கும்போது காகா சாஹப் இந்த ஒற்றுமையையும் நட்பையும் குறித்துத் தமது எண்ணங்களை மிக அழகாக எல்லோருடைய உள்ளத்தையும் தொடும் பாணியில் எடுத்துரைப்பார். மராத்தி, குஜராத்தி, ஹிந்தி, ஆங்கில மொழிகளை அவர் தாம் பேசும்போது கையாண்டிருக்கிறார். கவிஞன் இதயத்திலிருந்து அன்னையின் அன்போடு கலந்துவரும் இவரது சொற்பெருக்கிலே, மென்மையான இதமும், புதிய எண்ணப் பொலிவும் சிறப்பான வர்ணனைகளும் இருக்கும். துன்பம், தொல்லை, போராட்டம், அமைதியின்மை—ஆகிய எல்லா நிலைகளிலிருந்தும் அவர்களை விடுவித்து எங்கோ இன்ப உலகிற்கு அழைத்துச் செல்லும் திறன் அவரது சொற்பொழிவுகளில் மலிந்திருந்தது'' என்கிறார் ஸ்ரீ அப்பா பந்த்.

ஆப்பிரிக்க மக்கள் மனதிலும் நல்லெண்ணமும், நட்பும் குடிகொண்டிருப்பதைக் காகா சாஹப் அங்கிருந்து இந்தியர்களுக்கு மிகத் தெளிவாக எடுத்துரைத்தார். ஜோமோ கெளண்டோ, நெய்ரேரே முதலிய தலைவர்கள் முதல், எழுத்தறிவற்ற ஊழியர்கள் வரை, காகாவின் பிரசங்கங்களை ஆழ்ந்து அனுபவித்துக் கேட்டது, பார்க்கவேண்டிய காட்சியாகும். அப்போது அவர் அங்கே சாதாரண மனிதனாகத் தோன்றாமல், அவர்களுக்கு இறைவனின் தூதுவராகவும், கலாசாரத்தின் காவலராகவும் காட்சி தந்தார். உலக நாகரிகங்கள் அனைத்தையும் அவர் அறிந்திருந்தார். எளிய, இனிய சொற்களில் இவற்றை எடுத்துச் சொல்லும்போது யார் இந்தப் பரந்த அறிவுப் பெருக்கினை எதிர்த்து நிற்க முடியும்? 1950-இல் ஆப்பிரிக்க இந்தியத் தொடர்பு வலிமை பெற்றது. வேறு யாரையும்விட, இந்த உறவு வலுப்பட காகா சாஹப்தான் இதற்குப் புதிய முக்கிய வடிவம் கொடுத்தார். காகா மேற்கொண்ட பயணங்களின் பெரும் சிறப்பை இதைவிட நன்கு எடுத்துரைக்க முடியாது. அவர் இந்திய கலாசாரத் தூதுவர் என்பதுதான் உண்மை நிலை எனலாம் [சமன்வய கேசாதக், 51].

அவர் அடுத்த ஆண்டு 1951-இல் செப்டெம்பர் முதல் நவம்பர் வரை மேற்கு ஐரோப்பாவிலும், ஆப்பிரிக்காவின் கோல்ட் கோஸ்ட், நைஜீரியா மற்றும் பல தேசங்களில் பயணம் செய்தார். 1954-இல் மார்ச் ஏப்ரலில் அவர் முதல் முறையாக ஜப்பான்

சென்றார். அங்கே நடந்த உலக அமைதி மாநாட்டில் காந்தி நினைவாலயத்தின் பிரதிநிதியாகக் கலந்துகொண்டார். இந்தப் பயணத்தின்போது, காந்தியத் தத்துவங்களில் ஈடுபாடு கொண்ட பௌத்தத் துறவியான, நிசிதாசு புஜியிகுரஜியுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. காகா சாஹப் கேட்டுக்கொண்டதன் பேரில், அவர் இரண்டு மாணவர்களை ஹிந்தி படிக்க இந்தியாவுக்கு அனுப்பினார். அவர்கள் ஐந்தாண்டுகள் இங்கிருந்தனர்.

1957-இல் மறுமுறை ஜப்பான் செல்ல நேரிட்டபோது, அங்கு அணுகுண்டிற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் அமைதி மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. இந்த இரண்டு பயணங்களின் அடிப் படையில் 1958-இல் ''உதயமாகும் நாடு'' என்ற பெயரில் ஒரு பிரயாண நூல் எழுதினார். இதே ஆண்டில் சீனா, தாய்லாந்து, கம்பூச்சியா நாடுகளுக்கும் சென்றார். 1958-இல் பாரத கலாசார சம்பந்த பரிஷத்தின் தரப்பில் கலாசாரப் பரிவர்த்தனைத் திட்டத் தின்கீழ் தென் ஆப்பிரிக்கா, மேற்கு இந்தியத் தீவுகள், பிரிட்டிஷ், கயானா, சூரிநாம், ட்ரினிடாட் போன்ற இடங்களில் பயணம் செய்தார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில முக்கிய இடங் களைப் பார்த்துவிட்டு, நீக்ரோக்களின் தலைவர் மார்ட்டின் லூதர் கிங்கையும் சந்தித்தார். இதைப்பற்றி ஸ்ரீமதி மேரி குணசிங் நைத்ஸ் எழுதுகின்றார்: ''டாக்டர் லூதர்கிங் காந்தியவாதத்தை மேற்கொண்டு, அஹிம்சை நெறியில் மாற்றங்களைத் தோற்று விக்கப் பெரிதும் முயன்றார். இப்போதுதான் முதல் முறையாக அஹிம்சா தத்துவத்தைப்பற்றி அவருக்கு விவாதிக்கும் அவகாசம் கிடைத்தது. அதுவும் பாரத விடுதலைப் போராட்டத்தில் பெரிதும் துணை நின்ற ஒரு தலைவருடன்கூட.'' (சமன்வய கே சாதக், 116—17)

டாக்டர் கிங்கின் மனைவி கோரெடா சொன்னார்: ''மௌண்ட் கோமரியில் காகாவுடன் நிகழ்ந்த சந்திப்பினால் மார்ட்டினின் வாழ்க்கைப் பாதையில் புதிய திருப்பம் நிகழ்ந்தது. ஏனெனில் இப்போது அஹிம்சாவாதத்தை அவர் ஆழ்ந்து விவாதிக்கச் சமயம் கிட்டியது. அதனால் அவரது தலைமைத் தகுதிக்குப் புதிய உற்சாகமான தத்துவ மலர்ச்சி ஏற்பட்டது.''

இதே பயணத்தின்போது அவர் இத்தாலி, மேற்கு ஜெர்மனி, பெல்ஜியம், இங்கிலாந்து ஆகிய பல நாடுகளுக்கும் சென்றிருந்தார். தனது ''மங்கள் ப்ரபாத்'' பத்திரிகையில் இந்தப் பயணத்தைப் பற்றிச் சுவைபட எழுதியிருந்தார். 1958-இல் கிழக்கு ஆப்பிரிக்கா வின் நான்கு தேசங்களைச் சுற்றிப் பார்த்த பிறகு மாரீஷியல், ரியூனியன், மடகாஸ்கர் முதலிய இடங்களுக்கும் சென்றார்.

1962 மே மாதம் மூன்றாம் முறையாக காகா ஜப்பான் சென்றார். இப்பயணம் மிகவும் சிறப்புக்குரியதாக அமைந்தது. 1961-இல் பாரத அரசாங்கம் கோவாவைப் போர்த்துக்கீசியரிட மிருந்து விடுவித்தது. அப்போது பூஜிய் தாஜு அவரை ஜப்பானுக்கு வருமாறு அழைத்தார். ''எப்போதும் சமாதானம், பேச்சு வார்த்தை, நேச உடன்பாடு என்றெல்லாம் பேசும் நேரு சர்க்கார் இப்படி ஒரு நடவடிக்கை எடுத்தது ஏன் என்று ஜப்பானிய மக்கள் அறிய விரும்புகிறார்கள்.''

இந்த அழைப்பின்பேரில் காகா ஜப்பானுக்குச் சென்று அங்குள்ள மக்களுக்கு பாரத அரசின் கண்ணோட்டத்தை விளக் கினார். இதே ஆண்டில் உலகச் சமாதான பரிஷத் கூட்டத் திற்காக ரஷ்யா சென்றார். இந்தப் பயணத்தின்போது, புகழ் பெற்ற ஹிந்தி எழுத்தாளர் விஷ்ணு பிரபாகர், காகாவுடன் சில நாட்கள் தங்கும் நல்வாய்ப்பு அமைந்தது. டால்ஸ்டாயின் கிராம மான ''யாஸ்னாயா போல்யானா'' சென்றபோதும், கோர்க்கி இன்ஸ்டிடியூட்டில் அவரது மருமகளிடம் உரையாடும்போதும் எங்களுடன் ஒரு பெரிய கூட்டமே இருந்தது. ஏறக்குறைய 100 பேர், பல நாடுகளிலிருந்து வந்திருந்தனர். காந்திஜியின் நெருங்கிய நண்பர் என்ற முறையில் டால்ஸ்டாய் நமது தலைவராகி இருந்தார். டால்ஸ்டாய், காந்திஜியின் மானசீக குருவும் ஆவார். இந்த உறவை முன் வைத்து மிகவும் சிறந்த பிரசாரம் செய்தார். ''பாரதத்திலிருந்து வந்துள்ள நாங்கள் காந்திஜியின் தலைமையின் கீழ் தொண்டாற்றியிருக்கிறோம். டால்ஸ்டாயை அவர் எவ்வளவு நேசித்தார் என்பது எங்களுக்குத் தெரியும். அவரிடம் இவருக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் இருந்ததையும் நாங்கள் அறி வோம். டால்ஸ்டாய் எழுதியவை அனைத்தையும் இந்திய மொழிகளில் மொழிபெயர்க்க வேண்டும் என்று காந்திஜி எங்களிடம் கூறியிருக்கிறார். டால்ஸ்டாய் ரஷ்யாவின் ஆன்மா வையும் பாரதத்தின் ஆன்மாவையும் வர்ணித்து எழுதியுள்ளார். இந்தியர்கள் டால்ஸ்டாயிடம் தங்கள் ஞானிகளின் பிரதிபிம் பத்தையே பார்க்கின்றனர். நாங்கள் இங்கு முன்பின் தெரியாத சுற்றுப் பயணிகளாக வரவில்லை. ஏற்கெனவே அறிமுகமான பக்தர்களாக வந்துள்ளோம். வெறும் பார்வையாளர்களாக வராமல், சிரத்தையுடன் புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்லும் தீர்த்த யாத்ரீகர்களாக வந்துள்ளோம். டால்ஸ்டாய் ரஷ்யாவின் ஆன்மாவை உலகறியச் செய்துள்ளார்—அந்த அமரத் தன்மை யுடைய ஆன்மாவைப் போலவே அவரும் அழிவற்றவர். பேரறிஞர் ரோமன் ரோலண்டும், மிகவும் பெருமிதம் தோன்ற அவரைப் பாராட்டி எழுதியிருக்கிறார்.''

எல்லோரும் எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தோம். கிராம மக்கள் எங்களைச் சூழ்ந்து கொண்டனர். டால்ஸ்டாயின் சமாதியில் காகா வணங்கி எழுந்த காட்சி மறக்க முடியாதது. மர நிழலில், புல் தரையில் உட்கார்ந்திருந்த அவர், பாரத மக்களுக்கும் ரஷ்ய மக்களுக்குமிடையே ரிஷி போன்றிருந்தார். பஞ்சாபின் புகழ்பெற்ற இரண்டு சீக்கியர்கள் உடன் இருந்தனர். அவர்களது வெண்மையான தாடிகள் பளபளத்துக்கொண்டிருந்தன. ரஷ்யர்களுக்குத் தாடி, புடைவை இரண்டிலும் மோகம்.

அந்த மூன்று வெண்தாடிகள் இணைந்த காட்சியைக் கண்டபோது, பண்டைய நாட்களில் இப்படித்தான் நமது ரிஷி முனிவர்கள் மரங்களின்கீழ் தவநிஷ்டை பயின்றிருக்க வேண்டும் என்று தோன்றியது.

போர்க்கி இன்ஸ்டிடியூட்டில், காகா சாஹப், சரோஜினிதேவி, அஸ்ஸாமின் புகழ்பெற்ற இலக்கியவாதியான நீலமணி பூஷண், விஷ்ணு பிரபாகர் ஆகிய நால்வர் மட்டுமிருந்தனர். வானத்தில் மேகம் திரண்டிருந்தது. சிறு மழைத்துளிகள் விழத் தொடங்கியிருந்தன. பண்டைய ரஷ்யாவின் மர வீடுகள் பாணியில் அமைந்திருந்த அந்த முகப்பு வாயில், அறைகள், தோட்டம் எங்கும் பழைமையின் பொலிவு. பயணிகளாக வரும் புதிய தலைமுறையினர் கோர்க்கியை அவர் வாழ்ந்த யுகத்திலேயே தரிசிக்கும் பொருட்டு இங்குப் புராதனப் பெருமை போற்றிப் பாதுகாக்கப் பட்டு வந்தது.

எல்லாம் சுற்றிப் பார்த்த பிறகு, ''மேடம்'' என்று அழைக்கப்பட்ட கோர்க்கியின் மருமகளைச் சந்தித்தோம். அவர் மிகவும் பணிவுடன், துருவித் துருவிக் கேள்வி கேட்கும் காகாவிற்கு விடை பகரலானார். பாரத மொழி வல்லுநர் ஸ்ரீ சேரேலியாகோவ் மொழிபெயர்த்துச் சொல்லிக் கொண்டிருந்தார். காகாவின் ஆர்வத்திற்கு எல்லையே இல்லை. கோர்க்கியின் படுக்கை அறையில் புத்த பகவானின் சிலையைப் பார்த்துச் சொன்னார்: ''டால்ஸ்டாய் எவ்வாறு பாரதத்தையும், இந்து மதத்தையும் மதித்தாரோ, அதேபோல் கோர்க்கியும் இருந்தாரோ?''

மேடம் பதில் சொன்னார்: ''ஆம். முக்கியமாகப் புத்த மதத்தில் அவருக்கு அதிகம் ஈடுபாடு. புத்தருக்கு அவர் மிக முக்கிய இடமளித்திருக்கிறார். பல பௌத்த இலக்கியங்களை இவர் திரட்டியிருந்தார். மகாத்மா புத்தரின் 100-க்கும் மேற்பட்ட சிலைகள் இவரிடம் இருந்தன. அவற்றை அவர் கலைக்கூடத்திற்கு வழங்கிவிட்டார்.'' டைரக்டர் மேலும் சொன்னபோது, அவருக்குத் தத்துவ விஞ்ஞானத்தில் அதிக ஆர்வம் இருந்ததாகச் சொன்னார்.

''மத விஷயத்தில் நான் டால்ஸ்டாய் தத்துவங்களைப் பற்றிப் படித்திருக்கிறேன். கோர்க்கியைப் பற்றி அறியேன்.''

மேடம் சொன்னார்: ''டால்ஸ்டாயும் கோர்க்கியும் பல முறை சமய சர்ச்சைகள் செய்துள்ளனர். இவை 'லிடரரி போர்ட்டிரெய்ட்ஸ்' என்ற நூலில் தொகுக்கப்பட்டுள்ளன.''

தத்துவம் பற்றிய பேச்சுக்களிலிருந்து விலகிய காகா சாதாரண செய்திகளுக்கும் தாவினார். மேடம், கோர்க்கியின் பிற தன்மைகள் பற்றிக் கூறினார். ''அவர் நன்றாகச் சீட்டாடுவார். அவருடன் விளையாடுவதென்றால் மிகவும் சுவையாக இருக்கும்.''

காகா சாஹப் புன்சிரிப்போடு வினவினார்: ''உங்களுடன் விளையாடி இருக்கிறாரா?''

''ஏன் இல்லை? எல்லோருடனும் ஆடுவார்.''

''எல்லோருடனும் உலாவச் செல்வார் இல்லையா?''

''ஆமாம். முக்கியமாகத் தமது பேத்திகளோடு உலாவச் செல்வதில் அவருக்கு மிக விருப்பம்.''

காகா சொன்னார்! ''கோர்க்கி தம் பேத்திகளுடன் அன்பாக இருந்ததுபோலவே அவர்களும் தாத்தாவின்மேல் ஆதிக்கம் செலுத்தியிருப்பார்களே?''

''உலகம் முழுவதிலும் பேத்தி, பேரன்கள் தாத்தாக்களைச் சீண்டுவதில் தான் அதிகம் மகிழ்கிறார்கள்.''

எல்லோரும் சிரித்தனர். ''எங்களுக்கும் அப்படித்தான்.''

''அப்போது உங்களுக்கும் கட்டளை இடுவார்களா?'' ''கிடையாது'' என்று அடித்துச் சொன்னார் மேடம். மறு கணமே, கோர்க்கி, லெனின் ஆகியோரது கருத்து வேறுபாடுகளைப்பற்றிக் காகாவுடன் விவாதிக்கலானார். போகும்போது, காகா பார்வையாளர்கள் பதிவேட்டில் இவ்வாறு எழுதினார்: ''எங்களுக்கு இந்த இடம் யாத்திரைக்குரிய புண்ணிய ஸ்தலமாகிறது.''

இந்தப் பயணத்தில் விஷ்ணு பிரபாகர் அளவிறந்த இன்பமும், ஞானமும் பெற்றார். இயல்பான நட்பும் பழக்க வழக்கங்களும் இரு தரப்பிலும் இருந்தன. அதிக அளவிலும் இருந்தன. கோர்க்கியின் மருமகளும் நூல் நிலைய இயக்குநரும் எத்தனை உள்ளன்புடன் எங்களை வரவேற்றார்கள். அது நாகரிகப் பூச்சு அல்ல; போலியானதல்ல. காகாவிடம் அவர்களுக்கு மிகுந்த மதிப்பு இருந்தது. ஒரு கணம் அவர் மிக வயதான

குரு-முனிவர் போலவும், மறுகணம் குழந்தையாகவும் தென் பட்டார். விஷ்ணு பிரபாகர் இதைத்தான் அவரிடம் கண்டார். அவரிடம் செருக்கோ, ஆடம்பரமோ இல்லை. குடும்பத்தவரைப் போன்று பழகும் முழுமையான தன்னடக்கம் மிக்க வடிவம் இங்கே சினத்திற்கும் சிரிப்புக்கும் வெவ்வேறு பொருள் இல்லை.

எனினும் அலைந்து திரிந்து எதையோ தேடிக்கொண் டிருப்பவரது தாகம் தீர்வதில்லை. காகா தர்மாதிகாரி எழுது கிறார்: ''பாதையறியாத தேசாந்திரி—நிரந்தர தீர்க்க யாத்ரீகர் காகா. இவரது அனைத்துப் பயணங்களும் பயனும் திட்ட வட்டமான குறிக்கோளுமுடையவை—அவருடைய இலட்சியம் பரமபதம் சேர்தல்—இடையறாது பயணம் சென்றுகொண்டே யிருப்பது அவரது வாழ்வுப் பணி.''

இந்த நிரந்தர நாடோடியைப்பற்றிக் கவி உமாசங்கர் ஜோஷி சொல்கிறார்: ''ஏ நாடோடியே! எப்படியோ ஒரு நீரோடை உன் பாதங்கள் வரை பெருக்கெடுத்து வந்துவிட்டது. நீயோ அதன் இதயத்தில் அலைகடலின் ஓசையே பெருகிவரச் செய்து விட்டாய்.''

# பொறுப்பும் ஊதியமும்

எதையோ தேடி நடந்துகொண் டிருந்த காகா சாஹப்பிற்கு ஒரே இடத்தில் நிலையாகக் கட்டுப்பட்டு இருக்க முடியாது. ஆகையால், ஏதாவது பொறுப்பை இவரால் ஏற்று நிர்வகிக்க முடியும் என்பதைப் பலரும் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால், காகா விஷயத்திலோ இது சரியல்ல. அவர் ஏழெட்டு ஆண்டுகள் குஜராத் வித்யாபீடத்தைத் திறம்பட நிர்வகித்தார். காந்திஜியால் ஒப்படைக்கப்பட்ட ஹிந்தி பிரசார வேலைக்குத் தம் வாழ்நாள் முழுமையும் பாடுபட்டார். இதனால்தான் பல இடங்களுக்குச் சுற்றுப் பயணம் மேற்கொள்ளவும் வாய்ப்பு ஏற்பட்டது. காந்தி நினைவாலயத்துடன் தொடர்பு கொண்டிருந்தார்.

1951-இல் புது டெல்லிக்கு இந்நிறுவனம் இடம் மாறியபோது, அவரும் டெல்லியில் தங்கலானார். வாழ்வின் கடைசி முப்பது ஆண்டுகள் அவர் பல வெளிநாடுகளில் பயணம் மேற்கொண்டார். இருந்தும் அவர் பெரும்பாலும் டெல்லியிலே தங்கிப் பல்வேறு பொறுப்புக்களையும் செவ்வனே நிர்வகித்தார். பாரத அரசாங்கம் அவரிடம் பல அலுவல்களை ஒப்படைத்தது. 1948-இல் அவர் ஹிந்தி சுருக்கெழுத்து, தட்டச்சு சங்கத் தலைவராயிருந்தார். பாரதீய கலாசாரத் தொடர்புக் குழுவில் துணைத் தலைவரானார். இதனால் அடிக்கடி அவர் வெளிநாட்டுப் பயணம் மேற்கொள்ள நேரிட்டது. பல நாடுகளுடன் பாரதத்தின் உறவை வலுப்படுத்துவதே அவரது முக்கியப் பொறுப்பாய் இருந்தது. இதை அவர் வெகு திறமையாக நிறைவேற்றினார்.

1952-இல் சிறந்த இலக்கியவாதி—கல்வியாளர் என்ற முறையில் அவர் மாநிலங்கள் அவையாம் ராஜ்ய சபையின் உறுப்பினராக நியமிக்கப்பட்டார். முழுதாகப் பன்னிரெண்டு ஆண்டுகள் (1964 வரை) அவர் இப்பதவி வகித்தார். இதே சமயத்தில்தான் அவரைப் பின்தங்கிய வகுப்பார் குழுவிற்குத் தலைவராக அரசாங்கம் 1953-இல் நியமித்தது. இக்குழுவினர் பாரதம் முழுமையும் சுற்றுப் பயணம் செய்து தேச நிலவரத்தைப் பரிசீலித்தனர். 1955-இல் இவர்கள் தங்கள் அறிக்கையைச் சமர்ப்பித்தனர். ஆனால், அரசு அதை ஏற்றுக்கொள்ளவில்லை.

1960-இல் ''ஹிந்தி விச்வ கோஷி''ன் தலைவரானார். 1967-இல் பேட்சியில் காந்தி வித்யாலயம் நிறுவப்பட்டபோது காகா அதன் தலைவராக நியமிக்கப்பட்டார். நான்கு ஆண்டுகள் அவர் இப்பதவியில் இருந்தார். காந்திய தத்துவங்களின் அடிப் படையில் இந்தப் பல்கலைக் கழகம் பழங்குடி மக்களின் கல்வி முன்னேற்றம் பற்றிச் சிறப்பான திட்டங்களை மேற்கொள்ள முயன்றது. 1960-இல் குஜராத் மாநிலம் தனது இலக்கிய வட்ட பரிஷத்தின் தலைவராக்கி, அவர் குஜராத்தி மொழிக்குச் செய்த பணிகளுக்குப் பாராட்டுத் தெரிவித்தது.

காகா சாஹப் தம் இறுதிவரை ஒரு கர்ம வீரராகத் திகழ்ந் தார். வீட்டிலோ வெளியிலோ அவர் எங்கிருந்தாலும், அவர் செயல்திறமை மங்காது ஒளி வீசியது. நாடு அவருடைய பெருமை யைப் புரிந்துகொண்டது. இயன்ற அளவு பாராட்டவும் செய்தது. இப்படிப்பட்ட போர்வீரரின் பெருமிதமோ அவரது செயல்களி லேயே மிளிரும். காகா சாஹப் செய்த தொண்டுகள் நாடே பெருமைப்படத் தக்கவை.

பிரயாகையின் ஹிந்தி சாகித்திய சம்மேளனம், வார்தாவின் ராஷ்டிரபாஷா பிரசார சமிதி ஆகிய இரண்டும் ஹிந்தி—ஹிந்துஸ் தானி விஷயத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டு வெவ்வேறாகப் பிரிந்துவிட்டபோதிலும், ராஷ்டிரபாஷா சமிதி 1959-இல் ''மகாத்மா காந்தி விருதினை'' வழங்கி, காகாவின் தொண்டு களுக்கு அங்கீகார முத்திரை அளித்துக் கௌரவித்தது. 1951-இல் காகாவிற்கு 65 வயது நிறைந்தது. அப்போது அஹமதாபாத்தின் புகழ்பெற்ற வித்வான் பண்டிட் சுகன்லால் தலைமையில் அவரைப் பாராட்டி ''காலேல்கர் அத்ய்யன் க்ரந்த்'' என்ற நூல் அவருக்கு அர்ப்பணிக்கப்பட்டது. 1964-இல் ராஜ்ய சபையிலிருந்து விலகிய வுடன் கல்வி, இலக்கியத் துறைகளில் அவர் ஆற்றிய சிறந்த தொண்டுகளுக்காகப் பாரத அரசு அவருக்கு, ''பத்ம விபூஷண்'' விருது அளித்துப் பாராட்டியது. 80 வயது நிறைந்தவுடன் 1965-ஆம் ஆண்டு ராஷ்டிரபதி பவனில் ஏற்பாடான ஒரு சிறப்புக் கூட்டத்தில் ராஷ்டிரபதி இராதாகிருஷ்ணன், ''ஸன்ஸ்க்ருதி கே பரிவரிசக்'' என்ற புகழுரை நூல் வழங்கிக் கௌரவித்தார்.

மத்திய அரசின் சாகித்திய அகாதெமி, அவரது ''ஜீவன் வியவஸ்தா'' என்ற நூலுக்கு 1966-ஆம் ஆண்டிற்கான குஜராத்தி இலக்கிய விருது வழங்கியது. இதனால் அவர் குஜராத்தியில் தலைசிறந்த எழுத்தாளராக அங்கீகாரம் பெற்றார். அதே ஆண்டில் உத்திரப் பிரதேச அரசாங்கம் ''பரமசகாமிருத்யூ'' என்ற ஹிந்தி நூலுக்குப் பரிசளித்து, சிறந்த ஹிந்தி எழுத்தாளர் என்ற கௌரவத்தையும் வழங்கியது. ஒரே ஆண்டில் ஒரு மராட்டி

யரைக் குஜராத்தியிலும், ஹிந்தி மொழியினரும் தம்மவராகப் போற்றி, தம் நன்றியைத் தெரிவித்துக்கொண்டனர்.

அடுத்து 1967-ஆம் ஆண்டில் சர்தார் பட்டேல் பல்கலைக் கழகமும், 1971-இல் குஜராத் வித்யாலயமும், 1974-இல் காசி வித்யாபீடமும் டி.லிட். கௌரவப் பட்டங்களை வழங்கின. 1968-இல் ஹிந்தி இலக்கிய சம்மேளனம் தமது மிக உயர்ந்த விருதான ''சாகித்திய வாசஸ்பதி'' பட்டம் அளித்துச் சிறப்பித்தது. 1971-இல் சாகித்திய அகாதெமியும் சிறப்பு உறுப்பினராகத் தேர்ந்தெடுத்து (ஃபெல்லோ) அவருக்குப் பெருமை சேர்த்தது. ஒவ்வோர் ஆண்டும் அவரது பிறந்த நாளன்று, ஏதாவது கொண்டாட்டமும், நூல் வெளியீடும் தவறாமல் நிகழ்ந்தன. அவரது 95-ஆம் வயதில் ''சமன்வய கே சாதக்'' என்ற பாராட்டு நூல் வெளியிடப்பட்டது. இந்நூல் அன்றைய பாரத உப ராஷ்டிரபதி ஜஸ்டிஸ் ஹிதயத்துல்லாவினால் வழங்கப் பட்டது.

''பத்மபூஷண்'' விருது கிடைத்தபோது அவர் சொன்னார்: ''காந்திஜியைப் போன்ற யகபுருஷனின் தொண்டனான காரணத்தினால் எனக்கு இந்தப் பெருஞ்சிறப்புக் கிடைத்தது. என் கண்முன்னால், பாரதம் விடுதலை பெற்றதைப் பார்க்கக் கொடுத்து வைத்திருந்தேன். இதிலேயே எனக்கு எல்லாம் கிடைத்துவிட்டது. உண்மையில் எனக்கு வேறு எந்தப் பதவி—பட்டம்—பாராட்டும் தேவையில்லை.''

அவருக்குத் தேவையில்லை எனினும் அவரை மதித்துப் பாராட்ட வேண்டிய தேவை நமக்கு உண்டு. அவரைப் பாராட்டுவதில் நாம் பெருமையுற்றோம். பரிசுகளின் மதிப்பு உயர்ந்தது. சான்றோர்களின் சிறப்பு இதில்தான் அடங்கியுள்ளது.

# மனிதன்—குடும்பம்—சமூகம்

காகா சாஹப் தனி மனிதனாக எப்போது இருந்தார்? ஒரு ஸ்தாபனமாகவே திகழ்ந்தார் எனலாம். இப்படிப்பட்ட மனிதருக்குத் தனிப்பட்ட முறையில் சொந்தபந்தங்கள் இல்லையெனினும், அவரது குணநலன்கள் ஆராய்ச்சிக்குரியன. ஒரு சாதனையாளரின் பல பண்புகள் உருமாறிப் போயினும், எந்தக் கூட்டத்திலும் அவர் தனித்து விளங்கச் செய்த ஒரு சில கூறுகள் அவரிடம் சிறப்புற அமைந்திருந்ததுண்டு.

இதுவரை காகா சாஹப்பை உண்மையைத் தேடி அலையும் ஒரு நிரந்தர நாடோடியாகப் பார்த்தோம். அவர் உண்மையில் ஒரு யோக மகா புருஷன். பெரும் புகழ்ச் செல்வர்; பற்றுக்களை நீத்தவர்; நடமாடும் உலக அகராதி; சத்திய நெறியாளர்; ஒழுக்க சீலர்; லட்சியவாதி; பேரன்பர்; வேடிக்கைப் பிரியர்; கவியுள்ளங் கொண்டவர்; பிறரைப் புரிந்துகொள்ளும் பாங்கு மிக்கவர்; ''உலக மகா குடும்பத்தி''னை வேண்டி நின்றவர்; உலக மகா கவி, தேசப்பிதா ஆகிய இருவரது சிறப்பியல்புகளும் ஒன்றாக இணைந்த பெரியார்தான் காகா சாஹப்.

இத்தகைய மனிதர்களிடம் தெய்வத்தன்மையை ஏற்றிச் சொல்வது விரும்பத்தக்கது மட்டுமன்று, ஏற்றுக்கொள்ளத் தக்கதுமன்று. எந்த மனிதனும் முழுமையானவன் அல்லன்—ஆதலால் விரும்பத் தக்கதன்று; ஏதாவது தெய்வமாகிவிட்ட பிறகு, அவர்களது உண்மை மதிப்பினை மறந்து, அவர்கள் பின் பற்றிய கொள்கைகளைக் கைவிட்டு விடுவதால் ஏற்கத் தக்கதன்று. காகா சாஹப், குற்றம் குறைகள் நிறைந்த ஒரு சாதாரண மனிதர். பலவிதச் சிறப்புகளால் அவரது தர்க்கவாதமும் செயல் திறனும் காண்பாரிடம் பிரமிப்பையும் அவரது அறிவுக்குத் தலைவணங்கும் பாங்கையும் தோற்றுவித்தன. இதைப் பலரும் உணர்ந்திருந்தனர். சில சமயம் அவர் முரட்டுப் பிடிவாதம் செய்வதுண்டு. முரண்டு பிடித்தல் தீயதன்று, எனினும் ஒரு எல்லைவரைதான் பொறுக்கலாம். இப்படி ஓரிரண்டு செய்திகளை நினைவுகூர்வோம்.

1956-இல் நடந்தது—விஷ்ணு பிரபாகர் ஆகாசவாணியின் நாடகத் துறையில் இருந்தார். காகா சாஹப் ஒருமுறை ஓர் உரை ஒலிபரப்ப வேண்டியிருந்தது. அதில் சில வரிகள் பாகிஸ்தானுக்குப் பிடிக்காமல் போகக்கூடும். பாரத அரசாங்கம் அண்டை

நாடுகளைத் தாக்கிப் பேசுவதில்லை என்ற விதியைப் பின்பற்றியது.

''காகா சாஹப் சாதாரணப் பேச்சாளர் இல்லை. அவரது உரையை மாற்றுவது எளிதன்று. அதிகாரிகள் தங்களுக்குள் கலந்தாலோசித்து என்னிடம் வந்து நண்பன் என்ற முறையில், அவருக்கு எடுத்துச் சொல்லுமாறு கேட்டனர். அவ்வரிகளை நீக்கவேண்டுமென்று கோரினர். நான் அவ்வாறே கேட்டுக் கொண்டேன். என் பேச்சைக் கேட்டவர் என்னை ஏறிட்டுப் பார்த்தார். திடீரென அன்பு வடிவம் கடுமையாக மாறியது. அதே கடுமை மிக்க சொற்களில் 'நான் அவற்றை நீக்க முடியாது' என்றார். நான் மீண்டும் வேண்டிக்கொண்டேன். இதனால் உரையின் போக்கில் பெரும் மாற்றம் இல்லை. ஆனால் அவர் வளைந்து கொடுக்கவில்லை. பிறகு நாங்கள் முடிவு செய்தோம்—காகா சாஹப் மிகவும் பெரியவர். பின்னால் அரசாங்கப் பிரச்சினைகள் எதுவும் நேரிட்டால் அவர் பொறுப் பேற்பார் என நினைத்தோம்'' என்கிறார் விஷ்ணு பிரபாகர்.

இந்த இயல்பு காரணமாகவே அவரது தோழர்கள் பலரும் அவரது உண்மை உள்ளத்தை அறிந்துகொள்ள முடியவில்லை. மனித உறவுகளைக் கொண்டுதான் நாம் ஒருவரை மதிப்பிட முடியும். காகா சாஹப்பின் குடும்ப வாழ்க்கை வெகு விரைவில் முடிந்துவிட்டிருந்தது. 44 வயதாகும்போது அவரது மனைவி 1929-இல் காலமானார். இரண்டு பிள்ளைகளைப் பெற்ற பெருமைக்குரிய அந்த அன்னைக்கு நாற்பது வயதே ஆகி இருந்தது. இவர்களது இல்லற வாழ்க்கையில் கட்டுப்பாடான நியமங்கள் காரணமாகத் தயக்கமும் அன்பும் கலந்திருந்த கதை முன்னால் சொல்லப்பட்டது. கணவனது இயல்புகளை ஏற்றுக் கொண்டு அவரது மனைவி அவருடன் ஒன்றி வாழ்ந்தார் என்பதை யும் ஏற்கெனவே பார்த்தோம். காகாவுக்குச் சிறைவாசம் கிடைக்கும்போதெல்லாம் அவருக்கு முன்னதாகவே காகி சிறை சென்றிருப்பார். ஆசிரமத்தில் இருந்தபோதும் அந்த வாழ்க்கையை ஏற்க முயன்றார். இவற்றில் அவர் வெற்றி பெற்ற போதிலும் அவருக்கு என்று இருந்த சில நியமங்களில் உறுதியாக நிற்கவேண்டி இருந்தது. காந்திஜியின் முன்னால்கூட அவர் பின்வாங்கியதில்லை. அவரது மகன் தன் அன்னையை முழு மரியாதையுடனும், அன்புடனும் இனிமையாக நினைவுகூர்ந்து எழுதுகிறார்: ''அம்மா, அப்பாவுடன் எப்படித் தர்க்கவாதம் செய்துவந்தார் என்பது இப்போதும் எனக்கு நினைவிருக்கிறது. அதைக் கேட்கும்போது அவர் பழைய ஆசாரமுள்ள ஹிந்துக் குடும்பத்துப் பெண்மணிபோலத் தோன்றுவார். அப்பாவுக்குத்

தம் கருத்துக்களை நிலைநாட்ட காந்திஜியைத் துணைக்கு அழைக்க வேண்டியிருந்தது. கடைசியில் தீண்டாமையை ஒழிப்பது பிராமணர்களின் கடமை என்பதை அம்மா ஒப்புக்கொண்டார்.'' (சமன்வய கே சாதக், 144).

முஸ்லீம்களுடன் பழகியபோதும் இதே பிரச்னை வந்தது. பின்பொரு சமயம் ஒரு ஹரிஜனப் பையனைத் தத்தெடுத்துக் கொண்டார். அவனும் இமாம் சாஹப்பின் பெண் அமீனா பஹனும் சமையல் அறையில் அவளுக்கு உதவலாயினர்.

கணவன் மனைவியின் எண்ணங்களில் வேற்றுமை நிலவியது. இருவரது கருத்துக்களும் ஒத்துப் போகாதவரை இருவரும் தனித்திருக்க வேண்டும் என்பது காகாவின் கருத்து. அப்போதெல்லாம், காகி தன் தாய் வீடு சென்று வசிப்பதுண்டு. காகா சாஹப் இதைப் பற்றி எழுதுகிறார்: ''ஆசிரம வாழ்க்கையில் என்னோடு சேர்ந்து வாழ்ந்து எனக்கும் என் தோழர்களுக்கும் எத்தனையோ தொண்டு செய்திருக்கிறாள். ஆனால் அவள் ஆசிரம வாழ்க்கையை விரும்பி ஏற்கவில்லை, எனவே, பலமுறை நான் அவளைத் தாய் வீட்டிற்கு அனுப்பியதுண்டு.''

காகிக்குக் கடைசியில் காசநோய் ஏற்பட்டது. அப்போது பல ஆண்டுகள் அவர் தம் தாயுடன் தனியே வசித்தார். கருத்து வேற்றுமைகளும் இந்தத் தனிமை வாழ்க்கைக்குக் காரணமாயிருந்திருக்கலாம். ஸ்ரீமதி ஜோதி தாராவி இவரது இயல்புகளை இவ்வாறு வர்ணித்து எழுதுகிறார்: கருத்து வேறுபாடுகள் அவரது உடல் நிலையைப் பாதித்தன. அவருக்குக் காச நோய் கண்டது. மூன்று ஆண்டுகள் அவர் கணவனைப் பிரிந்து வாழ்ந்தார். பிறகு வெகுநாள் தாங்காது என்று தோன்றியவுடன் காந்திஜிக்குக் கடிதம் எழுதினார். ஆசிரமத்தில் வசிக்க அனுமதிக்குமாறு கேட்டார். அனுமதி கிடைத்தவுடன் தன் பெரிய மகன் சதீஷுடன் ஆசிரமம் வந்து சேர்ந்தார். காகா சாஹப் அவருடன் மீண்டும் கலகலப்பாக அளவளாவியபோது மிகவும் மகிழ்ச்சியடைந்தார். ''காகா சாஹப் என்னுடன் பேசினார். பதிவிரதையாக வாழும் பெண்மணிக்குக் கணவனின் ஆளுமையையும், அன்பையும் தவிர வேறென்ன வேண்டும்?'' என்றார் அவர். (சமன்வய கே சாதக், 108).

கணவனிடம் மிகுந்த நேசம் கொண்டவராயினும், அவர் அஞ்சாமை மிகுந்தவர். 1920-இல் கலகம் விளைவிக்கக்கூடிய நூல்களை விற்றதற்காக அவரைக் கைது செய்து, பிறகு அன்று மாலையே எச்சரிக்கை செய்து விடுவித்தனர்: ''எச்சரிக்கையாம், எச்சரிக்கை. இவர்களது எச்சரிக்கையை நாம் பொருட்படுத்தப் போகிறோமா என்ன?'' என்றார் காகி.

காகா சாஹப்பின் இரண்டு புத்திரர்கள் சதீஷும், பாலும். பல கருத்து வேறுபாடுகளிருந்தும் பெற்றோரிடம் மிகவும் விசுவாசத்துடன் இருந்தனர். அவர்களது பெருமைக்கு முன் தலைவணங்கி நின்றனர். அவர்கள் இருவரும் காந்திஜியின் தண்டி யாத்திரையில் கலந்துகொண்டனர். அவர்களும் கைது செய்யப்பட்டுச் சபெர்மதி சிறையில் தனி அறையில் அடைக்கப் பட்டனர். ஒரு நாள் சூப்பரின்டெண்ட் அலுவலகக் கணக்கர் ஒருவர் இவர்களை அழைத்து, அடுத்துள்ள நூல் நிலைய அறைக் குள் செல்லுமாறு சொன்னார். சதீஷ் எழுதுகிறார்: "நாங்கள் அறைக்குள் நுழைந்தோம். அங்கே இருந்தது யார்? நூல்களில் ஆழ்ந்து போயிருந்தார் ஒருவர். தற்செயலாக நிகழ்ந்த இந்த சந்திப்பில் அங்கே நாங்கள் கண்டது காகா சாஹப்" என்று உணர்ந் தோம். கலங்கிய கண்களுடன் அவர் எங்கள் இருவரையும் அணைத்துக்கொண்டு உணர்ச்சி மேலிட்ட குரலில் கூறினார்: "உங்கள் இருவரையும் கைதிகள் உடையில் பார்க்க விரும்பினேன். எனக்குப் பெருமையாய் இருக்கிறது. நீங்கள் இருவரும் காந்திஜி யின் படை வீரர்களாக மாறியதுபற்றி நான் மிக மகிழ்கிறேன்."

இந்தப் பெருமிதம் அவருக்கு வாழ்வில் இறுதிவரை நீடித்தது. இரு புத்திரர்களும் உயர் கல்வி கற்றனர். சதீஷ் 20 ஆண்டுகள் பாரத சர்க்காரின் வெளிநாட்டுத் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றார். பால் பாரத அரசின் பொறியியல் வளர்ச்சித் துறை யில் டைரக்டர் ஜெனரலாகப் பணியாற்றி ஓய்வு பெற்றார். ஆனால், இன்ப துன்பங்கள் இணைந்த இவ்வுலக வாழ்க்கையில் தமது 89-ஆம் வயதில் காகா ஒரு கொடிய நிகழ்ச்சியைத் தன் கண்ணால் காண நேர்ந்தது. அவரது இளைய மகன் பால் திடீரென 1976 மே 26ஆம் நாள் மாரடைப்பால் காலமானார். தமது உரமுடைய நெஞ்சினால் இதை அவர் எவ்வாறு தாங்கிக் கொண்டார் என்பதை விஷ்ணு பிரபாகர் கண்கூடாகக் கண்டிருந்தார்.

அமைதியும், உறுதியுமாக நின்றார் அவர். அவருக்குத் துயரம் இல்லை என்று சொல்ல முடியாது. அதன் முதல் அடியை ஏற்றுக்கொண்டபின் ருத்திரனின் விஸ்வ ரூபத்தைத் தரிசித்தார். பின்னர் அமைதியானார். வேறு யாராவதாக இருந்தால், அஞ்சி நடுங்கி, சூழ்நிலையையே வேறுவிதமாக மாற்றி, சோகத்தின் கோரப் பிடிக்குள் அகப்பட்டு மாய்ந்திருப்பர். இங்கே இன்னொரு செய்தி குறிப்பிடத்தக்கது. 1960-இல் பம்பாய் அரசினர் காகா வுக்குப் பரிசு கொடுத்தபோது, அவர் தமது மருமகள் சந்தனுக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பை வழங்கினார். இதன் தலைப்பு "சி. சந்தனுக்கு எழுதியவை" என்பதாகும். சந்தன் அவரது

மிகப் பிரியமான கெட்டிக்கார மாணவியும்கூட. பிறகு காகாவின் பெரிய மகன் சதீஷுக்கும் சந்தனுக்கும் திருமணமாயிற்று. இது இரு ஜாதிகளுக்கு இடையே, இரு மாநிலங்களுக்கு இடையே, இரு மதங்களுக்கு இடையே, நிகழ்ந்த கலப்புத் திருமணம். 23 ஆண்டுகள் மகிழ்வோடு நடத்திய இல்லற வாழ்க்கையில் வெற்றி கண்டபின் 1963-இல் வாஷிங்டனில் சந்தனின் துன்ப முடிவு ஏற்பட்டது. இதே சந்தன் கேட்ட பலவிதமான கேள்விகளுக்குக் காகா எவ்வாறு தெளிந்த சிந்தனையுடன் பதில் அளித்தார் என்பது புகழ்ச்சிக்குரியதோடு பிரமிப்பும் தருவதாகும்.

தமது பேரன் பேத்திகளுக்குத் தாம் செய்யவேண்டிய கடமைகளை இயன்றவரை வழுவாது செய்தார். பாலனின் மனைவி டெல்லியில் திடீரென்று காலமானபோது தன்னுடைய வயதையும் வேலைகளையும் மறந்து இரண்டு சின்னஞ்சிறு குழந்தைகளை அவர்களது வீட்டிற்குச் சென்று ஓடியாடிக் கவனித்து வந்தார்.

குழந்தைகளோடு இருக்கும்போது குழந்தையாகவே மாறிவிட காகா சாஹப்பினால் முடிந்தது. சாஸ்திரங்கள் சொல்கின்றபடி உண்மையான பண்டிதர்கள் தமது அறிவுபூர்வமான சிந்தனைகளை மறந்து குழந்தைகளாக வாழ வேண்டும். அவர்களது கருணையும் தொண்டும் ஒரு குறிப்பிட்ட குடும்பத்துக்குள் அடங்கிவிடக்கூடாது.

சமுதாயம் முழுவதுமே அவர்களுடைய குடும்பமாகும். இரண்டு புத்திரர்களைத் தவிர, அவருக்கென்று மகள் இல்லை. 1979 மே மாதம் குமாரி ரஹ்னா பஹன் தயாம்ஜியும், குமாரி சரோஜினி பஹன் நானாவதியும், அவருடன் வந்து வசிக்கலாயினர். சரோஜினி பஹன் அவரது உண்மையான வாரிசாகிவிட்டார். குமாரி ரஹ்னா பஹன் 1975 மே 17-இல் மரணமடைந்தார். சரோஜினி பஹன் இன்றும் காகா சாஹப் இருந்த வீட்டை ஒளிமயமாக்கி வருகின்றார். இவர்களைத் தவிர பல வெளிநாடுகளில் அவரது பல குழந்தைகள் வாழ்ந்தும் பணியாற்றியும் வருகின்றனர். நமது கலாசாரத்தின் ஆணி வேரான ''வசுதேவ குடும்பம்'' என்தற்கு இதுவே சான்று எனலாம்.

# ஒருங்கிணைப்பையும், முழுமையையும் தேடி . . .

காகா சாஹப் தம் பொது வாழ்க்கையை ஒரு புரட்சிக்கார ராகத் தொடங்கினார். பின்னர் ஒழுங்கை நிலைநாட்டிய யோகி யாக முடித்துக்கொண்டார். இதற்கான மூல காரணங்களை ஆராய வேண்டும். அயராத சுற்றுப் பயணியாக விளங்கிய அவர் பாரதத்தை மட்டுமின்றி உலகம் முழுவதையுமே கண்டு வந்தார். ஸ்ரீ உமாசங்கர் ஜோஷி மிக நன்றாக எழுதுகிறார்: ''எப்படி ஒரு பட்டாம்பூச்சி ஒவ்வொரு மலராகத் தாவித் திரிகிறதோ, அதன் மூலம் தாவரங்கள் வளர்ச்சியில் உதவி செய்கிறதோ, அப்படியே காகா இங்குமங்கும் சுற்றித் திரிந்து ஒரு மகத்தான மறைமுகத் தொண்டாற்றியுள்ளார். அவரது எல்லாப் பயணங்களிலும் ஒன்றுபட்ட உலக இலட்சியமானது வலுவடைந்து வரலாயிற்று. அவர் சென்றவிடமெல்லாம் இதன் விளைவும் ஏற்பட்டது. இமயத்தின் உற்சாகமூட்டக்கூடிய ஏகாந்தத்தில் சுற்றிச் சுற்றி நடந்தபோது, பாரத கலாசாரத்தின் போக்கு, அதன் குறிக்கோள், அதன் பரந்த விரிந்த பாரம்பரியம் முதலியன ஒன்றிணைந்த நிலையில் அவரது சிந்தையில் பதிந்தன.''

பாரதம் விடுதலை பெற்ற பின் அவர் வெளிநாடுகள் பலவற்றி லும் சுற்றுப் பிரயாணம் செய்தார். இமயத்தில் கிடைத்த ஒருமைப்பாட்டுக் கருத்துக்கள் மேலும் வலுப்பெற்றன. பாரதத் தின் ஒற்றுமை உலகம் முழுமையிலுமுள்ள மனிதகுலத்தின் ஒற்றுமையின் வலிமையாகத் தென்பட்டது. குஜராத்தின் இடைக் கால நிலையைப்பற்றி எழுதும்போது, ''1946-இல் புராதன குஜராத்திலிருந்த சர்வ மத சமநிலையுடன், சர்வ மத சம்மத நிலையினை எடுத்துரைத்தேன். காகா சாஹப்பிற்கு இந்தச் சொற்றொடர் பிடித்திருந்தது. காந்திஜியிடம் இதை அவர் குறிப்பிட்டதுண்டு. எல்லா மதங்களிலும் பல நல்ல அம்சங்கள் உள்ளன. அவை யாவும் என்னுடையவை. இன்றோ எல்லா சமயங்களும் எங்கோ ஒளிந்துகொண்டுள்ளன. உலகின் நிலைமை இது. சமயம் என்ற சொல்லே ஒவ்வாமை நோய்போல் விலக்க வேண்டிய ஒன்றாகத் தோன்றுகிறது. கடைசியில் சமயம் ஒன்று தான் ஒற்றுமைக்கு வழி என்றும் புலனாகின்றது. ஏதாவது ஒரு

சமயத்தைப் பின்பற்றவில்லை என்றாலும், சமயக் கருத்துக்களின் உணர்வு யாரிடம் உள்ளதோ, அவ்வாறே பொதுவான சமயத்தின் தேவை இன்றியமையாததாகப் படுகின்றது. ஒன்றிரண்டு புராதன சமயங்களைவிட ஒரு புதிய சமதர்ம நெறி கட்டாயம் தேவையென்றே எண்ண வேண்டியுள்ளது.'' (சமன்வய யோகம்: சமன்வய கே சாதக், 109).

இந்தக் கட்டாயத்தை உணர்ந்த காகா சாஹப் இதைச் செயல்படுத்துவதற்காக 1967 ஜூலை 10ஆம் நாள் உலக ஒருமைப்பாட்டுச் சங்கத்தை நிறுவினார். தனி மனிதன் வாழ்க்கையாகட்டும், தேச மக்களுடையதாகட்டும், உலக மனிதகுலத்தின் வாழ்வாகட்டும், எங்கே தலை தூக்கும் போராட்டமாயினும், அதனை விலக்கி, உயர்ந்த நிலைகளை நாடும் ஒற்றுமை ஏற்பட்டால்தான் பயனுடையதும், சிறப்புடையதுமாகும். கலாசாரத்தின் முற்பகுதியில் போராட்டமும் ஒத்துழைப்பும் இருக்குமானால், பிற்பகுதியில் ஒன்றுபட்ட சமநிலையை உறுதியாக எட்ட முடியும்.

விடுதலைக்குமுன் ஹிந்தியா, ஹிந்துஸ்தானியா என்ற போராட்டம் எழுந்தபோது, அவர் எழுதினார்: ''நான் இவ்வாறு முடிவு செய்துவிட்டேன். ஹிந்துஸ்தானி பிரசாரம் என்ற பெயரில் ஹிந்தி, உருது எழுத்துக் கலப்பு, நாகரி உருது எழுத்துச் சேர்க்கை ஆகியவற்றை நான் மறுக்கப்போவதில்லை. ஆனால் பிரசாரம் செய்யப் போவதில்லை. இவற்றிற்குப்பின் பொதிந்துள்ள ஒற்றுமை என்னும் உயரிய நீதியைப் புகட்டப்போகிறேன். எம்மதமும் சமமே என்பதை ஏற்றுக்கொண்டு நாடு முழுவதிலும் சுற்றித் திரிந்து எம்மதமும் சமம் என்பதைவிட எம்மதமும் எனக்குச் சம்மதமே என்ற கொள்கையைப் பிரசாரம் செய்யப் போகிறேன்.''

உலக ஒருமைப்பாட்டுச் சங்கம் நிறுவுவதற்கு முன்னால் அவர் இப்படியெல்லாந்தான் எண்ணமிட்டார். ஆகவே, 1964-இல் பீஹாரின் ''சமன்வய'' ஆசிரமத்தின் அலுவல்களில் கவனம் செலுத்தலானார். அடுத்த ஆண்டே அதன் நியாய சபையின் தலைவரானார். இதே ஆண்டில்தான் அங்கே ''ஒருமைப்பாட்டுத் திருவிழா''வும் கொண்டாடப்பட்டது.

காகா சாஹப் காந்திஜியின் அனுமதியின்றியோ, அவருடன் கலந்தாலோசிக்காமலேயோ எதையும் செய்ததில்லை. ஆனால், உலக ஒருமைப்பாட்டுச் சங்கத்தை நிறுவிய தருணத்தில் காந்திஜி உயிரோடு இருக்கவில்லை. ஆனால் அவருடன் வெகுநாள் தங்கியிருந்த காலத்திலேயே காகா காந்தியநெறிகளை முழுவதும் பயின்று இருந்தார். எனவே, சங்கம் நிறுவியபோது அவர் இவ்

வாறு எழுதினார்: ''மகாத்மா காந்தி நிறுவிய கடைசி நிறுவனத்தின் உண்மைக் குறிக்கோள் கலாசாரப் பொதுமையேயாகும். பாரதத்தின் பிராந்திய வேற்றுமைகளினூடே இழையோடும் ஒன்றுபட்ட கலாசாரத்தினை வெளிப்படுத்தவே அவர் ஹிந்துஸ்தானி என்ற அழகிய சொல்லைத் தேர்ந்தெடுத்தார். இதில்தான் பன்மைகளில் காணும் ஒருமை என்ற உயரிய பொதுமை காணக் கிடைக்கிறது. ஒளிவுமறைவின்றி உள்ளத்து எண்ணங்களைப் பரிமாறிக்கொண்டு மக்கள் தொகை முழுவதும் ஒன்றுபட்டுப் பரந்த ஆன்மாவின் உள்ளார்ந்த தாகங்களை உணரவேண்டும். அதுவே வாழ்வின் வெற்றியும் உலகிற்குத் தொண்டாற்றும் காந்திய வாதத்தின் உயரிய நெறியுமாகும். (சமன்வய கே சாதக், 203).

ஹிந்தி, ஹிந்துஸ்தானி பிரசார வேலையும் இதே அடிப்படையில்தான் மேற்கொள்ளப்பட்டது. மத ஒற்றுமை என்பது அறம் மட்டும் அன்று. சமூக நெறியும், கலாசாரப் பாதையும் இதுவேயாம்.

சங்கத்தின் நிர்வாகச் செயலாளர் பொறுப்பு காகா மீது சுமத்தப்பட்டது. வேலையின் சிறப்பினைக் கருதி அவர் அதை ஏற்றுக் கொண்டார். தன் வயதையோ மாறிவரும் காலத்தின் பிரதிகூலங்களையோ அவர் எண்ணிப் பார்க்கவில்லை. 90 வயதிலும் பத்துப் பன்னிரெண்டு மணி நேரம் வேலை செய்தார். பிறகு, வயதிற்குரிய தள்ளாமை அவரை அழுத்தியது. அவர் கொஞ்சம் கொஞ்சமாக வேலைகளைக் குறைத்துக் கொள்ளத் தொடங்கினார். இளைஞர்களுக்கு இடமளிப்பதற்காக அகில பாரதீய அடிப்படைக் கல்விக் குழு, காந்தி விசார் பரிஷத், காந்தி நினைவாலயம் முதலிய நிறுவனங்களின் முக்கிய பதவிகளிலிருந்து விலக ஆரம்பித்தார். 1976இல் ஹிந்துஸ்தானி பிரசார சமிதியின் தலைமைப் பொறுப்பைக் குமாரி சரோஜினி நானாவதியிடம் ஒப்படைத்தார். சம்ருதிலால் நானாவதியை ''மங்கள் பிரபாத்'' தின் ஆசிரியராக்கினார்.

செவிப்புலனின் கேட்கும் திறன் நாளாவட்டத்தில் குறைந்து கொண்டே வந்தது. ''என்னைப்பற்றி என்ன சொல்கிறார்களோ என்று கவலைப்படாமல் இனிமேல் நான் பேசிக்கொண்டே போகலாம். இதனால் நிந்தனைகளைக் கேட்கும் குற்றத்திலிருந்து பிழைத்துப் போனேன்'' என்று காகா சிரித்தபடியே கூறுவதுண்டு. பார்க்க வருபவர்களுக்காகக் கரும்பலகையும் பலப்பமும் வைக்கப் படுவதுண்டு. இது சரிப்படவில்லை. மனிதனைப் புரிந்துகொள்ள முடியாத நிலை இப்போது அதிகரித்து வந்தது. யாராவது வரும் போது அவராகப் புரிந்து கொள்ள முடியாவிட்டால் சரோஜ்

பஹறனைக் கூப்பிட்டு, ''இவர்களுக்கு அந்தக் கதையைச் சொல்லு'' என்பார்.

அவர் சொன்ன அந்தக் கதை இதுதான்—

மிகப் பழைய கதை. எனது பெரிய அண்ணனின் இரண்டாவது மகனின் திருமணம். என் பெரிய அண்ணன் உலக பந்தங்களிலிருந்து விலகி வாழ்ந்தார். எனவே, என்னிடம் கன்னிகாதானம் செய்து கொடுக்கும்படி சொன்னார்.

நான் திருமண மண்டபத்தில் சென்று அமர்ந்தேன். கம்பீரமாகக் கன்னிகாதான மந்திரங்களை எடுத்துக் கூறினேன். திருமணம் நிறைவேறியது. கல்யாணம் முடிந்து அடுத்த மாதம் நான் எங்கோ போய்க்கொண்டிருந்தேன். மாப்பிள்ளை எதிரே வந்துகொண்டிருந்தார். தலை தாழ்த்தி என்னை வணங்கினார். அவர் யாரென்று என்னால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. யாரோ வணக்கம் செலுத்துகிறார்; நாமும் பதில் வணக்கம் செய்வதுதான் முறை என்று நினைத்து ஒப்புக்கு வணக்கம் செலுத்திவிட்டு, மேலே சென்றுவிட்டேன். மாப்பிள்ளைக்கு மிகவும் தவறாகப் பட்டுவிட்டது. வரவேற்புக்கான ஒரு வார்த்தை இல்லை. உள்ளம் பேசுகின்ற அறிகுறி முகத்தில் இல்லை. மாமனார் பெரியவர் ஏனோதானோ என்று போகிறாரே?

தம் வீட்டுக்குச் சென்று இதைச் சொல்லி தாம் தூம் என்று பேசியிருக்கிறார்—''இப்போதுதான் தன் கரங்களாலேயே எனக்கு இந்த மாமனார் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்—அதற்குள் யாரென்று அடையாளம் கண்டு கொள்ளக்கூட மறுத்துவிட்டாரே?''

குற்றச்சாட்டு என் காதுகளுக்கு எட்டியது. நான் வெட்கிப் போனேன். மாப்பிள்ளைக்கும், சம்பந்தி வீட்டாருக்கும் பிழை நேர்ந்துவிட்டதைச் சொல்லி அனுப்பினேன். மாப்பிள்ளையை நான் அடையாளம் கண்டு கொள்ளாததால்தான் நான் அவருடன் எதுவும் பேசவில்லை. இதை நம்புங்கள். இப்போது வேண்டுமானால் நான மனதார மன்னிப்புக் கேட்டுவிடலாம். ஆனால், முகம் மறந்துவிடும் பலவீனத்தை எவ்வாறு விளக்குவேன்? எத்தனை தடவை நேர்ந்தாலும், மன்னிப்புக் கேட்பேன். ஆனால் மீண்டும் பிழை நேராது என்று எப்படி நம்பச் செய்வேன். என்னுடைய தவிப்பைக் கேட்டுச் சம்பந்திகள் சிரித்து விட்டனர். எங்கள் ஜாதி முழுவதும் இந்தக் கதை பரவி விட்டது. (காந்தியுக் கே சல்தே சிராக், 199).

1974 ஆகஸ்ட் 26 ஒரு பெண்ணுக்கு எழுதிய கடிதத்தில் அவர் இவ்வாறு எழுதுகிறார்: ''என் உடல்நலம் சரியாக இருக்கிறது. ஆனால் நினைவாற்றல் குறைந்துகொண்டு வருகிறது. பல செய்திகளை மறந்துபோகிறேன். முன்பு பழகிய நண்பர்களும் புதியவராகத் தோன்றுகின்றனர். இதற்கு என்ன மருத்துவம் செய்யமுடியும்? முதுமைதான் எனது நோய். இதற்கு என்ன மருந்து? காதும் கேட்கவில்லை. படிக்கவும் முடியவில்லை.'' (சமன்வய கே சாதக், 306).

தொடக்கத்தில் அவர் பல நிறுவனங்களில் ஈடுபட விரும்பியது என்னவோ, உலகப் பொது மதம் அல்லது உலகப் பேரரசு ஒன்றை ஏற்படுத்தும் எண்ணத்துடன் உலக ஒருமைப்பாட்டுச் சங்கத்தில் பணி மேற்கொள்ள வேண்டும் என்ற ஆசையினால் தான். அவருடைய முந்தைய ஜப்பான் யாத்திரைகளும் (67, 68, 72ஆம் ஆண்டுகளில்) இதற்காகவே மேற்கொள்ளப்பட்டன. பத்தாண்டுகள் அந்த உலக ஒருமைப்பாட்டைக் கொணர எப்போதும் முயன்றவாறு இருந்தார். 1978-இல் அவரது உடல்நலம் குன்றத் தொடங்கியது. 93 வயதை நெருங்கிக்கொண்டிருந்த இந்த வயதிலும் அவர் இத்தனை ஓடியாடியதே விந்தையன்றோ? அவரும் ஒரு சமயம் காச நோயால் தாக்கப்பட்டு இருந்தவர் ஆயிற்றே?

தனது உடல் நலத்தையும் நீண்ட ஆயுளையும் குறித்து அவர் வேடிக்கையாகச் சொல்வதுண்டு: நான் மரணத்தைப்பற்றிச் சிந்தித்திருக்கிறேன். ஆனால் மரணபயத்தில் மாய்ந்து போனதில்லை. இதோ இவர்கள் இருவர் என்னைத் தேடி அலைகிறார்கள். ஒன்று முதுமை—மற்றொன்று மரணம். என்னைப் பிடிக்க எங்கெங்கோ போகிறார்கள்? யார் யாரிடமோ கேட்கிறார்கள்? காலையில் இங்கே இருந்தார்—இப்போது எங்கிருக்கிறாரோ தெரியாது என்று பதில் கிடைக்கிறது. எப்படியோ விசாரித்துக்கொண்டு, என்னுடைய முகவரியைத் தேடிப் புதிய புதிய இடங்களைத் தாண்டி, என்னைப் பிடிக்க முயன்று வருகின்றனர். அங்கேயும் அதே பதில்தான் ''சற்றுத் தாமதமாக வந்து விட்டீர்கள். இப்போதுதான் இங்கிருந்து கிளம்பி எங்கோ போனார்.''

கடைசியில் ஒரு நாள்—மரணத்திற்கு அவரது சரியான முகவரி தெரிந்து விட்டது. நெருங்கி வரும் முடிவின் காலடி யோசை கேட்கலாயிற்று. ஆனால், மரணம் என்பதும் வாழ்வின் மற்றொரு பெயர்தானே? காந்திஜீயின் 96 வயது நிரம்பிய அஹிம்சைத் துணைவர்; இயற்கை—மலர்கள்—விண்மீன்களின் அன்பில் வாழ்ந்த ஒரு மாமனிதன், ஒரு நாட்டின் வழிகாட்டி;

புரட்சி, கவிதை, செயல் அனைத்திலும் யோகியாக விளங்கியவர்; பல வகைகளிலும் பெருமை சேர்த்தவர்; ராஷ்டிரபாஷா பிரசாரத்திற்காகத் தம் வாழ்வையே அர்ப்பணித்தவர். ஒற்றுமைக்கு உயிர் நாடி—இவர் மரணத்திடம் ஏன் எப்படி அஞ்சுவார்? 1981 ஆகஸ்ட் 21-இல் பூவுலகைவிட்டுப் பொன்னுலக யாத்திரை மேற்கொண்டார். பல நாட்கள் காய்ச்சலால் அவதியுற்றார். 21-ஆம் நாள் காலை முதலே தாகம் ஏற்பட்டது. அவரது வாரிசு சரோஜினி நானுவத் கூறுகிறார்: ''காலை 10 மணிக்கு அவரது முகம் ஒளிவீசியது. கண்கள் திறந்திருந்தன. அங்கே மகிழ்ச்சி துள்ளியது. பெருமை பொங்கியது. ஏதோ திவ்விய தரிசனம் காணும் களிப்பு. முகத்தில் சுடர் விட்டது. ஒரு வருட நீண்ட வாழ்க்கையில் நான் எப்போதும் இப்படிப்பட்ட பேரொளியை அவர் முகத்தில் கண்டதில்லை. அவரது மகிழ்ச்சி எங்களுக்கும் பரவியது. இரண்டு மூன்று விநாடிகள் இப்படியே சென்றன. பிறகு நிறைவாக ஒரு பெருமூச்சுவிட்டு, அவர் கண்களை மூடி ஓய்வெடுக்கலானார்.

சற்று நேரத்திற்குப் பிறகு எங்கள் எல்லாரையும் ஒவ்வொருவராகப் பார்த்து, ஆசி வழங்குவதுபோல் புன்னகை செய்தார். பிற்பகல் இரண்டே முக்கால் மணிக்கு மெல்லிய ஓசையுடன் தம் உடலை எளிதாக நீத்தார். எங்களுக்குத் தெரியக்கூட இல்லை.

இறைவன் தரிசனம் தந்து தனது புதல்வனைத் தன் மடியில் ஏந்திக்கொண்டான். (மங்கள் ப்ரபாத், செப்டம்பர் 1951 பக்கம் 18).

அவரது பெரிய மகன் சதீஷ் எழுதுகிறார்: 21 ஆகஸ்ட் அவர் காந்திஜியைத் தரிசிப்பதுபோலவும் காந்திஜி அவரை அழைப்பது போலவும் தோன்றியது. பிறகு மெள்ள மெள்ள அமைதியுற்றார். உயிர்ப் பறவை கூட்டைவிட்டுப் பறந்துவிட்டது.

காகாவின் வார்த்தைகளில் ''மரணம் என்பது பிறப்புகளிடையே இளைப்பாறுதற்குரிய ஓய்வு நேரம். மரணம் என்பது நாடகங்களில் இரண்டு காட்சிகளின் இடைவேளை போன்றது—மரணம் என்பது பேச்சு மூச்சு என்னும் உயிர் பிரவாகத்தில் ஒரு இட்டுப் போன்றது. மரணம் மீண்டும் பிறவி எடுக்கத்தான் நிகழ்கிறது. மரணம் தீயாகாது. ஒளிமயமான இரத்தினம் அது. அதைத் தொடுவதில் ஆபத்து ஒன்றும் இல்லை.'' அவரது உடல் ''காந்திஜீயின் சமாதி அருகே வைக்கப்பட்டபோது ஆசார்ய கிருபளானி அங்கு நீர் மல்கும் கண்களால் பார்த்தபடி அடிக்கடி கரம் குவித்து வணங்கிக்கொண் டிருந்தார். தோழர், சக ஊழியர்,

தலைவர், காகாவிடம் அவர் இப்படிச் சொல்வதுபோல் இருந்தது. ''மீண்டும் ஒருமுறை என்னை முந்திச் செல்கிறீர்கள். பரவா யில்லை. நானும் வந்துகொண்டே இருக்கிறேன்.''

சதீஷ் அவரிடம் தனியாகி விட்டேனே என்று புலம்பிய போது, ''பைத்தியக்காரா, நான்தான் தனியாகி விட்டேன். உலகம் முழுவதிலும் என்னை உயிரே என்று அழைத்துப் போற்றிய ஒருவர் இருந்தார். அவர் போய் விட்டார்'' என்றார் கிருபளானி.

இவ்வாறு ஒரு விந்தையான ஜீவன் மண்ணுலக எல்லையைக் கடந்து விண்ணக எல்லைக்குள் நுழைந்தது. ஓர் அற்புதமான ஆன்மா இறவாப் புகழுடன் அமரத்துவம் எய்தியது.

# இலக்கிய சாதனை

காகா சாஹப் பல இலக்கியங்கள் படைத்தவர். பன் மொழிச் செல்வர். மராத்தி, குஜராத்தி, ஹிந்தி மொழி களில் சிறந்த நூல்கள் எழுதியுள்ளார். மராத்தி அவரது தாய் மொழி. அதை அவர் தம் தாயைப் போல நேசித்தார். வாழ்க்கை முழுவதையும் குஜராத்திக்கும், ஹிந்திக்கும் அர்ப்பணித்தாலும் அவரது கனவுமொழி மராத்திதான். குஜராத்தியை எத்துணை அளவு ஏற்றுக்கொண்டாரெனில் 100-க்கு 125 விழுக்காடு குஜராத்தியாக அவர் மாறிவிட்டிருந்தார். ஹிந்தியோ அனை வருக்கும் சொந்தமானது. அவர் ரவீந்திர கேல்கரிடம் சொன்னார்:

''என்னைப் பொறுத்தமட்டில் எனக்கு எல்லா மொழிகளுமே பிடித்தமானவை. மதிப்பிற்குரியவை. நீயும் அவ்வாறே ஏற்றுக் கொள்ள வேண்டும் என விரும்புகிறேன். நீ கொங்கணி மொழியில் எழுதுகிறாய். மராத்திக்கும் தொண்டு செய். ஹிந்தி நம் எல்லோ ருடைய மொழியுமாகும். நீ இதை அறிவாய். இதன் இலக்கியம் முழுவதையும் ஹிந்தியிலும், மராத்தியிலும் மொழிபெயர்த்துவிடு. பல மொழிகள் பேசப்படும் இந்நாட்டில் ஒவ்வொருவருக்கும் பல மொழிகள் தெரிந்திருக்க வேண்டும். எம்மதமும் சம்மதம் என்பது போல் அனைத்து மொழிகளும் சமமே என்று உணர்ந்து எல்லாம் நமதே என்றும் கொள்ளவேண்டும்.''

பிறகு தேசிய மொழியாக ஹிந்திதான் வேண்டும். ஆங்கிலம் கூடாது என்பதற்கு விளக்கம் தரும்போது இவ்வாறு கூறுகிறார்: ''ஆங்கிலம் தெரிந்தவர்கள் தனி ஜாதியாக உருவாகிக்கொண் டிருக்கின்றனர். பிறமொழிகள் கற்பதே இல்லை. ஆனால் மக்கள் மொழியைக் குழந்தைப் பருவம் முதலே கற்கவேண்டும். இல்லை யேல் அதைக் கற்க முடியாது.'' ஹிந்தியை ஏற்றுக்கொண்டதற்கு இரண்டு காரணங்கள் இருப்பதாகக் கருதினார் அவர்:

ஒன்று—அதன் எழுத்து நாகரி லிபியாகும். இதுவே வட மொழி அல்லது சம்ஸ்கிருதத்தின் எழுத்துமானதால் பாரதத்தில் பெருமளவில் பரவியுள்ளது. மற்றொரு காரணம் பல மாநிலங் களின் பெரியோர்களும் இதை ஏற்றுக்கொண்டுள்ளனர். சீனா, ஜப்பான், பர்மா, ஸ்ரீலங்கா, இந்தோனேஷியா முதலிய தேசங்

களுடன் நமது உறவு ஆங்கிலத்தின்மூலம் வளர்ந்து வருகிறது. இதில் எத்தனை சௌகரியம் இருந்தாலும் இது ஆசியாவிற்கு ஏற்பட்ட சாபக்கேடாகும். ஆசியாவின் சிறப்புகளை நாம் ஆங்கிலத்தின் மூலமாக முற்றும் உணர முடிவதில்லை.

ஹிந்தி மட்டுமல்லாமல்—கோவாவிற்குக் கொங்கணி மொழியை ஆதரித்த அவர் இதே கோணத்தில்தான் வாதிட்டார். அவருக்குக் கோவாவுடன் நெருங்கிய உறவு இருந்தது. அவரது முன்னோர்கள் கோவாவைச் சேர்ந்தவர்கள். அவரது மருமக்கள் இருவரும் வீட்டில் கொங்கணி பேசுவது உண்டு. ஆனால், அவர் இதற்காக கொங்கணியை ஆதரித்தார் என்பதில்லை. முற்றிலும் தனிப்பட்ட இரண்டு உலகங்களில் வசிக்கும் கோவாவின் இதர ஜாதிகளையும் இந்துக்களையும் இணைக்கும் சங்கிலி கொங்கணி மொழி ஒன்றேயாம். கோவாவின் கிறிஸ்தவர்கள் கிட்டத்தட்ட நான்கு நூற்றாண்டுகளாக பாரத கலாசார நீரோட்டத்தில் இருந்து விலக்கப்பட்டு இருக்கின்றனர். அவர்கள் நாட்டுப் பற்றுக்கொள்ளவும், பாரதப் பண்பாட்டை உணரவும் வேண்டுமேயானால், கொங்கணி மாத்திரமே இதற்குச் சிறந்த கருவியாக முடியும். (சமன்வய சே சாதக், ரவீந்திர கேலேகர்: 69).

எப்போதும் காகா ஆழ்ந்து சிந்திப்பவர். ''கரை விளிம்பில் நின்று மேலோட்டமாக எதையும் கவனிப்பவரில்லை. ஹிந்தி என்ற பொது மொழி மூலமாக அவர் ஆன்மிக ஒற்றுமையை ஏற்படுத்த விரும்பினார். ஹிந்தி ஒன்றே ஒருமைப்பாட்டை வளர்க்க முடியுமென்பதால் அவர் ஹிந்தியுடன் இணைந்து ஒன்றிப் போனார்.''

அவரது இலக்கியப் பணிகளை எண்ணும்போது ஐந்து வடிவங்கள் தெரிகின்றன. பிரசாரகர் என்பதுபற்றி ஏற்கெனவே அதிகம் சொல்லப்பட்டது. இன்னொன்று பத்திரிகைக்காரர் என்பது, மற்றொன்று எழுத்தாளர் என்ற நிலை; நான்காவது உரையாசிரியர், ஐந்தாவது பேரறிஞர்.

அவர் பல மொழிப் பத்திரிகைகளின் ஆசிரியராக இருந்தார். குஜராத்தி—நவஜீவன்; யங் இந்தியா; ஆனால் நாம் இங்கு ஹிந்தி பத்திரிகைகளை எடுத்துக்கொண்டால், மூன்று முக்கியமானவை—சர்வோதயம்; ''சப்திபோலி'', ''மங்கள் பிரபாத்.'' இவை பற்றி முன்பே விரிவாக எழுதப்பட்டுள்ளது. இங்கே இதுமட்டும் சொன்னால் போதும். அவர் தமது பயணங்களில் பெற்ற பயன் அனைத்தையும் பிறருக்கு விரிவாக எடுத்துரைத்துள்ளார். தாதா சர்வாதிகாரியின் வார்த்தைகளில் சொல்லவேண்டுமானால், ''அவரிடம் ஞானத்தின் மிகப் பெரிய ஊற்றிருந்தது. காமதேனு

வைப்போல அவரது சிந்தனைகள் சொற்பெருக்கெடுத்து இடைவிடாமல் நம்மிடையே பொழிந்துகொண்டேயிருந்தன.'' (சமன்வய கே சாதக், 24).

அதனால்தான் ''மங்கள் பிரபாத்'' ஒரே தனி மனிதனால் வளர்க்கப்பட்டு இத்தனை பெரிய சிந்தனைப் பகுதிகளோடு பல செய்திகளையும் தாங்கி வந்துகொண்டிருந்தது. 25 ஆண்டுகள் அவர் இதன் ஆசிரியராக இருந்தார். இந்தப் பத்திரிகையில் பெரும்பாலான பக்கங்களில் அவரது கட்டுரைகளே வெளிவந்து கொண்டிருந்தன.

நூல் வெளியீட்டுத் துறையில் அவருக்குத் தனித் தேர்ச்சியிருந்தது. இது அவருடைய மிக நீண்ட அநுபவத்தினால் கைவந்ததாகும். தம்மை அவ்வப்போது சந்தித்த பலதரப்பட்ட மனிதர்களைப்பற்றிக் காந்திஜி எழுதிய கட்டுரைகளை விஷ்ணு பிரபாகர் தொகுத்து ஒரு நூல் வடிவில் வெளியிட்டார். அந்த நூலினை விமர்சனம் செய்த காகா அந்த வெளியீடு சரியாகத் தொகுக்கப்படவில்லை என்கிறார். ஏனெனில் இதில் சேர்க்கப்பட்டிருந்த கட்டுரைகளில் சிலரைப் பற்றியன இந்நூலில் சேர்க்கப் படத் தகுந்தவையல்ல என்பது காரணம். காந்திஜி தாம் சந்தித்த எல்லோரைப்பற்றியும், அவர்களால் தமக்கேற்பட்ட பாதிப்புகளையும் குறித்து எழுதியிருக்கலாம். ஆனால் இந்நூலில் எதைச் சேர்ப்பதினாலாவது, நூலின் தரம் குறைவது போன்ற தீங்கு நேருமோ என்பதை தொகுப்பாசிரியர் கவனிக்க வேண்டும் என்பது அவரது வாதம்.

காகா சாஹப் ஆசிரியராக இருந்த பத்திரிகைகள் யாவும் சிறந்த கருத்துக்களை வெளியிட்ட தரமான பத்திரிகைகள். அவரிடம் ஒரு இலட்சியப் போக்கிருந்தது. இவற்றில் செய்திகளோ, விளம்பரங்களோ இரா. மனமகிழ்ச்சிக்கான வேடிக்கை—விளையாட்டுக்களைப்பற்றியும் குறைந்த பக்கங்களே இருக்கும். நிலைத்த பயனுடைய கட்டுரைகள் மட்டுமே பெரும்பாலும் சேர்க்கப்படும். இத்தகைய போக்கைப் புரிந்துகொள்வது இன்றும் இன்றியமையாதது.

அவர் எழுத்தாளர் மட்டுமன்று, மொழி வல்லுநருமாவார். குஜராத்தி எழுத்துக் கூட்டுதலில் இருந்த குழப்பத்தை நீக்கித் திருத்தியமைத்தவர் இவரே. அவர் ஹிந்தியின் பல எளிய இயல்பான பழைய சொற்களைக் கையாண்டதோடு, திருத்தமான லிபியை உருவாக்கும் முயற்சியிலும் ஈடுபட்டார்.

# கடிதம் எழுதும் ஆற்றல்

காகா சாஹப் சிறந்த எழுத்தாளர் என்ற முறையில் ஈடிணையற்றவர். நம் உள்ளத்தைத் தொடுவன அவரது படைப்புக்கள். மிக உயரியதாகட்டும், சிக்கலானதாகட்டும்— எந்தப் பொருளையும் எத்தனை தர்க்கரீதியாக ஆராய்ந்து எடுத்துரைப்பாரென்று அவரது கடிதங்களைப் பெறுபவருக்குத்தான் தெரியும். அவருடன் நிரந்தரமாகக் கடிதத் தொடர்பு வைத்துக் கொள்ள விழைவு ஏற்படும். அவர் தெளிவாகச் சொற்பொழிவாற்றவும் வல்லவர். வேடிக்கையும், அன்பும் கமழப் பேசக் கூடியவர். அவரது கடிதங்களில் இதயபூர்வமான அறிவுரை இருக்கும். அறிவுபூர்வமான ஆலோசனை இருக்கும். உயர்ந்த உட்பொருள் இருக்கும்; கடிதம் கிடைத்தவர் நம்பிக்கையோடும் உற்சாகத்தோடும் செயலாற்றி இன்னும் சிறந்த வாழ்வு வாழ வழி காட்டுதலும் அங்கேயிருக்கும். தம்முடைய மருமகளோடு பல தரப்பட்ட விஷயங்களைப்பற்றி ஒழுங்காகக் கடிதப் போக்கு வரத்து நடந்தபோது, அவற்றின் தொகுப்பினைப் பம்பாய் அரசு வெளியிடவும் செய்தது.

1925-இல் சத்தியாக்கிரகத்தை மேற்கொண்டு காந்திஜி உண்ணாவிரதம் இருந்தபோது, காகா காச நோயால் பீடிக்கப் பட்டு, சிஞ்சவட்டிற்கு உடல் நலம் பேணச்சென்றிருந்தார். அங்கிருந்தபடியே அவர் காந்திஜிக்கு எழுதினார்: ''நீங்கள் நினைக்குமளவுக்கு உயர ஆசைப்பட்டு உழைப்பவர்கள், நாங்கள், எங்கள் எல்லோருடைய பாவங்களையும் நீங்கள் சுமக்க ஆசைப் பட்டால் எங்களால் அதைத் தாங்கமுடியாது. செயல் எங்களுடையது—பிராயச்சித்தம் செய்வது நீங்களா? இது எந்த விதத்தில் நியாயமானது? உண்மையின்பேரில் ஆணையிட்டுச் சொல் கிறேன்—உங்கள் உபவாசம் அநியாயமானது. இக்கடிதம் கண்டவுடன் தவறை உணர்ந்து உபவாசத்தைக் கைவிட்டு முன்னுதாரணமாக இருங்கள்.'' (சமன்வய கே சாதக், 28, 1—2).

நாட்டியக் கலையைப்பற்றி இசைவல்லுநர் விஜயாவுக்கு இவ்வாறு எழுதுகிறார்.

''பிற நுண்கலைகளைவிட, இசையும், நடனமும் இதயத்தையும் ஆன்மாவையும் புத்துணர்ச்சி பெறச் செய்கின்றன. குறைந்த

செலவில் இவ்விரு கலைகளும் வாழ்விற்கு அதிக நிறைவைத் தரு கின்றன. யாரொருவர் இக்கலைகளை வெறும் பணத்திற்காக மட்டுமல்லாமல், வாழ்க்கையின் வரப்பிரசாதங்களாகவும் பயில் கிறார்களோ, அவரது குணநலம், உரையாடல், நடவடிக்கை, அறிவுடைமை அனைத்துமே அழகும், உண்மையும், இனிமையும், சுவையும் உடையதாகிவிடும்.''

இத்தகு சிறப்புகளை ''விளையாட்டுக் கலைஞர்களிடமும் நான் கண்டிருக்கிறேன். ஆனால் நம்முடைய காலத்தில், இசை, நடனம் ஆகிய இந்த இரு கலைகளுக்கு உரிய மதிப்புத் தராமல் தாழ்த்திப் பேசுவதே தேசியப் பண்பாகிவிட்டது. நமது நாட்டு வாழ்க்கை ஆரம்பம் முதலே கலைகள் இல்லாமல் இல்லை. நான் சிறியவனாயிருந்தபோது சதாராவிலும், புணேயிலும் பல இடங் களில் பெண்கள் வட்டமாகச் சுற்றிச் சுழன்று நடனமாடுவதையும் பூமியே அதிரும் அளவிற்கு விசையாக நாட்டியமாடுவதையும் கண்டிருக்கிறேன்.'' (சமன்வய கே சாதக், பக்கம் 295—96).

உண்மைக்கும் கலைக்கும் விளக்கமானவை இவ்விரு கடிதங் கள். பற்பல கடிதங்களில் வெவ்வேறு விஷயங்கள்—ஒன்றில் வட மொழியில் ஈடுபாடு கொள்ளுமாறு அறிவுரை, இயற்கை அன்பருக்குச் சமுத்திர வர்ணனை தத்ரூபமான விளக்கத்துடன்—சிலருடன் திருமணத்தையும், குழந்தை வளர்ப்பையும் பற்றிய விவாதம்—சுயநலத்தை விடுமாறு வேறொருவருக்கு உபதேசம்—விண்மீன்களை நேசித்துப் பழகு என்று இன்னொருவருக்கு அறிவுரை—யாரோ ஒருவரது கடிதத்தை இவ்வாறு புகழ்கிறார் அவர்.

அடேயப்பா! எப்பேர்ப்பட்ட கடிதம்! கோபதாபங்களைப் பற்றி எழுதுகிற கடிதத்தையும் ''மிகப் பணிவான வணக்கங்க ளுடனா ஆரம்பிப்பது? கோபித்துக்கொள்வதும் ஒரு கலைதான். எப்படிக் கோபிப்பது—எப்படிப் பிறகு எதுவுமே நடவாதது போல சமாதானம் செய்துகொள்வது—இதைத் தெரிந்துகொள்வதற் காகவே பெண்கள் திருமணம் செய்துகொள்கின்றனர். உன் னுடைய 'அவர்' உனக்குக் கோபித்துக்கொள்ளச் சந்தர்ப்பம் அளிக்கவே மாட்டார்போலும்!''

இந்தக் கடிதத்தில் முழு விவரங்களுடன் ''மீரா விசார் கோஷ்டி'' எப்படி இருக்கவேண்டும் என்று எழுதிவிட்டுக் கடைசி யில்—''சிரஞ்சீவி நசிரா, சிரஞ்சீவி வனமாலா ஆகிய இருவரது விளையாட்டுகளும் அதிகரித்திருக்கும். சிரஞ்சீவி லீலா குழந்தை களின் குறும்பு விளையாட்டுக்களை வர்ணித்து எழுதவேண்டும்.''

அவருடைய எண்ணிறந்த கடிதங்களைச் சேகரித்துத் தொகுத்து வெளியிடுதல் மிகவும் விரும்பத்தக்கது. காகா சாஹபைத் தெரிந்துகொள்ள இந்தக் கடிதத் திரட்டு உதவி செய்யும். அளவிறந்த அறிவிற்கும் அநுபவத்திற்கும் பின்னால் ஒளிந்திருந்த அந்த உன்னத மனிதன் காகா சாஹப் எனலாம்.

# எழுத்தாளர்—விரிவுரையாளர்

காகா சாஹப்பின் மற்றொரு வடிவத்தை எடுத்துக்கொள்வோம். பிற மொழிகளில் அவருக்கு நல்லதென்று பட்டவற்றை அவர் ஏற்றுக்கொண்டார். மொழிபெயர்த்தார். உலகக் கவிஞர் ஸ்ரீ ரவிந்திரநாத் தாகூருக்கு அவர் பரம பக்தர். காந்திஜியைச் சந்தித்திராவிடில் அவர் தாகூருடன் இணைந்திருப்பார். வெளித் தோற்றத்தில் மட்டுமல்லாமல், மனத்தளவில் அவர் தாகூருடன் ஒன்றிவிட்டிருந்தார். கவியுள்ளமும், இயற்கை அழகில் தீவிர ஈடுபாடும் இவரிடமிருந்து பெற்றவைபோலும். ''மாலஞ்சு'' என்ற கட்டுரையை மராத்தியில் மொழிபெயர்த்தார். பிற மொழிகளிலிருந்து பெயர்த்தன பலவுண்டு. இங்கே அவரது சிறந்த விரிவுரையெழுதும் ஆற்றலைப்பற்றியும் குறிப்பிடவேண்டும். ''ரவீந்திர பிரதிபா'' என்ற நூலில், இரவீந்தரரின் ''லிபிக்'' என்ற நூலிலிருந்து 39 இசைக் காவியங்களுக்கு விளக்கம் எழுதியிருக்கிறார். அது வெறும் மொழிபெயர்ப்பன்று. ஒவ்வொரு பாடலுக்கும் எப்படிப்பட்ட உரை எழுதியிருக்கிறாரெனில், அவற்றைப் படிக்கும் நமக்கு கவிஞருக்குக்கூட ஏற்பட்டிராத இன்ப அனுபவம் கிடைக்கிறதெனலாம். விரிவான பதவுரை—பொழிப்புரைகளால் காவியத்தின் உட்கருத்து மிகத் துல்லியமாகக் காணக் கிடைக்கிறது. விமர்சகர் அதற்குப் புதுப்பொருளும் தேடித் தந்து விடுகிறார்.

> ''வசந்தத்தின் வாயில்கள் இன்று திறக்கின்றன.
>
> இப்போது முகிழ்க்கும் புது வாழ்க்கைகளே!
>
> விண்மீன்களே, இவற்றைக் கேலி செய்யாதீர்கள்!''

இதன் பொருளை எடுத்துக்கூறும்போது, கலப்புத் திருமணத்தின் சிறப்பை இணைத்து விளக்குகிறார். ''கூச்சத்தைக் கைவிட்டு, உலக முழுவதற்குமான ஒரு வடிவத்தைக் கண்டு அதில் மகிழ்தல், சுகானுபவம் பெறுதல்வேண்டும் என்கிறார். தனது, பிறருடையது என்ற வேற்றுமை நீங்குதல்—சுயநலம் அற்றுப் போதல்—கயமை, கீழ்த்தர எண்ணங்கள் மறைந்தொழிதல்—இதன்பிறகு எஞ்சியுள்ள சிறப்பான இன்ப அனுபவம் நமக்குக் கிடைக்கும். நமது உள்ளத்துக் கவிதைகளை உலகுக்கு வழங்கி விட்டால், என்ன கெட்டுப் போகும்? நமது வாழ்வில் வசந்த

காலம் வரும்போது நம் உடைமைகள் அனைத்தையும் அர்ப் பணிக்கத் தயாராக நாம் ஏன் முனைந்து நிற்கக்கூடாது? நம் முடைய வாழ்க்கையைக் காலடியில் தள்ளித் தேய்த்துக்கொண்டு, ஏன் சிக்கல்களில் கிடந்து உழலவேண்டும்?''

இதே நடையைத்தான் கீதாஞ்சலியின் பொருள் விளக்கம் தருவதிலும் கையாண்டிருக்கிறார். இந்த நூல் குஜராத்தி, மராத்தி, ஹிந்தி ஆகிய மூன்று மொழிகளிலும் புகழ் பெற்றது. பண்டிகைகளைப்பற்றி விளக்கும்போதும் அவர் இதே முறையைத் தான் பின்பற்றுகிறார். தீபாவளியை நானாவித வடிவங்களில் விரித்தும் சொல்லியாயிற்று. மரணத்தின் மறைபொருளைச் சுட்டு கிறார்—''ஒவ்வொரு புதிய தலைமுறையும் இளமையின் ஆவேசத் துடன் முன்னேறிக்கொண்டிருக்கிறது. முந்தைய தலைமுறையோ மூப்பின்வசப்பட்டு பிறரைச் சார்ந்து வாழ்ந்து முடங்கலாகின்றது. இதை எங்ஙனம் மறக்க முடியும்? முதுமையில் தள்ளாடுபவன் இளைஞனின் விரலைப் பற்றிக்கொண்டு வருகிறான். குளிர்காலத் தின் ஊதற் காற்றில்தான் வசந்தம் பிறக்கின்றது.''

''தீபாவளியன்று வசந்தத்தை விரும்பி, வசந்த காலத்தினை எதிர்நோக்கி, ஒளி விளக்குகள் ஏற்றி வரவேற்க முடியுமானால், அதனால் மங்களத்தையும், மகிழ்ச்சியையும் பெறமுடியுமானால், மரணத்திலும் நான் ஏன் மகிழக்கூடாது? மரணத்தில்தான் புது யுகம் பிறக்கும். பேருவகை பெறமுடியுமென்பதையே தீபாவளிப் பண்டிகை சுட்டிக் காட்டுகின்றது. இந்த சுகானுபவம் வேறெங்கும் பெற இயலாதது.''

காகா சாஹப் முக்கியமாக மராத்தி, குஜராத்தி, ஹிந்தி ஆகிய மூன்று மொழிகளில் எழுதினார். மொத்தம் 125 நூல்கள் இந்த மொழிகளில் அவரால் சொந்தமாக எழுதப்பட்டவை. ஹிந்தியில் எழுதப்பட்டவை நாற்பது இருக்கலாம். இவற்றில் வாழ்க்கைச் சரிதங்கள், பயணக் கட்டுரைகள், இயற்கையெழில் பற்றிய இனிய எளிய விளக்கங்கள், கலாசாரம்பற்றிய கட்டுரை கள், தத்துவ விளக்கங்கள், இரவீந்திரர் நூல்களுக்கு எழுதிய உரை விளக்கம் ஆகியன அடங்கும். காகா சாஹப் கவிதை, கதை தவிர எல்லாமே எழுதினார். ஹிந்தியை விட அவர் குஜராத்தியில் பெரும்புகழ் பெற்றார். பண்டிதர்கள், அறிஞர்கள், வாசகர்கள், இளைஞரிடையிலும் அவருக்கு மரியாதையும் மதிப்பும் கிடைத்தன. அவருடைய மூன்று குஜராத்தி நூல்கள் மிகவும் பெயர் பெற்றவை. ஓதராலி திவாலோ (வடக்குச் சுவர்—1925), ஹிமாலய நோ பிரவால் (இமயப் பயணம்—1924), ஸ்மரண யாத்ரா (நினைவில் நின்ற பயணம்—1934).

''வடக்குச் சுவர்'' என்ற நூலில் அவர் தமது சிறை வாழ்க்கையைப்பற்றி எழுதியுள்ளார். எனினும் இதில் கவிநயத்துடன் எழுதிய இயற்கை வர்ணனையே அதிகம் எனலாம். ஸ்ரீ குலாம் ரசூல் குரேஷி என்பவர் அவருடன் அவ்வமயம் சிறையில் இருந்தவர், இந்த நூலைப் படித்தபின் இவ்வாறு சொன்னார்: ''சிறை வாழ்க்கையின் மையப்பொருளை எவ்வாறு சிறையின் வெற்றுச் சுவர்களிலேயே காணமுடியும் என்பதைச் சிறைக்கு வெளியே வந்தபின் ''ஓதரால் திவாலோ'' நூல் விளக்கியது.

''ஸ்மரண யாத்ரா'' என்ற நூலில் தம் குடும்பத்தைப் பற்றியும், தற்கால நிலை குறித்தும் குறிப்பிடுகிறார். இதைப் படிக்கும்போது அதிலுள்ள அவரது உள் மனத்தெழுந்த உணர்வுகள் வெளிப்பட, அவற்றை நாம் உணர்ந்து ஒன்றிக் கலந்துவிடுகிறோம். எந்த முயற்சியுமின்றி அவர் இத்தனை மகத்தான 'நிலைக்கு உயர்ந்ததுபற்றி ஸ்ரீ சி. ஜி. வாலிஸ் கூறுகிறார்: உண்மையைச் சொன்னால், பாரத ஆன்மாவின் முதல் தரிசனம் எனக்கு இங்கேதான் கிடைத்தது. ஏதோ நம் வீட்டுச் சமையலறையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும் மகிழ்வு ஏற்பட்டது—எத்தனை கவர்ச்சி, இனிமை, உண்மை, இங்கே உள்ளத்தை ஈர்க்கின்றன.'

குஜராத்தி மொழியில் அவர் எழுதியுள்ள பயண நூல்கள் அனைத்திலும் மிகச் சிறந்தது ''இமயப் பயணம்'' என்பதேயாகும். ஆசார்ய கிருபளானியின் கூற்றுப்படி இமயத்தையும், கங்கா மாதாவையும்பற்றிய அவரது வர்ணனை கற்பனைக்கு அப்பாற்பட்டதாகும். (சமன்வய கே சாதக் 22)

ஸ்ரீ குலாம் ரசூல் குரேஷி: 'இந்த நூலில் வாழ்க்கையின் அழகோடுகூட இமயத்தின் சிகரங்களின் எழிலோவியம் மிளிரக் கண்டார். பேராசிரியர் சந்திரவதனராயின் கணிப்புப்படி—இந்த நூல் குஜராத்தி இலக்கியத்தில் மட்டுமின்றி உலக இலக்கியத்திலேயே இயற்கை வர்ணனைக்காக மிக உயர்ந்த இடம் பெறும் எனலாம். ரமண்லால் ஜோஷி தனது மதிப்புரை வழங்கும்போது, ''அவர் குஜராத்தி காவியகர்த்தாவாக எபபடி மாறினார்? ஏனெனில் அவரது உள் மனத்தில் அழகை ஆராதிக்கும் கவியுள்ளம் கனிந்திருந்தது. அவரது அறிவுக்கூர்மை அழகிய காவியத்தைப் படைக்க அவரைத் தூண்டியது'' என்கிறார்.

ஸ்ரீ உமாசங்கர் ஜோஷி அவரை அறிமுகப்படுத்தும்போது, ''கவிஞர்'' என்றே கூறினார். அது முற்றும் பொருந்தும். ''எளிய கட்டுரைகள், உள்ளதைப் பேசும் கட்டுரைகள், எழுதுவதில் காகாவின் சாதனை விசித்திரமானது. தத்துவங்கள் மலிந்த

கருத்தோவியங்கள், நினைவில் பதிந்துவிடும் பயணங்கள், இலக்கிய வாதங்கள் முதலியவற்றில் அவரது படைப்புக்கள் விலை மதிப் பற்றன.'' (சமன்வய கே சாதக் 75)

இந்த வெற்றிக்குக் காரணம்தான் என்ன? அவர் எப்படி குஜராத்தி மொழியைத் தன் இணையற்ற எழுத்து நடையின் மூலம் எளிதாக, சுவைபட மாற்றினார்? இதற்குப் பல காரணங் கள்உண்டு—முதல் முக்கியக் காரணம், அவர் இலக்கியத்திற்காக இலக்கியம் எழுதவில்லை. என்ன செய்தாரோ, எப்படியெப்படி வாழ்ந்தாரோ—அவற்றையெல்லாம் எழுதினார். இரண்டாவது எப்போதும் வறட்டு உபதேசம் செய்யாமல், அழகு மிகுந்த காவியங்கள் எழுதினார். ஆனால் காகாவின் அழுகுணர்ச்சி அதன் சாதாரணப் பொருளினின்று வேறுபட்டது. இரவீந்தரரின் இயற்கைத் தத்துவங்கள் இவருக்குப் பிடித்துப் போயின. காந்திஜீ யின் முனைப்பும், உண்மையும் அவரைக் கவர்ந்தன. வாழ்க்கை யின் பொறுப்புக்களை உணர்ந்து, அக்கறையுடன் செயலாற்றும் திறனால்தான் அழகுணர்ச்சியும் கலையார்வமும் அதிகம் வளர முடியும். ''இ ம ய ப் ப ய ண ம்'' என்ற நூலில் இதனை மிக அதிகமாகக் காண்கிறோம். அவரது பல நூல்களில் ''வாழ்க்கை'' என்ற சொல் பயன்படும். அது தற்செயலாக வந்ததன்று. அவர் அழகின் அடிமையாயினும் வாழ்க்கையின் அறங்களை உணர்ந்த இலக்கியவாதி. அவர் கருத்துப்படி, கலைகள் வாழ்க்கைக்கு வளம் சேர்க்கப் பிறந்தவையே. இங்கேதான் இரவீந்திரர்—காந்திஜீ இருவரது கருத்துக்களின் சங்கமத்தைக் காண்கிறோம். காகா வின் மற்றொரு கொடையை ஸ்ரீ ரமண்லால் ஜோஷி வர்ணிக் கிறார்: ''சம்ஸ்கிருதத்தின் சிறப்பம்சங்கள், கூடவே த ம து சமூகத்தில் கேட்ட பழமொழிகள்—பொதுவான வழக்காற்றின் இயல்பான சொல்லாட்சி—இவையே பு க ழே ா டு பொலிந்து வாழ்ந்த இவரது குஜராத்தி மொழியாகும்.''

அவரது ஒவ்வொரு மொழிப் பாட வகுப்பிலும் மாணவர்கள் இதை உணர்ந்திருக்கிறார்கள். அ வ ர து இலக்கியங்களைப் படிக்கப் படிக்க, அந்த அநுபவங்களிலே அவர்கள் தாமும் வாழ்ந் திருக்கிறார்கள். அத்தகு வர்ணனைகள் அவருடையவை. எந்த எழுத்தாளருக்கும் இதைவிடப் பெரிய சாதனை என்னவாக இருக்க முடியும்?

குஜராத்தியில் அவரது இலக்கியம் முழுவதும், ''காலேல்கர் கிரந்தாவளி'' என்ற பெயரில் பதினைந்து காண்டங்களாக வெளி வரவுள்ளது. ஹிந்தியிலும், இவ்வாறு தொகுப்பொன்று வெளிவர முடியுமானால், ஹிந்தி இலக்கியத்திற்கு அவரது மதிப்பிட முடியாத தொண்டினையும் கோடிட்டுக் காட்டமுடியும்.

காகா காலேல்கர் பல வெற்றிமுகங்கள் கொண்டவர். பன்மொழி வித்தகர்; பல்வகைப் புகழ்ச் செல்வர்; நிரந்தர நாடோடி; இலக்கியவாதி; சொந்த சிந்தனையாளர்; கல்வியாளர்; திறமை மிக்க சொல் வீரர்; விடுதலைப் போராட்டத்திற்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்ட தியாக தீபம். இத்தகையவரது வாழ்க்கையையும் செயல்களையும் இந்தச் சிறிய நூலில் எடுத்துச் சொல்வது இயலாததாகும். எனினும், இந்தச் சிறு முயற்சியால் சத்தியத்தைத் தேடியலையும் நெஞ்சங்களில், இந்த சிந்து நதியின் இனிய ஒலியலைகள் மெல்ல வீசக்கூடும்.

மற்றொரு செய்தி—இதை ''கரண்ட்'' பத்திரிகையாசிரியர், சிறந்த இலக்கியவாதி ஸ்ரீ மஹாவீர் அதிகாரியின் வார்த்தைகளிலேயே சொல்லத்தான் வேண்டும். ''அவரது முழுமையான வாழ்க்கை, செயல்பாடுகள், வகித்த பொறுப்புக்கள், பெரிய சூளுரைகள்—இவற்றைப் பார்க்கும்போது அவரது வாழ்க்கையின் ஒரு மாபெரும் இலட்சியத்தை உணர்கிறோம்; அதற்கு அவருடைய சமுதாயத்தில் பல எதிர்ப்புகள் இருந்தமையை அறிகிறோம். எனினும், எதிர்நீச்சலிட்டு, அவர் சாதித்த மேன்மைகளின் மகத்தான சிறப்பினையும் சந்திக்கும்போது சிலிர்த்து நிற்கிறோம்.''

காந்திஜியின் பள்ளிக்கூடத்தில் அவர் இதே பாடம்தான் கற்றார்—தருமபுத்திரரைப்போன்று அவர் உயர்ந்தவையே பயின்றார்.

பிற்சேர்க்கை

# "முத்துச்சரம்"

## மரணத்தின் உண்மை உருவம்

"நாள்" என்பதற்கு இரண்டு பொருளுண்டு. ஒன்று குறுகியது; மற்றொன்று பரந்தது. காலை முதல் மாலை வரையிலான 12 மணி நேரத்தை ஒரு நாள் என்கிறோம். பின்னால் வரும் பகுதியை "இரவு" என்கிறோம்.

"நாள்" என்பதற்கு விரிவான பொருள் மற்றொன்று. பகலும், இரவும் சேர்ந்த இருபத்து நான்கு மணி நேரம் என்ற மொத்த கால அளவையைக் காட்டவும் "நாள்" என்ற சொல்லே பயன்படுகிறது. மாதங்களும் ஆண்டுகளும் கணக்கிடப்படும் போது, இந்த இருபத்துநான்கு மணி நேரம் கொண்ட நாளைப் பற்றியே குறிப்பிடுகிறோம்.

"வாழ்க்கை" என்பதற்கும் இவ்வாறு இருபொருள் கொள்ளலாம். பிறப்பு முதல் இறப்பு வரையிலான காலத்திற்கு வாழ்க்கை என்று பெயர். வாழ்க்கையும் மரணமும் இணைந்த ஒரு பிறப்பையும் "வாழ்க்கை" எனலாம். உண்மையில் வாழ்வும் மரணமும் சேர்ந்ததுதான் முழு வாழ்க்கையாகும்.

நாம் எத்தனை ஆண்டுகள் வாழ்வோம் என்பது யாருக்கும் தெரியாது. மரணத்திற்குப் பிறகு அடுத்த பிறவியெடுக்குமுன் எவ்வளவு காலம் எங்கோ தெரியாத இருட்டில் இருப்போம்—இதுவும் நமக்குத் தெரியாது. மரணத்திற்குப் பின்னால் மறுபிறவி கிடைக்கும்வரை நமது வாழ்க்கை வெற்றிடத்திலா நிகழ்கிறது? சரியான பதில் யாரால் சொல்ல முடியும்? கற்பனை மாத்திரமே செய்யமுடியும்?

இரவில் நாம் உறங்கும்போது நம்மை மறந்து போகிறோம். ஏதோ மயக்க மருந்தோ போதையிலாழ்த்தும் ஊசியோ கொடுக்கப்பட்ட நிலையில் இருக்கிறோம். ஆனால் அப்படித் தூக்கத்தில் ஆழ்ந்த நிலையில் ஒரு புது உலகம் நம்முன் விரிகின்றது. அதைத்தான் கனவுகள் என்கிறோம்.

இந்தக் கனவுலகம் என்பது யாது? அதையும் உறுதியாகச் சொல்லமுடியாது. சில சமயம் நிஜவாழ்க்கையில் சில சிதறுண்ட நிகழ்ச்சிகள் அங்கே பிரதிபலிக்கின்றன. அவற்றிலும் துண்டு துண்டாகத் தெளிவற்ற சில காட்சிகள் இணைந்து ஏதேதோ கற்பனையான கனவுச் சித்திரங்கள் தோன்றுகின்றன. இவற்றை உருவாக்குபவர் யார் என்று தெரியாது. இந்தக் கற்பனைக் கனவுலகில் எத்தனை எத்தனைப் பேரைச் சந்திக்கிறோம். அது நமக்கு மட்டும்தான் தெரியும். அதில் பிறர் தலையிடுவதில்லை.

இந்தக் கனவுலகப் படைப்புகளின் உண்மை நிலையைப்பற்றி சில சிந்தனைகள் மார்க்கண்டேய உபநிஷத்தில் காணக் கிடைக்கின்றன. இவற்றின் கற்பனை வர்ணனைகளைப் புராணங்களில் படிக்கிறோம். கனவுகளுக்குப் பொருள் கூறும் முயற்சியையும் சில நூல்களில் காண்கிறோம். இன்றைய நாளில் ''ப்ராயுட்'' ''யுங்'' முதலான உளவியல் வல்லுநர்கள் மனிதனுடைய கனவுகளுக்கு விளக்கம் தேட முனைந்து வருகின்றனர். இதனால் நமக்குத் தற் சமயம் எந்தப் பயனுமில்லை. நமது கேள்வி இதுதான். உறக்கத் தின்போது விழித்திருப்பது போலவே தோன்றும். ஒரு புதிய கனவுலகம் படைக்கப்படுகிறதே அதேபோல மரணகாலத்திலும் வாழ்க்கைக்கு வெளியே ஒரு மறுலோகம் படைக்கப்படுகிறதா என்ன? புராணங்களில் இந்தக் கற்பனை வருகிறது. ஆனால் அங்கே பெரிய உதவி கிடைக்கவில்லை. எப்படியோ தெரிந்த வாழ்க்கை—தெரியாத முன்னறிமுகமில்லாத மரணம் இரண்டும் கலந்த இவ்வுலக வாழ்வைப்பற்றித்தான் நாம் கவனிக்க வேண்டும்.

வாழ்வும் சாவும் சேர்ந்து அமைகின்ற இவ்வுலக வாழ்க்கை பரந்து விரிந்த சமுத்திரம் போன்றது. குறுகிய பொருளில் நாம் வாழ்க்கை என்று குறிப்பிடுவதோ, இப்பெரிய சமுத்திரத்தின் ஒரு பகுதியேயாகும். வாழ்க்கையின் ஆழத்தை மரணத்தில்தான் காணலாம். இப்போது அது வெறும் கற்பனைதான். ஆனால் மரணத்தை நாம் இரண்டு வாழ்க்கைகளின் இடையிலுள்ள ஒரு புரிபடாத காலம் என்று கொண்டால், என்றாவது ஒரு நாள் அந்த காலத்தைக் கணக்கிட முடியும். இந்த ஞானம் மட்டும் கிடைக்கப்பெற்றால் போன பிறவியைப் பற்றிய கேள்வியும், பிறவி களின் முடிவு எப்போது? வீடுபேறு எப்போது கிட்டும்? என்பது போன்ற சித்தாந்தங்களும் தெளிவாகிவிடும்.

எதுவோ, இப்போது வாழ்வும் சாவும் சேர்ந்த ஒரு விரிந்த வாழ்க்கையைப் பற்றியே எண்ணமிடுவோம். நாம் வாழும் வாழ்க்கையையும் இரண்டாகப் பிரித்துப் பார்க்கவேண்டும். இதற்கு ஒரு மரத்தைச் சான்றாக எடுத்துக்கொள்வோம்.

விதை தளிராகிறது—தளிர் செடியாகி, செடி மரமாகி, முழு உயரம் அடையும்வரை இதன் தோற்றத்தில் வளர்ச்சி ஏற்பட்டுக் கொண்டேயிருக்கிறது. மரத்தின் உயரம் அதிகரித்தல், கிளைகள் பரந்து விரிதல், ஆழமாக வேர் விடுதல் இவற்றை நாம் கண் கூடாகப் பார்க்கிறோம்.

இந்த வளர்ச்சி முற்றுப்பெறும்போது, உயரம் கூடுவதில்லை. கிளைகளின் எண்ணிக்கையும் கூடுவதில்லை. பழுத்த இலைகள் உதிர்கின்றன. புதிய இலைகள் துளிர்க்கின்றன. ஆனால் வளர்ச்சி முழுமையடைந்த பின் மரத்கின் வெளித் தோற்றத்தில் மாறுபாடுகள் எதுவும் தெரிவதில்லை. ஆனாலும் அது பூத்துக் குலுங்குவதில் முடிவு ஏற்படுவதில்லை. முதிர்ந்து வளர்ச்சி யடைந்தபின் மரத்தின் மொத்த வடிவமும் பரிபக்குவமடைகிறது. அடிமரம் வைரம் பாய்ந்து, உருண்டு திரண்டு காணப்படுகிறது. இதன் பழங்களின் சுவையிலும் மாற்றமில்லை. இதேபோல நமது வாழ்க்கையும் ஒரு எல்லைவரை வளர்ச்சியடைந்தபின் உள்ளப் பக்குவம் மேம்பட்டுச் செல்கின்றது. வளர்ச்சி முடிந்து விட்டது. அதனால் உள்ள மலர்ச்சியும் நின்றுவிட்டதென்று யாரும் சொல்வதில்லை. எட்டு பத்து ஆண்டுகள் வளர்ந்த பிறகு சில மரங்கள் நூறு இருநூறு ஆண்டுகளுக்கும் மேலாகப் பூத்துக் காய்த்துப் பலனளித்து வந்திருக்கின்றன.

நம்முடைய மத அறிஞர்கள் கர்ம பூமியென்றும், யோக பூமி யென்றும், பிரித்துச் சொல்கின்றனர். இந்த நிலவுலகம் கர்ம பூமியாகும். இங்கு உறுதிப்பேறுகளை—அதாவது புருஷார்த்தங் களை அடைய வாய்ப்புண்டு. இதில் மனிதன் திருந்தவும் முடியும்—திசை மாறவும் முடியும். யோக பூமியில பாவ புண்ணியங் களின் பலனை அனுபவிக்கும் நிலை பேசப்படுகின்றது. கர்ம பூமிக்கும், யோக பூமிக்குமிடையேயுள்ள இந்த வேறுபாட்டைச் சேர்த்துப் பார்க்கும்போது நம்மால் இவ்வாறு கற்பனை செய்ய முடிகின்றது—மனிதன் மரணத்திற்குப் பின்னால் உடனே மறு பிறவியெடுப்பதில்லை. எந்த வாழ்வை முடித்துள்ளானோ அதன் எல்லாச் செயல்களையும் சீர்தூக்கிப் பக்குவமடைய சில காலம் செலவிடுகிறான். மரணத்திற்குப் பின்னால் வெற்றிடமோ—பொருளற்ற நிலையோ இல்லை. உண்டதை மென்று ஜீரணித்துக் சொள்ளவும் உயிரினுள் கிரகிததுக்கொண்டு மாற்றங்கள் செய்யவும் இந்தக் காலம் பயன்படுத்தப்படும். கணிதம், அறிவியல் முதலியன படிக்கும் மாணவர்க்கு ஓர் அனுபவமுண்டு. படிக்கும் போதோ, படித்ததைப் பயன்படுத்தும்போதோகூட சில விஷயங் கள் தெளிவாக மனதில் பதிவதில்லை. கற்றபின் படுத்துத் தூங்கி யெழுந்தபின் இவை உடனே பளிச்சென்று துலங்குவதோடு புதிய

கண்ணோட்டமும் கிடைக்கும் என்பர். அவர்கள் கூற்றுப்படி, தூக்கத்தின்போது உள் மனம் ஏதோ விந்தையான முறையில் செயல்படுகிறது. விழித்திருக்கும்போது நிலவும் தொடமுடியாத உள்ளார்ந்த நிலையை, உறக்கத்தில் எட்ட முடிகின்றது. விழித்த பிறகு இவற்றைப் பயன்படுத்த முடியுமானால், கனவிலும் சூட்சம நிலையிலும் சிறந்த சிந்தனைகள் தோன்றமுடியுமானால் மரணத் தின் மூலமாக வாழ்க்கை அனுபவங்களை உய்த்துணரும் நிலை ஏன் இருக்க முடியாது? மரணத்திற்கு முந்தைய வாழ்க்கை முடிந்தவுடனேயே எல்லாம் முடிந்து விடுகின்றனவென்றால், மனிதனுக்கு பரந்தவெளியில் தனித்து விடப்பட்ட உணர்வும், பயணம் முற்றுப்பெறாத நினைப்புமே ஏற்படவேண்டும். மரணம் நிகழ்வதை எப்போதும் எண்ணிப் பார்க்கும் மனிதனின் மனத்தில் அமரத்துவத்தின்—அதாவது அழியாமையின் அழகிய இயல்பான கற்பனையும் இருக்கிறது. அதைப்பற்றி நாம் சிந்திக்கத் தவறு கிறோம். ஆன்மா மரணத்திற்குப்பின் உயர்நிலை பெறவேண்டும். இந்த இடைப்பட்ட காலத்தில் அறிவுபெறுவதற்காக இந்த உடல்—பொறிகள் முதலியவற்றின் தேவையில்லைபோலும்!

மரணத்தின் தன்மையோ உருவமோ எப்படி வேண்டு மானாலும் இருக்கட்டும்—நாம் அதன் நிழலில் இன்புற்றிருப்போம். எனவே அதன் பெருமையைக் குறைத்து மதிப்பிடவும் வேண்டாம். மரணத்தைப்பற்றி நாம் மிகவும் அஞ்சுகின்றோம். மரணம் எனபது என்னவென்று நினைக்கவும்கூட உள வலிமையும் உற்சாகமுமிழந்து போகிறோம். தெரியாத பொருள் எதுவாயினும், மனிதன் முழு உறுதியுடனும் மகிழ்ச்சியுடனும் விழிப்பாக இருக்க இயலும்.

இப்போது சிறிய ஓரங்க நாடகங்கள் பார்க்கிறோம். பழைய நாடகங்களில் ஐந்து ஆறு பாகங்களிருக்கும். இவற்றில் உரையாடல், நடிப்பு, பாட்டு ஆகியவற்றின் எல்லா அம்சங்களும் இருக்கும். ஒரு பாகம் முடிந்தபின், திரை விழும். திரை மீண்டும் தூக்கியபின் அடுத்த பாகம் தொடங்கும். சில சமயம் இரண்டு பாகங்களிடையே சில நிகழ்ச்சிகள் நடைபெறுவதுண்டு. அவற்றை நாடகத்தில் சேர்த்து நடித்துக் காட்டாவிட்டாலும், அவற்றின் சுருக்கத்தைச் சொல்வதுண்டு. இதற்காக இரண்டு பாகங்க ளிடையே ஒரு சிறு உரைப்பகுதியிருக்கும். அதை இணைப்புரை என்பார்கள்.

திரை கீழே விழும்போது நடிகர்கள் அடுத்த பாகத்திற்கு ஆயத்தம் செய்துகொள்ளவும், உடைகள், அரங்க அமைப்புகள் மாற்றவும் நேரம் கிடைக்கும். இணைப்புரை வாயிலாக இரண்டு பாகங்களின் இடையே சில நிகழ்ச்சிகளின் சுருக்கம் பார்வையாளர் களுக்குச் சொல்லப்படுகின்றது. இணைப்புரையில்லாவிட்டால்

பார்வையாளர் இடைப்பட்டவற்றை ஊகித்து அறியவேண்டியது தான்.

ஒரு பிறவியின் முடிவில் திரை விழுந்தவுடன் உடனே அது தூக்கப்படுவதில்லை. மரணம் என்பது இரண்டு பிறவிகளின் இடையே போடப்படும் திரையென்றோ — இணைப்புரையென்றோ சொல்லலாம்.

எழுதும்போது ஒரு சொற்றொடரின் முடிவில் ஒரு புள்ளியோ கோடோ போடுகிறோம். புதிய கருத்தைச் சொல்ல வரும்போது புதிய பத்தியில் அதை ஆரம்பிக்கிறோம். ஒரு பத்தி முடிந்ததும் அதன் கருத்துக்கள் மனதில் பதிந்து அவற்றின் பொருளுணர்ந்த பின் சற்று நின்று மேலே படிக்கிறோம். இடையே சற்று நின்று ஓய்வெடுப்பது தேவையெனப்படும் போதெல்லாம் புதிய பத்தி தொடங்குகிறோம். ஒவ்வொரு மரணத்தையும் ஒவ்வொரு பத்தியின் முடிவாக நாம் பார்க்கலாம். அத்தியாயம் மாறும்பொழுது அமைப்பும் மாறுகிறது. இந்த மாற்றம் கால மாற்றத்தைக் காட்டுவதாகவோ, கருத்து மாற்றத்தினைக் குறிப்பதாகவோ அமைகிறது. மரணமும் பரந்த வாழ்வின் அத்தியாயங்களின் பக்கங்களைப் புரட்டுவதுபோலத்தான் எனலாம்.

எப்படியோ மரணம் நமது வாழ்வின் இன்றியமையாத வலிமை மிக்க அம்சமாகும். மரணத்தின் கால அளவு வெற்றிடத்திலா என்பதையெல்லாம் கற்பனை செய்வது கடினம். இதனாலேயே இரவு பகல் என்பதுபோல் பிறப்பும் இறப்பும் என்று கருதுகிறோம். புராணம் எழுதியவர்கள் இடைப்பட்ட காலத்தில் வாழ்க்கைக்குக் கற்பனை வடிவம் கொடுத்துப் பலவகையாக எழுதியுள்ளனர். நமது கற்பனைகளையும் அவர்கள் தூண்டிவிடுகின்றனர். ஆனால் புராணங்களின் இந்த பரலோகக் கற்பனைகளை நாம் பெரிதாக மதிப்பதில்லை. ஏனெனில் புராணம் வரலாறோ, வெறும் கற்பனைகளோ அன்று. காவியம் போன்ற படைப்பே அது. சமஸ்கிருத மொழியில் அவை அதிகம் சேர்ந்துள்ளன. வேடிக்கையாகப் படிக்கவும் அவை பயன்படுகின்றன.

மரணத்திற்கு அஞ்சி அறிவை வளர்த்துக்கொள்ளாமல் இருக்கவோ கற்பனைகளை முடக்கிக்கொள்ளவோ எனக்கு விருப்பமில்லை. ஞானிகளாக மாறி நாம் இறப்பின் உட்பொருளைத் தேடமுயன்றாலும், இறைவனருளால் நமக்கு வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கையிருக்கிறது. மனந்தளரவேண்டியிராது. ஆனால் இறப்பின் பிந்தைய காலமும் வாழ்வைவிடப் பெருமை குன்றியதன்று என்பது எனது நம்பிக்கை.

—''பரமசகா ம்ருத்யூ (இறப்பெனும் உற்ற தோழன்) என்ற நூலிலிருந்து. . .''

# வசந்த பஞ்சமி

வசந்த பஞ்சமி என்பது யாது? இளவேனில் இளவரசனுக்கு அளிக்கும் வரவேற்பு. மாசி மாத சுக்ல பஞ்சமியை நாம் வசந்த பஞ்சமி என்கிறோம். ஆனால் எல்லா மனிதருக்கும் வசந்த பஞ்சமி ஒரே நாளில் வருவதில்லை. சிலருக்கு அது விரைவில் வருவது மில்லை.

வசந்த பஞ்சமி இயற்கையின் இளமைப் பருவம். இயற்கையோடு இயைந்து வாழ்பவனும், அதனுடைய எண்ணங்களோடு வண்ணம் சேர்த்து மகிழ்பவனும் வசந்த பஞ்சமியின் வரவை உணர்கிறான். மந்தமாகச் சென்றுகொண்டிருக்கும் நதியில் திடீரெனப் பெருக்கெடுத்து வரும் வெள்ளம்போல், வசந்தத்தின் வருகையை நாம் உணரமுடியும். ஒரே சமயத்தில் அது எல்லோருடைய உள்ளங்களையும் நிறைவு செய்வதில்லை.

வசந்தம் வரும்போது இளமையின் வேகத்துடன் வருகிறது. இளமையில் அழகிருக்கும். ஆனால் அதில் நன்மையிருக்கும் என்று சொல்லமுடியாது. இளமைக் காலத்தைப்போலவே, வசந்த காலத்தில் உடல் நலத்தையும், மனநலத்தையும் பாதுகாப்பது கடினம். இளமையைப்போலவே வசந்தத்தினால் அலைபாயும் சஞ்சலங்கள் உண்டு. குளிரும், வெயிலும், சலிப்பும், உற்சாகமும் மாறி மாறி வருவதுண்டு. குளிர்காலத்தின்போது இழக்கும் சக்தியை பின்னர் மீண்டும் பெறலாம். ஆனால் குளிர்காலத்தில் கிடைக்கும் சக்தியைச் சேமித்து வைத்துக்கொள்ள முடியாது. வசந்தத்தில் நியமமாக இருக்க முடிந்தால் ஆண்டு முழுவதும் உடல் நலத்துடன் இருக்க முடியும். வசந்தத்தில் சிந்தையைக் கவரும் ஒரு பேரொளி பரவக் காணலாம். ஆனால் அதில் சிக்கிக் கொண்டால் ஆபத்தாகவும் முடியும்.

வசந்தத்தின் உல்லாசமான பருவத்தில் நியமத்தைப்பற்றிப் பேசுவது பொறுத்துக் கொள்ள முடியாததொன்று. ஆனால் அப்போதுதான் நியமம் மிகவும் தேவைப்படுகிறது. பலவீனமான மனிதன் பத்தியம் இருந்தால் அதில் வியப்பென்ன இருக்கிறது? இதனால் என்ன இலாபம்? பெயரளவிற்கு வாழ்வதில் என்ன சிறப்பு? பாதுகாப்பான வசந்தம்தான் வாழ்வின் மகிழ்ச்சிக் காலமாகும்.

வசந்தம் பறந்துவிடக்கூடியது. இதில் இயற்கையின் இளமை தான் தெரிகிறது. எத்தனை மரங்கள் பூத்தும், பழுத்தும் குலுங்குகின்றன? எத்தனை வாடிப் போகின்றன? இயற்கையானது குளிர் காலத்தில் வறட்சிக்குப் பழிவாங்குவது போலிருக்கிறது. வசந்தத்தின் செழுமை நீடித்திருப்பதன்று. அப்போது பார்ப்பதெல்லாம் நிலையானவையல்ல.

ஒரு நாட்டின் வசந்தமும் பறந்துவிடும் தன்மையுடையது. எத்தனையோ மலர்களும் கனிகளும்போல, நம்பிக்கைகள் துளிர் விடுகின்றன. ஆனால் பரிபக்குவம் அடைவதற்கு முன்பாகவே வாடி உதிர்ந்துபோகின்றன. சரத்ருதுவில் நிலைத்து நிற்பவையே உண்மையானவை. நாட்டின் வசந்த காலத்தில் கட்டுப்பாடு, நியாயங்களின் குரலை யாரும் விரும்புவதில்லை. ஆனால் அது தான் பத்தியம் போன்றது.

கொண்டாட்டத்தில் ஓர் அடக்கம். செழிப்பில் ஒரு நீடித்த தன்மை, இளமையில் நியமம்—இவையே வாழ்வின் வெற்றியின் இரகசியம். மலர்களின் செழுமையின் சிறப்பு காய்த்துக் கனிந்து சுவைமிக்கக் கனிகளைத் தருவதில்தானுள்ளது.

வசந்த பஞ்சமிக் கொண்டாட்டங்களைச் சாஸ்திரக்காரர்களோ, மதாச்சாரியர்களோ ஏற்படுத்தவில்லை. கவிஞர்களும், கலைஞர்களும், இளைஞர்களும், சுவைஞர்களும் ஏற்படுத்தினர். வசந்தத்தைக் குயில்கள் கூவி அழைக்க, மலர்கள் வரவேற்கின்றன. வசந்தம் என்பதுதான் என்ன? பறவைகளின் இன்னிசை, மலர்த்திரளின் நறுமணம். வெண்முகில்களின் பரந்த செறிவு, அசைந்தாடும் காற்று. எப்போதும் அசைந்தாடுவது காற்று என்றாலும், வசந்தத்தின் தென்றலில் சிறந்த இன்பமூட்டும் தாலாட்டினை உணரலாம். எங்கே வீசினாலும் முழு வேகத்துடனும், மென்மையுடனும் செல்லும், சுற்றிச் சுற்றிச் சுழன்று இன்னிசை பாடிச்செல்லும்.

வசந்தத்தின் இசையில் புதிய அலைகள் வீசும். பாடகர்கள் நாள் முழுவதும் இதில் லயிக்கலாம். முன்னிரவிலும் பின்னிரவிலும் இந்த இசை இடைவிடாது ஒலிக்கும்.

ஒழுங்குமுறை, பெருமிதம், சுவை ஆகிய மூன்றும் இணையும் போதுதான் இனிய சங்கீதம் பிறக்கிறது. வாழ்வில் ஒழுங்கு மட்டும் இருந்தால் மயானம் போன்ற வறட்சியே நிலவும் பெருமிதம் மட்டுமிருந்தால் மூச்சுத்திணறும்; சுவை மட்டுமிருந்தால் கணத்தில் தேய்ந்து மறைந்துவிடும். இவை மூன்றும் இணைந்ததுதான் வாழ்க்கை. வசந்தத்தில் இயற்கை இன்பச் சுவையை வழங்குகிறது. கட்டுப்பாடு, கண்ணியம் ஆகிய இரண்டு சொற்களையும் நாம் அதில் சேர்க்கவேண்டும்.

(ஜீவன் சாஹித்ய—முதல் பகுதியிலிருந்து)

# கங்கா மாதா (கங்கையன்னை)

நதிக்கு அழகிய உவமை சொல்லவேண்டுமானால் அன்னை என்றே சொல்லவேண்டும். நதிக்கரையில் வாழ்பவர்க்குப் பஞ்சத்தைப்பற்றிக் கவலையில்லை. மேகராஜன் ஏமாற்றும்போது நதி அன்னையே நமக்குக் கைகொடுக்கிறாள். நதிக்கரையில் தூய குளிர்ந்த காற்றுவீசும். நதிக்கரையில் உலாவச்சென்றால் அன்னையின் பேரன்புப் பிரவாகத்தைத் தரிசிக்க முடியும். பெரிய நதியென்றாலோ, அதன் நீர்ப்பெருக்கு அதிகமென்றாலோ, நதிக்கரையில் வசிப்பவர்களுடைய வசதி வாய்ப்புகள் நதியையே சார்ந்திருக்கின்றன. உண்மையில் நதியே மக்கள் சமுதாயத்தின் அன்னை எனலாம்.

நதிக்கரையிலுள்ள நகரங்களில் சந்து பொந்துகளில் சுற்றி வரும்போது ஏதாவதொரு கோணத்தில் நதியின் தரிசனம் கிடைக்கும்போது எத்தனை மகிழ்ச்சியாயிருக்கிறது? நகரத்தின் தூய்மை கெட்ட காற்றெங்கே? நதியினுடைய தூய தரிசனமெங்கே? இரண்டுக்குமிடையேயுள்ள வேறுபாடு உடனே தெளிவாகின்றது. நதி இறைவனில்லை. ஆனால் இறைவனை நினைக்க வைக்கும் தேவதை. குருவை வணங்குவதுபோல நதியையும் வணங்குவது அவசியம்.

இது ஒரு சாதாரண நதியைப்பற்றிய செய்தி. கங்கையோ ஆரிய சமூகத்தின் அன்னையாவாள். ஆரியர்களின் பெரிய பெரிய அரசுகள் கங்கை நதிக்கரையில் தான் அமைந்திருந்தன. குரு—பாஞ்சால தேசத்தின் அங்கம் வங்கம் முதலிய நாடுகளை கங்கை வாழ வைத்திருக்கிறாள். இன்றும் பாரதத்தின் மக்கட்தொகையில் கங்கை நதிக்கரையில் வாழ்பவர் அதிகமுண்டு,

கங்கையைத் தரிசிக்கும்போது நம் கண் முன்னால் பயிர்கள் அசைந்தாடும் பசுமையான வயல்களும், சரக்குகளால் நிரம்பியுள்ள கப்பல்களும் மட்டும் தோன்றுவதில்லை. வால்மீகியின் காவியம், புத்தர்—மஹாவீரரின் விஹாரங்கள், ஹர்ஷர், சமுத்திரகுப்தர், அசோகர் ஆகிய பேரரசர்களின் பராக்கிரமம். துளசிதாஸ், கபீர்தாஸ் போன்ற சான்றோரது பக்தியிசை—இவையெல்லாம் நினைவுக்கு வருகின்றன. கங்கா தரிசனம், தெய்வீக உண்மையின் பூரண நேர்முகமான தோற்றமாகும். கங்கையின் தரிசனம் எல்லா இடங்களிலும் ஒரே வகையாக இருப்பதில்லை. கங்கோத்ரியின்

அருகே இமயத்தையடுத்துள்ள பிரதேசங்களில் துள்ளிவரும் கன்னி யின் உருவம், உத்தரகாசியின் நெடிதுயர்ந்த தேவதாருக்கள் நிறைந்த காவிய அழுகுடைய வனப்பிரதேசத்தில் இளம் பெண்ணின் உருவம்; தேவிப்பிரயாகையின் மலைப்பாங்கான பள்ளத்தாக்குப் பிரதேசத்தில் ஒளிவீசும் அலக நந்தாவின் அருகே விளையாட்டுச் சிறுமியின் உருவம். இலக்ஷ்மண ஜூலாவில் இறங்கிய பின், ஹரித்வார் அருகே பல உபநதிகளின் தெளிந்த பிரவாகம், கான்பூரைத் தொட்டுச் செல்லும் போது வரலாற்றுப் புகழ்பெற்ற நீரோட்டம், பிரயாகையில் விசாலமான நீரோட்டத்தில் காளிந்தி நதியுடன் இணைந்த திரிவேணி சங்கமம்.

ஒவ்வொன்றின் அழகுமே புதுமையானது. ஒன்றைப் பார்த்த வுடன் இன்னொன்றைக் கற்பனை செய்துவிட முடியாது. ஒவ்வோர் இடத்தின் அழகு, செழுமை, சூழல், பெருமை—இவை ஒவ்வொன்றுமே தனிச் சிறப்புடையவை.

பிரயாகையில் கங்கை நதி ஒரு தனி உருவம் தரிக்கிறது. கங்கோத்ரி முதல் பிரயாகை வரை ஒரே சீராகப் பெருகிச் செல்லும் ஒருருவம் எனலாம்; ஆனால் பிரயாகையில் யமுனை வந்து கலக்கிறது. யமுனைக்கோ முன்பே இரண்டு தன்மைகளுண்டு ஓடியும் குதித்தும் வந்தாலும் அதில் விளையாட்டு நடை தெரி யாது. கங்கை சகுந்தலையைப்போல் தவச் செல்வியாகத் தோன்று வாள். கருமையான யமுனையோ திரௌபதியைப்போல மதிப்பிற் குரிய இளவரசியாகத் தென்படுவாள்.

சர்மிஷ்டா தேவயானி கதையைக் கேட்கும்போது, பிரயாகை யில் இணையும் கங்கை யமுனை நதிகளின் வெண்மை—கருமை நிற நீர்ப்பெருக்குகளின் நினைவு வரும். பாரதத்தில் பல நதிகள் இருப்பதால், சங்கமங்களுக்கும் குறைவில்லை. இவை அனைத் திலும் நம் முன்னோர்கள் கங்கை யமுனையின் இந்த சங்கமத்தைத் தான் மிகவும் விரும்பியுள்ளனர். எனவே தான் ''பிரயாக ராஜன்'' என்ற பெருமைக்குரிய பெயரும் கொடுத்துள்ளனர். பாரதத்தில் முஸ்லிம்களின் வருகைக்குப் பின்னால் எப்படி வரலாற்றின் வடிவம் மாறியதோ—அதேபோல டெல்லி—ஆக்ரா மதுரா—ப்ருந்தாவன் அருகில் வரும் யமுனையின் பிரவாகத் தினால் கங்கையின உருவமும் பிரயாகைக்குப் பிறகு முற்றிலும் மாறுதலடைகின்றது.

பிரயாகைக்குப் பிறகு கங்கை ஒரு நற்குடிப் பெண்ணைப் போலப் பெருமிதமும், சௌபாக்கியங்களும் கொண்டு விளங்கு கிறாள். இதன் பிறகு இதில் பெரிய பெரிய உபநதிகள் இணைகின்றன. யமுனை நீரானது மதுரா—ப்ருந்தாவனத்தில்

ஸ்ரீ கிருஷ்ணனுடைய லீலைகளை நினைவூட்டுகின்றது. அயோத்யா வழியே வரும் சரயூ நதியோ இராஜா இராமச் சந்திரனின் புகழையும், கருணையையும் நம் கண் முன் தோற்றுவிக்கின்றது. தெற்கேயிருந்து பாயும் சம்பல் நதியோ மன்மதனின் யாக—யக்ஞங்களின் செய்தி சொல்கின்றது. மிகுந்த கோலாகலத்துடன் சோண பத்ரன்—கஜக்ரானாவின் ரூபம் தரித்து மற்போர் காட்சிகளை மனக்கண் முன் கொணர்கின்றது. இவ்வாறு சீரும் சிறப்பும் சேரவரும் கங்கை பாடலிபுரத்தருகே, மகத சாம்ராஜ்யத்தைப் போலவே அகன்று செல்கிறது. இருந்தும் கண்டகி நதி தனது மதிப்புமிக்க தொழில் வளத்தை வாரி வழங்கத் தயங்கவில்லை. ஜனகர், அசோகர், புத்தர், மஹாவீரர்—ஆகியோர் வாழ்ந்த பூமியிலிருந்து முன்னேறிச் செல்லும்போது இனி எங்கே செல்வது என்ற நினைவில் ஆழ்ந்து நிற்பதுபோலத் தோன்றும். இத்தனை பெரிய நதி மிகுந்த வேகத்துடன் கிழக்கே நோக்கிச் சென்று கொண்டிருந்து விட்டு, திடீரெனத் தெற்கு நோக்கி திரும்புவது எளிதா என்ன? எப்படியோ திரும்பிப் பாய்ந்து வருகிறது. இரண்டு அரசர்களோ, இரண்டு மஹான்களோ திடீரென்று ஒருவரையொருவர் சந்திப்பது போல—கங்கையும் பிரம்மபுத்ராவும் நேருக்கு நேர் சந்திக்கின்றன. பிரம்மபுத்ரா ஹிமாலயத்தின் சாரலிலுள்ள நீரையெல்லாம் திரட்டிக்கொண்டு அஸ்ஸாம் வழியாக மேற்கு நோக்கிப் பாயும்போது கங்கை மேற்கேயிருந்து கிழக்கே பாய்கின்றது. எதிரெதிராகச் சந்திக்கும் நிலை எப்படி இருக்கிறது? யார் முதலில் வளைவது? யார் யாருக்கு வழி விடுவது? இறுதியில் இருவரும் தெற்கு நோக்கிச் சென்று ஸரித்பதியின் தரிசனம் செய்ய, ஆம்—சமுத்ரராஜனுடன் சங்கமிக்க முடிவாகின்றது. பக்தியுடனும் பணிவுடனும் அடக்கமாக முன்னேற. எங்கெங்கே இயலுமோ ஆங்காங்கே ஒருவரையொருவர் சந்திக்க வேண்டும்.

இதுபோன்று கோலாலந்தியருகே கங்கையும் பிரம்மபுத்ராவும் இணைந்த நீர்ப்பிரவாகம் காண்கிறது. சமுத்திரம் என்பது அதுதானோ? என்று இங்கு ஐயம் தோன்றுகிறது. வெற்றிக்குப் பிறகு எஞ்சி நிற்கும் சேனை எவ்வாறு ஆங்காங்கு செல்லுமோ, வெற்றி பெற்றவர்கள் எவ்வாறு இங்குமங்கும் களிப்போடு சுற்றித் திரிவார்களோ, அதே நிலையில் இந்த இரண்டு பெரிய நதிகளின் போக்கு இனிமேல் காணப்படுகின்றது. பல கிளை நதிகளாகப் பிரிந்து அவை சமுத்திரத்தைச் சென்று சேர்கின்றன. ஒவ்வொரு நதிக்கும் ஒவ்வொரு பெயர். சில நதிகளுக்குப் பல பெயர்களுமுண்டு. கங்கையும், பிரம்மபுத்ராவும் இணைந்த பின் பத்மா நதி என்று பெயர் வழங்குகின்றது. இதுவே மேலே செல்லும்போது மேகனா என்றும் அழைக்கப்படுகிறது.

இந்தப் பல முகங்களுடைய கங்கை எங்கே செல்கிறது? சுந்தரவனத்தின் மூங்கில் காடுகளை நனைக்கவா? சகரபுத்திரர்களுடைய ஆசையைத் தணித்து அவர்களை உய்விக்கவா? இப்போது நீங்கள் சென்று பார்த்தால், பழைய காலியிடங்களின் மிகுதி அங்கே இராது. எங்கு பார்த்தாலும் பலப்பல தொழிற்சாலைகளல்லவா காணப்படுகின்றன? முற்காலத்தில் இந்தியாவின் தொழிற் பொருட்கள் பலவும் இங்கிருந்து கப்பல்கள் மூலமாக இலங்கைக்கும், ஜாவா தீவுக்கும் சென்றுகொண்டிருந்தன. இதே வழியாக இப்போது வெளிநாட்டு ஜப்பானியக் கப்பல்கள் வெளிநாட்டுத் தொழிற்சாலைகளில் தயாரான பொருட்களை பாரதச் சந்தைகளை நிரப்புவதற்காகக் கொண்டு வருவதைப் பார்க்க முடிகிறது. கங்கையன்னை முன்போலவே நமக்கு எல்லா வளங்களையும் வாரித் தந்து வருகிறாள். ஆனால் நமது மெலிந்த கைகளால் அவற்றை அள்ளத்தான் முடியவில்லை.

கங்கையம்மா! இந்தக் காட்சியைப் பார்க்க உனக்கு இன்னும் இத்தனை நாள் விதித்திருக்கிறதோ?

# தேவர்களின் காவியம்

விண்மீன்களைப் பார்க்கவும், வானியல் நூல் கற்கவும் இப்போது நல்ல சமயமாகும். மாலையில் மேற்கே சந்திரப்பிறை வளர்ந்துகொண்டே வருகிறது. ஒவ்வொருநாளும் ஒவ்வொரு நட்சத்திரத்தில் சந்திரன் தோன்றலாகிறான். பஞ்சாங்கத்தைப் பார்த்தால் சந்திரன் எந்த நட்சத்திரத்தில் எந்த ராசியில் எத்தனை காலம் இருப்பானென்பது தெரியும். பஞ்சாங்கத்தில் இராசி சக்கரம் கணித சாஸ்திரத்தின் பன்னிரெண்டு இராசி களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதே சக்கரத்தில் 27 நட்சத்திரங் களும்கூட சமமான பங்குகளில் பிரித்துப் பேசப்படுகின்றன.

ஆகாயத்தில் நாம் காணும் விண்மீன்கள் அனைத்தும் பூமியி லிருந்து ஒரே தூரத்தில் இல்லை. அவை ஒரு பாதையில் வரிசை யாகச் செல்வதுமில்லை. ஒன்று வடக்கு நோக்கிப் போனால், இன்னொன்று தெற்குப்புறமாகச் செல்லும். இவ்வாறுள்ள நட்சத்திரப்பாதை நாற்பது அம்ச அகலம் உடையதெனக் கருதப் படுகிறது.

வான சாஸ்திரமும் விண்மீன் இயலும் வெவ்வேறானவை. இருந்தும் பழைய பஞ்சாங்கத்தின் கணக்குகளும் நட்சத்திரப் போக்குகளின் கணிப்பும் பெரிதும் ஒத்துப்போகின்றன. இதனால் சந்திரன், புதன், சுக்கிரன், முதலிய கோள்களின் நிலையைப் பார்க்க பழைய பஞ்சாங்கமே உதவுகிறது.

நாம் நட்சத்திரங்களின் உதயத்தையும் அஸ்தமனத்தையும் பற்றிப் பேசும்போது அவை வானவீதியில் எந்த இடத்தில் தோன்றுவன என்பதையும் சொல்வது பயனளிக்கும். ஆனால் நட்சத்திரங்கள் தோன்றுமிடம் ஒவ்வோர் அம்சத்திலும் சற்று வேறுபடும். பாரதத்தின் பரந்த வடக்குப் பகுதியில் ஆறு முதல் முப்பத்தாறு அம்சங்கள் உள்ளன. இதில் வார்தா இருபத்தோரா வது அம்சத்தில் இருப்பதால் பாரதத்தின் நடுப்புள்ளியிலிருக் கிறது. வார்தாவை மையமாக வைத்து உதய அஸ்தமனங்களைக் கணக்கிட்டால், அதில் கொஞ்சம் கூட்டிக் கழித்தால் இந்தியாவின் பல இடங்களில் கணக்கு சரியாகிவிடும்.

பூமியில் அட்சரேகைகளும், தீர்க்க ரேகைகளும் இருப்பது போல ஆகாசத்திலுமுள்ளன. ஆனால் நாம் அவற்றால் பய

னடைவதில்லை. நடைமுறையில் ஒவ்வொரு நட்சத்திரத்தின் உயரத்தையும் அறிவதே அதிகம் பயனுடையது. ஓர் எளிய அட்டையை எடுத்துக்கொண்டு அதில் ஒரு பெரிய கடிகாரத்தைப் போல வரைந்து, பன்னிரெண்டு பாகங்களாகக் குறித்துக் கொள்ளுங்கள். நிமிஷங்களின் கோடுகளையும் வரைந்துவிட்டு, நடுப் புள்ளியில் (கடிகாரத்தின் முட்கள் பொருத்தப்படுமிடத்தில்) ஓர் ஆணியைப் பொருத்துங்கள். திறந்த வெளிக்குச் சென்று ஒரு மேஜையின்மீது இந்தப் படத்தை வைத்துவிட்டு, பன்னிரெண்டு என்ற எண்ணானது சரியாக வட துருவம் இருக்குமிடத்தில் வருமாறு செய்யுங்கள். 6ஆவது எண்ணிற்கு நேர்கோட்டில் நடுவிலுள்ள ஆணியும் அமைய வேண்டும். அதற்கு நேரே துருவ நட்சத்திரம் தோன்றினால், நம்முடைய பலகை சரியாக அமைந்து விட்டதாகக் கொள்ள வேண்டும். 9ஆம் எண் இருக்கும் இடத்தி லிருந்து பார்த்தால் நேராக 3ஆம் எண் இருக்க வேண்டும். 3-இலிருந்து 9ஆம் எண்ணைப் பார்த்தால் மேற்குப் புள்ளி கிடைத்துவிடும். 12ஆம் எண்ணின் பக்கம் நின்றுகொண்டு 6ஆம் புள்ளியைப் பார்த்தால் அதுதான் தென் துருவமாகும்.

இந்தக் கணக்கில் நம் மைதானத்தில் ஒரு பெரிய டி (D) வடிவம் செய்து படியவைத்தால், வானவீதியில் செல்லும் எந்த நட்சத்திரத்தின் இடத்தையும் குறிப்பிட்டுச் சொல்லமுடியும். ஒரு நட்சத்திரம் (அபிஜிக்) கிழக்கே ஒன்றரை மணிக்கு உதிக்கிற தென்றால், இரவும் அதே நேரத்தில் அங்கிருப்பதில்லை. சரியாக வடகிழக்கில் நாம் அதன் உதயத்தைக் காணமுடியும் என்பது தான் இதன் பொருள். நமது மேஜையிலுள்ள கடிகாரத்தில், $7\frac{1}{4}$ மணியளவில் நாம் நடுவிலுள்ள ஆணியைப் பார்த்தால், $2\frac{1}{2}$ மணியளவுக்கு வலது புறமோ இடது புறமோ அபிஜிக் நட்சத்திர உதயத்தைப் பார்க்கலாம். எத்தனை மணிக்குத் தோன்றும் என்பதைச் சரியாகச் சொல்லவேண்டும். அதில் அந்தந்தத் தேதியைப் பொறுத்துக் கிட்டத்தட்ட நான்கு வினாடிதான் வித்தியாசமிருக்கும்.

வட துருவத்திற்கு அருகிலிருக்கும் விண்மீன்கள் 360 நாட்களும் வானத்தில் மேற்குப் பகுதியில்தானிருக்கும். அவற்றிற்கு உதயமும் இல்லை. அஸ்தமனமும் இல்லை.

# வானவில்லின் தோற்றம்

மந்திரியால் வாளா இருக்க முடியவில்லை. உண்மையில் அவர் கண்ட காட்சி அப்படியிருந்தது. இத்தனை மகிழ்ச்சி ஒருவருடைய உள்ளத்துக்குள்ளேயே எப்படி அழுந்தியிருக்க முடியும்? ''பாருங்கள்! மேற்கில் வானவில் மிக அழகாகத் தோன்றியுள்ளது. என்ன அழகு! பார்க்கவேண்டிய அழகு!'' என்று மகிழ்ச்சியோடு கூவினார்.

மாலை வழிபாட்டிற்குப் பிறகு சாதனை முறைகளைப் பற்றி ஏதோ எழுதிக்கொண்டிருந்தபோது மந்திரியின் அழைப்பு வந்தது. ஏதோ அசாதாரண விஷயமென்று தெரிந்துவிட்டது. அவர் மேற்குப்புற வாயிலைத் திறந்தார். இயற்கையின் இனிய நாடகக் காட்சி ஒன்று கண் முன்னே விரிந்தது. வானவில்லின் இரு முனைகளும் வானவெளியின் இரு புறங்களையும் இணைக்க, வானம் அரைவட்ட வடிவில் திருநீறு பூசி இருப்பதுபோல் தெரிந்தது.

முதலில் அதன் மேல் பாகத்தின்மீது கவனம் சென்றது. கீழே நாவல் பழ நிறத்தில் ஒரு பட்டை; இத்தனை அழகிய தோற்றம் நமக்கு எப்போதும் காணக் கிடைப்பதில்லை.

எப்போதாவது இந்திரவில் எனப்படும் வானவில் காணப்படும் போது, முழு உருவமும் தெரிவதில்லை. இன்று மேகக்கூட்டம் அதிகமிருந்ததால், வானவில் அழகுற எழுந்திருந்தது. சில வரிகளில் சிவப்பும், மஞ்சளும் அதிகம் தெரிந்தன. மேலே பச்சை நிறம் மனதை ஈர்த்தது. தெற்குப் பகுதியிலுள்ள மரஞ்செடி கொடிகளின் பச்சைநிறம் ஒருவேளை வானவில்லின் பச்சை நிறத்தை விழுங்கிவிட்டதோ! பக்கத்திலுள்ள மஞ்சளும் சிவப்பும் அதிகம் தெரிந்தன. மேலே இம்மூன்று நிறங்களும் மங்கலாகிவிட நாவல்பழக் கருநீல நிறம் அதிகமாயிருந்தது.

எவ்வாறு இராமனுடன் இலக்ஷ்மணனையும் பகவான் புத்தருடன் புத்த மதத்துறவி ஆனந்தையும் தேடுகின்றோமா, அதே போல இந்திரனின் வில்லுடன் அவனுடைய மாற்று வில்லையும் தேடத்தோன்றியது. வில்லின் இருபுறங்களிலும், மாற்று வில்லின் நிறங்கள் எதிர்வரிசையில் காணப்பட்டன. எத்தனை தெரிந்ததோ அத்தனை தெளிவாக இருந்தது. ஆனால் பெரிய வில்லின் கவர்ச்சியை இதனால் குறைக்க முடியவில்லை. வானவில்லைப்

பார்த்தால் பிறரைக் கூப்பிட்டுச் சொல்லாதே என்று பெரிய வர்கள் சொல்வதுண்டு. இதனால் நமக்கு என்ன நன்மையென்று தெரியாது. வானவில்லைக் கண்டவுடன் யாரையாவது அழைக்கப் போய் அவர்கள் வருவதற்குள் அது மறைந்துவிட்டால், இருவரும் கையைப் பிசைந்துகொண்டு நிற்க வேண்டியதுதான். கூப்பிட்ட நபர் சந்தேகப்பேர்வழியாக இருந்தால், அவருக்கு வானவில் என்று எதுவுமே இல்லையென்றும், பொய்—புரட்டைச் சொல்லி அவரை அழைத்ததாகவும் தோன்றும்.

இன்றைய வானவில் எளிதில் மறைந்து விடுமென்று தோன்ற வில்லை. கொஞ்சநேரம்வரை நாங்கள் அதைப் பார்த்து ரசித் தோம். போகப்போக அது அழகாகத் தோன்றியது. இவ்வாறு சற்றுநேரம் பார்த்துக்கொண்டே நின்றபோது மெல்ல மெல்ல ரசிக்கவும், விமர்சிக்கவும் தோன்றியது. ஆனால், எப்படியெல்லாம் தென்பட்டதோ, அவற்றையெல்லாமே வர்ணிக்க முடியுமா என்ன?

இயற்கையைப் படைத்த இறைவன் இப்படிப்பட்ட வண்ண வில்லை ஏன் உண்டாக்கி நிறுத்தியிருக்கிறான்? சொர்க்கம் வரை யில் ஏறிச்செல்ல ஓர் ஏணியோ இது என்று படிக்காத பாமரன் கூடக் கற்பனை செய்கிறான். இதுபோன்ற வர்ணனைகளை பல நாட்டு கவிஞர்களும் செய்திருக்கிறார்கள். இதன்மூலம் மனிதன் சொர்க்கத்திற்குப் போக முடியுமா—முடியாதா என்று யாருக்குத் தெரியும்? வில்லின் இருபுறங்களிலிருந்தும் மேலும் கீழும் பார்க் கின்றோம் என்பதென்னவோ உண்மை. ஏதோ புனித யாத்திரை செல்வது போன்ற உணர்வும் இப்போது ஏற்படுகிறது.

சற்றுநேரம் சென்றது, மிக மிக மெதுவாக—தெரியவே தெரியாமல்—வானவில் வடக்குப்புறம் வளைந்து வழுக்கிச் சென்று கொண்டிருந்தது. இதற்குக் காரணமென்ன? கிழக்கே உதிக்கும் சூரியன் தெற்கே நகர்ந்துகொண்டிருந்தான். எனவே வானவில் வடக்கே செல்லலாயிற்று. இதனால் சூரியன் மேலே வர வர வானவில் கீழே தாழ்ந்து மறைந்திருக்கும். ஆனால் இதெல்லாம் நம் கண்ணில் படவில்லை.

வெகு நேரம் நாங்கள் வானவில்லின் அழகைப் பார்த்துக் கொண்டிருந்தோம். வானவில் தென்பட்டுக்கொண்டிருக்கும்வரை அங்கிருந்து நகரவே கூடாதென்று தோன்றியது, வண்ணங்கள் மங்குவது தெரிந்தது. பார்த்துக்கொண்டிருக்கும்போதே வில் மறைந்தும் விட்டது, ஒரேயடியாக மறையாமல் மெதுவாக வண்ணங்கள் மெலிந்து காணாமற்போயின. பிறகும்கூடக்

கற்பனையில் வானவில்லும் அதன் வண்ணங்களும் தொடர்ந்து நின்றன. உண்மையான வில் இருந்த இடத்தில் கற்பனை வில் தெரியும்போது அதன் வண்ணங்களும் அப்படியே இருக்குமா, இருக்காதா என்று அப்போதே ஐயம் எழலாயிற்று.

வானவில் மறைந்துவிட்டாலும், அது பரப்பிய இனிமை மனதை நிறைத்தது. அதன் இன்னிசை நாள் முழுவதும் ஒலித்த வண்ணமிருந்தது. அதனுடைய உணர்வு நெடுநேரம் அமைதி யளித்துக்கொண்டிருந்தது. அதன் எழிலானது மனத்தில் ஆழப் பதிந்துவிட அதன் இனிமையோ ஒவ்வொரு நினைவலையிலும் தவழ்ந்து வந்தது.

ஐம்பொறிகளில் எந்த ஒன்றின்மூலம் அனுபவித்த மகிழ்ச்சி யாக இருந்தாலும், அது இதயத்தில் ஊறி நின்று பல்லாற்றானும் உடல் எங்கும் பரவுகின்றது. ஒரே வகையான மகிழ்ச்சியின் வெவ் வேறு சுவைகளைத்தான் நமது ஐம்புலன்களும் நமக்களிக் கின்றன.

பாலகன் முதல் கிழவர் வரை வானவில் எல்லோரையும் மகிழ் விக்கிறது. மனிதன் தன் வயதுக்குத் தக்கபடி இன்பத்தை நுகர் கிறான். பழுத்த வயதில் அவன் பெறும் மகிழ்ச்சியானது முதிர்ந்த நிலையிலிருக்கும், அங்கே அது புளித்துப் போனதோ, உலர்ந்து போனதோ ஆகாது. ஆழ்ந்த, சிறந்த, பலவகைப்பட்ட மகிழ்வே இது எனலாம்.

எதையும் அலசுவதும், ஆராய்ந்துகொண்டே போவதும் வாணிபம் போன்ற வறண்ட நிலைக்குக் கொண்டு செல்லும் அறிவும், மனமும் தனித்தனியே பிரிந்துவிட அங்கே மகிழ்ச்சி குறைவாகவும், கேள்விகளுக்குக் கிடைக்கும் பதில்கள் அதிகமாகவு மிருக்கும். இதேபோல எல்லாவற்றையும் தொகுத்தலும், வகுத்தலும் அறிஞருடைய தொழிலாக இருக்கலாம்—ஆனால் அங்கே ஆனந்த அனுபவமிராது. ஆனால் சூரிய கிரணங்களின் செய்தியே வேறுபட்டது. உண்மையைச் சொல்ல வேண்டு மென்றால், வானவில் அளிக்கும் பரமானந்தம், அதன் அழகு, அதன் புதுமை, இவற்றால் நமது உள்ளத்தில் குதித்தோடும் இன்ப வெள்ளம் எல்லாமே சூரிய கிரணங்களை அலசி ஆராய்வதிலேயே தான் அடங்கியுள்ளது. ஆகாயத்திலுள்ள பல்வேறு நட்சத்திரங் களின் உள்ளார்ந்த ஒளிக்கிரணங்களால் வெவ்வேறு வானவில்கள் வெவ்வேறு வண்ணங்களில் தோன்றுகின்றன. இந்த வித வித மான வண்ணங்கள் இந்த நட்சத்திரங்களிலிருக்கும் வெள்ளி, தாமிரம், இரும்பு, தங்கம் போன்ற உலோக தாதுக்களின் ஒளியி லிருந்து பிறக்கின்றன. இவற்றை எண்ணும்போது நமது கற்பனை

யாற்றல் வளர்ந்துவிடுகிறது. ''அறிவியலானது காவிய உலகையே அழித்துவிடுகிறது'' என்று சொல்பவர்களுக்கு அறிவியலிலும் எத்தனை காவியங்கள் பொதிந்து கிடக்கின்றன என்பது தெரியாது.

வானவில்லைக் காணும் நாம் பெறும் மகிழ்ச்சியைப்போல் வானவில்லும் நம்மைக் கண்டு மகிழ்வதுண்டா என்ன? ஏனில்லை? என்று மனம் கேட்கிறது. அழகுணர்ச்சியை ரசிப்பவர்கள் அளிக்கும் விடை. இது. இதை வினாவாக எழுப்பி மேலும் வலுவுறச் செய்துள்ளாரே!

[''உட்தேபூல்'' (மலரும் பூக்கள்) என்ற நூலிலிருந்து.]

# வாழ்வளிக்கும் காற்று

ஒரு கிராமம் இருந்தது. அங்கு வாழ்ந்த மக்கள் மிகவும் எளிமையானவர்கள்; நல்லவர்களும்கூட. சான்றோர் வார்த்தையை மதித்து நடக்கும் பண்பாடு அவர்களிடம் இருந்தது.

இங்கு முன்னொரு காலத்தில் ஒரு முதியவன் வசித்து வந்தான். அவன் எப்பொழுதும் இவ்வாறு சொல்வான். ''பனிக் காலத்தின் காற்று மிகவும் நல்லது. அது எவ்வளவு நம் உடலில் படுகிறதோ, அவ்வளவு நலமும், பலமும் நமக்குக் கிடைக்கும். பனிக்காலக் காற்றுத்தான் நமக்கு உயிரளிப்பது எனலாம்.

நாட்கள் சென்ற பின் முதியவன் காலமானான். கிராம மக்கள் அவனை அதிகம் நினைவுகூர்ந்தனர். அவனது நினைவு நாளன்று ஒன்றுகூடி அவன் சொல்லிச் சென்றவற்றை எண்ணிப் பார்க்கலாயினர்.

ஒரு நாள் யாரோ சொன்னார்—''சகோதரர்களே, நாம் சான்றோர் சொற்படி நடப்போம். அதுவே நமக்கு நன்மை தரும். பனிக்காலம் முடியுமுன்பாக நாம் ஏன் எல்லா ஜன்னல் களையும் கதவுகளையும் மூடிவைத்து, அப்போது வீசும் உயிர் கொடுக்கும் பிராண வாயுவைச் சேமித்து வைக்கக்கூடாது? அடுத்த பனிக்காலம் வரை இப்படியே காலந்தள்ளலாம். முடிந்த வரை நாம் வீட்டை விட்டு வெளியே வரவே வேண்டாம். வேண்டுமானால், ஒரு சிறிய ஜன்னல் அமைத்து, அந்த வழியே வருவோம். வேண்டும்போது சற்றே திறந்து உடனே மூடி விடுவோம்.''

இந்த யோசனை எல்லோருக்கும் பிடித்துப்போயிற்று. அவ் வாறே செய்தனர். விளைவு என்னவாயிருக்கும் என்பதை நீங்களே யூகித்துக்கொள்ளுங்கள்.

மூட நம்பிக்கைகள் கொண்டவர்கள், பழைமைப் பற்றுடைய வர்கள், கடுமையான நியமம் விரும்புபவர்கள்—இந்து சமுதாயத் தில் இப்படிப்பட்டவர்களெல்லாம் எப்போதும் இதே பலனைத் தான் அனுபவிக்கிறார்கள் (''கடோர் க்ருபா''விலிருந்து).

# விந்தையான பசு—சம்ரக்ஷணை

நாங்கள் சபர்மதி ஆசிரமத்திலிருந்தோம். காந்திஜி மதன் லால் பாயியின் வீட்டிலிருந்தார். இதன் பொருள் என்ன வென்றால் இந்த நிகழ்ச்சி மதன்லால் பாயி மறைந்தபின் ஏற்பட்ட தென்பதாம்.

நாட்டின் பொது வாழ்வின் பிரச்சினைகளை எவ்வாறு காந்திஜி தீர்க்கவேண்டியிருந்ததோ அதேபோலத் தன் நண்பர்கள் குடும்பங்களின் பிரச்சினைகளையும் அவர் பலமுறை தீர்த்து வைக்கவேண்டியிருந்தது. ஒரு வகையில், அவருக்கு இந்த மனித வாழ்வின் மென்மையான செயல்களில் அதிகம் வெற்றி கிடைத்தது எனலாம். இவ்வாறு அவர் செய்துள்ள தனி மனிதர் தொண்டு நாட்டின் பொதுத் தொண்டிற்குச் சற்றும் குறைந்த தன்று.

பாபுவிற்குத் தெரிந்த குடும்பத்து இளைஞன் ஒருவனுக்குத் திருமணம் நிச்சயமாகியிருந்தது. பெண் வீட்டார் திருமணம் உறுதியான பிறகுதான் தம் கவலையிலிருந்து விடுபட்டிருந்தனர். ஆனால் கல்யாணப் பையன் திடீரென்று மனம் மாறினான். எனக்கு வேண்டாம் இந்தத் திருமணம் என்று கூறலானான். எத்தனையோ எடுத்துச் சொல்லியும், அவன் கேட்கவில்லை.

கடைசியில் பெண் வீட்டார் வேறு வழியின்றி பாபுஜியிடம் வந்தனர். உலகமே வணங்கும் மகாத்மாவாகிய பாபுஜியை இதற்காக அணுகலாமாவென்று அவர்களுக்குத் தயக்கமுமிருந்தது. ஆனால் நம்பிக்கையிழந்த மனிதன் என்னதான் செய்யமாட்டான்? காந்திஜி அந்த இளைஞனை வரவழைத்துத் தீர விசாரித்தார். பெண் வீட்டார் உட்கார்ந்து எல்லாவற்றையும் கேட்டுக்கொண் டிருந்தனர். இரண்டு மூன்று நாட்களுக்கு காந்திஜி அந்த இளைஞனுடன் வாக்குவாதம் செய்தார். அவன் எவ்வளவு பிடிவாதமாக இருந்தான் என்பதை எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தனர்.

மூன்றாவது நாள் நான் ஏதோ வேலையாகக் காந்திஜியிடம் சென்றேன். இளைஞன் தன் கஷ்டங்களை மேன்மேலும் எடுத்துச் சொல்லிக்கொண்டிருந்தான். ''என் அப்பா என்னை ஐந்து மணி நேரம் வேலை செய்யச் சொல்கிறார். கடையில் நான் ஐந்து மணி நேரம் உட்கார்ந்திருக்கவேண்டும். இந்தக் காலத்து இளைஞன்

யாராவது இரண்டு மணி நேரத்துக்குமேல் வேலை செய்கிறானா? என் கஷ்டங்களை நான் உங்களிடம் எப்படிச் சொல்வேன்?'' இது போன்று என்னென்னவோ சொன்னான்.

பாபுஜி மிகவும் அமைதியாகக் கேட்டார். எப்படியோ இளைஞனின் வாக்கிலிருந்து திருமணத்துக்குச் சம்மதம் வரவழைத்துவிட்டார். பெண் வீட்டாரது கவலை நீங்கியது.

இப்போது பாபுஜி நிமிர்ந்து உட்கார்ந்தார். இளைஞனைச் சற்று வெளியே இருக்கச் சொல்லிவிட்டு, பெண் வீட்டாரிடம் பேசலானார். ''இந்த இளைஞனின் நிலைமையைப்பற்றி மூன்று நாளாகக் கேட்டுவருகிறீர்கள். எப்படிப்பட்ட சூழ்நிலையில் சம்மதம் வாங்கவேண்டியிருந்தது என்பதையும் பார்த்தீர்கள். இப்போதும் இந்தத் திருமணம் நடக்கவேண்டுமென்று விரும்புகிறீர்களா?''

பெண் வீட்டாரில் முக்கியமாக பெரியவரின் முகத்தையே நான் பார்த்துக்கொண்டிருந்தேன். அவர் மனத்தில் பெருத்த போராட்டம் நடந்துகொண்டிருந்தது. காந்திஜி தமக்கே உரிய கூர்ந்த பார்வை பார்த்துக்கொண்டிருந்தார். பெரியவர் வாயிலிருந்து வேண்டும்—வேண்டாம் என்று எதுவுமே பேச்சு வரவில்லை. பிறகு கம்மிய குரலில் அவர் சொன்னார்—''பாபுஜி! நீங்கள் சொல்வது சரிதான். எங்களுக்கு இப்போது விருப்பமில்லை.''

அதே கணத்தில் பாபுஜி அந்த இளைஞனை உள்ளே அழைத்துக் கூறினார்: ''நாங்கள் உன்மேல் ஏதும் பொறுப்பைச் சுமத்த விரும்பவில்லை. இவர்களோடு நான் பேசிவிட்டேன். உனக்குத் திருமண பந்தத்திலிருந்து விடுதலை! நீ போகலாம்'' என்றார்.

இளைஞன் சென்றுவிட்டான். பெண் வீட்டாரும் அங்கிருந்து கிளம்பலாயினர். பாபுஜி என் பக்கம் திரும்பினார். என் பேச்சைக் கேட்பதற்குமுன் தாமாகவே பேசலானார். ''காகா, நான் பசுவைப் பாதுகாப்பது போன்றதொரு வேலை செய்தேன். பசு இரட்சையைப்பற்றிப் பேசும்போது நான் ஏதோ ஒரு நாலுகால் பிராணியைப்பற்றி மட்டும் நினைப்பதில்லை. அந்த இளம் பெண்ணின் வாழ்வை எப்படி மாற்ற இருந்தோமோ? எப்படியோ ஒரு மங்களகரமான செயல் நடந்தேறியது.''

இதைச் சொல்லிவிட்டு பாபுஜி தான் பேசவந்த வேலையில் மூழ்கினார். பிறகும் அவருடைய முகத்தில் ஒரு எளிய பிரச்சினை தீர்ந்த நிம்மதி நீண்ட நேரம் நிலவியது.

—''பாபுஜி கி ஜாங்கியான்'' என்ற நூலிலிருந்து.

# தீனபந்துவின் நினைவுகள்

இன்று ஏப்ரல் ஐந்தாம் நாள். ஒரு நண்பர் நினைவூட்டியிரா விடில் இது தேசபந்து ஆண்ட்ரூஸின் தினமென்பது எனக்கு ஞாபக மிராது. ஆனால் ஆண்ட்ரூஸின் நினைவு வந்தவுடன், அவரருகி லேயே இருப்பதுபோல் தோன்றுவது இயல்பேயாகும். இது தவிர்க்கவும் முடியாதது.

இங்கிலாந்தின் ஒரு சிறந்த மனிதர் இந்தியாவுக்குத் தொண் டாற்றியவாறே கல்கத்தாவில் காலமானார். இந்த எண்ணம் மனதில் தோன்றியவுடனேயே மற்றொரு நினைப்பும் கூடவே வந்தது. வங்காளத்தின் ஒரு தவப்புதல்வன், புதிய பாரதச் சிற்பி இராஜாராம் மோகன்ராய் வெளிநாடு சென்று, இரண்டு நாடு களுக்கும் தொண்டாற்றிய வண்ணமே பிரிஸ்டலில் இயற்கை யெய்தினார். கொண்டதும், கொடுத்ததும் சரியாகிவிட்டது.

இராஜாராம் மோகன்ராயும், தீனபந்து சார்லி ஆண்ட்ரூஸும் பாரதத்திற்கும் இங்கிலாந்திற்கும் செய்த சேவையில் மனித குலத்திற்கே மகத்தான தொண்டாற்றியுள்ளனர். நான் இராஜா ராம் மோகன்ராயைப் பார்த்ததில்லை. ஆனால் தீனபந்துவுடன் நெருங்கிப் பழகும் பெரிய பேறு பெற்றிருந்தேன். அன்பே உருவான இந்தத் தூய மனிதரின் தரிசனமே எத்தனை புனிதமான தென்றும், மகிழ்ச்சியூட்டுவதென்றும் அவரை அறிந்திருந்த பலரும் சொல்லுவர்.

மிஸ்டர் ஆண்ட்ரூசை முதன் முதலில் நான் சந்தித்தபோது ''தேசப்பற்று'' என்பதை மிகக் குறுகிய பொருளிலேயே உணர்ந் திருந்தேன். கிறித்துவ மிஷன்களைச் சேர்ந்தவர்கள் நமது நாட்டிற்கும், மதத்திற்கும், பண்பாட்டிற்கும், விடுதலைக்கும் பரம எதிரிகள் என்ற எண்ணம் மனதில் ஆழமாக வேரூன்றி யிருந்தது. பல்லாயிரம் முயற்சிகள் செய்தாலும் இதிலிருந்து விடுபட முடியவில்லை. இதற்கு ஒரு முக்கிய காரணமிருந்தது. தேசத்தின் முக்கிய தலைவர்களில் ஒருவர் இவ்வாறு சொல்லக் கேட்டிருந்தேன். ''எந்த மிஷனைச் சேர்ந்தவர்களாவது நம் மிடையே அரசியல் நோக்கத்தோடு பணியாற்றிவந்தால் அவர் களிடம் எனக்குப் பயமில்லை. ஏனெனில் அவர்களது மோசக் கருத்து வெளியாகிவிடுகிறது. ஆனால் பாதிரிமார்கள் அல்லது

மதபோதகர்கள் என்போர் மத சிந்தனை உடையவராயும், இயேசுவின் பக்தர்களாகியும், உண்மையான சேவகர்களாகவும் எப்போது மக்களிடையே வாழ்கிறார்களோ, அவர்களால் அதிகம் ஆபத்து விளைகிறது. அப்பாவிகளான நமது மக்கள் நன்றியுள்ளவர்களாதலால், அவர்களால் கவரப்பட்டு அவர்கள் வலையில் வீழ்ந்து விடுகின்றனர்.''

இந்த வார்த்தைகள் என் மனதில் ஆழப்பதிந்து நின்ற காரணத்தால் மிஸ்டர் ஆண்ட்ரூஸின் சிறந்த தொண்டினைக் கண்டுங்கூட நான் விலகியிருக்கலானேன். அப்போது நான் சாந்தி நிகேதனிலிருந்தேன்.

ஒருநாள் காந்திஜி சாந்திநிகேதனுக்கு வந்தபோது ஆண்ட்ரூஸ் பற்றிய என் கருத்தை வெளிப்படையாக அவரிடம் சொன்னேன். சில வங்காளிகளும் அப்படியே கருதுவதாகவும் சொன்னேன்.

காந்திஜி என்னை விசித்திரமான முறையில் பார்த்தார். மாணவர்கள் நாங்களனைவரும் ஒன்றாகக் கூடியிருந்தோம். அங்கே ஆண்ட்ரூஸை அழைத்துவந்து, இவர்கள் சிலருக்கு இன்னின்ன எண்ணங்கள் இருக்கின்றன என்று சொன்னார்.

பாவம் ஆண்ட்ரூஸ்! தலை குனிந்தபடி அவர் அனைத்தையும் கேட்டார். பிறகு காந்திஜி பேசலானார்—''சார்லியை நான் நன்றாகப் புரிந்துகொண்டிருக்கிறேன். இவர் மனிதர்களை நேசிப்பவர். இப்படிப்பட்டவரை வேறெங்கும் நாம் காண முடியாது. ஆங்கிலேயரது குணம் இவரிடமும் உண்டு. தன் கருத்துக்களில் உறுதியானவர்; தன் எண்ணங்களைப் பிறர்மீது சுமத்துவதும் இவரது இயல்பு. இவர் கருத்துக்கள் உங்களைக் கவருமானால் அது எப்படி இவரது குற்றமாகும்? பரந்த மனமுள்ள இப்படிப்பட்ட மனிதர்களுடன் நமது மக்கள் தொடர்புகொள்வதால் அவர்களுக்கு நன்மையே உண்டாகும். மிகச்சிறந்த நன்னடத்தையைப்பற்றிய உயரிய எண்ணங்களை அவர்கள் பெறுவர்.''

ஆண்ட்ரூஸ் மிகவும் வெட்கிப்போனார். எங்களுக்கோ மனிதர்களைச் சரியானபடி இனங்கண்டுகொள்வதற்கான புதிய கண்ணோட்டம் கிடைத்தது. பிறகு நான் அவரை மிகவும் நெருங்கலானேன். அவரது குணச்சிறப்பிலே சொக்கிப்போனேன் நான்.

மிஸ்டர் ஆண்ட்ரூஸின் எளிய குணங்களைப்பற்றியும், மறதியைப்பற்றியும் எத்தனையோ எழுதப்பட்டுள்ளது. இந்த இயல்புகளாலேயே அவர் அதிக அன்புக்குரியவரானார். யாரிடமோ கேட்டு ஒரு பொருளை வாங்குவார் வேறு யாரிடமோ அதைக் கொடுத்துவிடுவார். பையில் பணம் இருக்கிறதோ இல்லையோ—இதுபற்றிச் சிந்தனையே கிடையாது. எல்லோரை

யும் நல்லவரென்று எண்ணி எல்லாரிடமும் நம்பிக்கை வைத்தல்—ஏமாற்றப்பட்ட நிலையிலும் சிரித்தல்—அவரது அளப்பரிய சேவையினுடைய தன்மையிது. மிஸ்டர் ஆண்ட்ரூஸிடம் இருந்த தனிச் சிறப்புகள், அவரது பக்தியினால் ஏற்பட்டவை. மதத்தின் பல தத்துவங்களில் அவருக்கு அக்கறையில்லை. எனவே பல கடும் பற்றுக்காரர்கள், சம்பிரதாயமான மத நம்பிக்கையுடையவர்கள் அவரை நாஸ்திகர் என்றே சொல்வர். அவர்களிடம் மிஸ்டர் ஆண்ட்ரூஸ் மிகவும் அவதியுற நேரிட்டது. அவற்றையெல்லாம் பொறுத்துக்கொண்டு வாழ்ந்தவர் அவர்.

ஒரே வார்த்தையில் இந்தத் தொண்டின் உருவத்தினை விவரிக்கவேண்டுமானால், ''இந்த தீனபந்துவிடம் பெண்மையின் மென்மையான இதயம்—தாய்மையின் தயைமிகுந்த நெஞ்சம் இருந்தது'' என்று மட்டும் சொன்னாலே போதுமானது.

# கீதாஞ்சலி

**நா**ன்கு குழந்தைகளின் தாய்க்கு ஓர் அனுபவம் எப்போதும் கிடைக்கும். ஒவ்வொரு குழந்தையும் அம்மா தன்னுடையவரே என்று சொந்தம் கொண்டாடும். பிறகு அவை தமக்குள் சண்டையிட்டுக் கொண்டு அம்மாவுக்காகப் போட்டியிடும்—''அம்மா உனக்கல்ல—எனக்குத்தான்'' என்று. அன்பினால் விளைகிற சண்டைதான் இது. இதை அடிதடியினால் தீர்த்துவைக்க முடியுமா? கடைசியில் குழந்தைகள் அம்மாவிடம் போய் கேட்டார்கள். ''உண்மையைச் சொல், அம்மா. விடை சரியாகச் சொல்ல வேண்டும். நீ யாருடைய அம்மா?'' அம்மா அன்போடு சிரித்தபடி பதில் சொல்வாள்: ''நான் எல்லோருக்கும் அம்மாதான். ஒருத்தருக்கு மட்டும் சொந்தமில்லை.'' ''அப்படியும் இருக்க முடியுமா என்ன?'' சில குழந்தைகள் இதைக் கேட்டு உற்சாகம் குன்றிப் போய்விடுகிறார்கள். வேறுசில புத்திசாலிக் குழந்தைகள் அம்மாவின் வார்த்தை உண்மையென்று புரிந்துகொண்டு மகிழ்ச்சியோடு ஒப்புக்கொள்கிறார்கள்.

அம்மா தன் தம்பிக்கும் சொந்தமென்றால், நமக்குண்டான சொந்தம் குறைந்துவிடுகிறது. இந்தக் குறுகிய நோக்கத்தில் இருக்கும்வரை சண்டைதானிருக்கும். அம்மாவின் பதிலினால் குழந்தைகளுடைய வாழ்வுக் கண்ணோட்டமே மாறிவிடுகிறது. அம்மா தனது சகோதரர்களுக்கும் அம்மாவானால் தனக்கு எதுவும் குறைவு வராது. அவள் எல்லோருக்கும் சொந்தமானவள். எனவே எனக்கும் சொந்தமுண்டு.

சில பக்தர்களும், சில சாதியினரும் கடவுள் தம் பக்கமே முழுவதுமாக இருக்கவேண்டுமென பல யுகங்களாக முயற்சி செய்து வருகின்றனர். ஆனால் இறைவனின் உண்மை உருவம் அவர்களுக்குத் தென்படும்போது, வேறு நம்பிக்கை ஏற்படுகிறது. இறைவன் எல்லோருக்கும் சொந்தமில்லையென்றால், நமக்கு மட்டும் எப்படிச் சொந்தமாவான்? தனக்கும் ஆண்டவனுக்கும் உள்ள உறவு சரியாகத் தெரிந்த பிறகு அவனது தூய வடிவம் கண்முன் தோன்ற அங்கே அசாதாரண இன்பம் கிடைக்கின்றது. ஈஸ்வரனுடைய உண்மை உருவமும், அவனுடன் தனக்குள்ள சர்வ சாதாரண உறவும் தெரிந்த பிறகு கவிஞன் அவனை நோக்கி ஆனந்தமாகப் பாட ஆரம்பிக்கிறான்.

''நீ எல்லோருக்கும் சொந்தம். இதை நான் நேராகப் புரிந்து கொண்ட அக்கணத்திலேயே நீ உன்னுடைய தரிசனம் காணச் செய்வாயாக. நீ எங்கே எல்லோரையும் அன்போடு அணைத்துக் கொள்கிறாயோ அதே நேரத்தில் எனக்கு உன்பால் பக்தி ஊற்றெடுக்க அருள்புரிவாயாக.''

''எங்கும் நிறைந்துள்ள இறைவனே! இந்த உலகோடு நீ ஒன்றிப் பரவி நிற்கும்போது, உன்னை எனக்குக் காட்டுவாயாக! உனக்கும் எனக்கும் உறவுகொண்டாடுவோமாக!

நான் உன்னை வனத்தில் பார்க்க விரும்பவில்லை? வெற்றிடத்தில் காண விழையவுமில்லை. எனது மனதுக்குள்ளே—அறிவுக்குள்ளே நீ தெரியமாட்டாயா?—இதுகூட என் ஆசையில்லை. என் அன்பே! நீ எங்கு என்னை உன்னுடையவனாக மாற்றுகிறாயோ, அங்கேயே நானும் உன் இணையடி சேரவேண்டும். இதுவே என் ஆசை.''

''எங்கே உன் அன்புக் கரங்களை விரித்துத் தன் பாசவலைக்குள் எல்லோரையும் ஏற்றுக்கொள்ள வருகிறாயோ, அதே கணத்தில், அதே இடத்தில் என்னிடம் பக்திநிலை பிறக்கட்டும்—பரவசம் பொங்கியெழட்டும்—இதுவே என்னுடைய விருப்பம். என்னுடைய அன்பு—என்னுடைய பக்தி—என்னுடைய கருணை—இவை ஏகாந்தத்தில் ஒளிந்திருக்கக்கூடாது. ஒளி எவ்வாறு எங்கணும் பரவுகிறதோ, அவ்வாறே இந்த அன்புப் பிணைப்பும் எங்கும் எப்போதும் ஒளிவீசி நிற்கும். என் அன்பே! நீ அனைவருக்கும் மகிழ்ச்சிக் கடல்; இதய தெய்வம்; உன்னைப் புரிந்து கொண்ட பிறகுதான் என் மனம் விரிவடைந்திருக்கிறது. உன்னை நான் எந்த மூலையில் சென்று பார்ப்பேன்? எங்கேயும் மூலையெதுவும் தென்படவில்லையே? பார்க்குமிடமெல்லாம் பரந்து விரிந்து நீக்கமற நிறைந்தனையே! நீயன்றோ பரம்பொருள்!

(—''யுகமூர்த்தி ரவீந்திரநாத்'' என்ற நூலிலிருந்து)

---

# காகா சாஹப் காலேல்கர்
# எழுதிய நூல்களின் பட்டியல்

குஜராத்தி

ஸ்வதேசி தர்ம், 1920
காலேல்கர்னு லேகோ, முதல் பாகம், 1923
காம யாமான்ஜயினே கங்கரீசு, 1923
பூர்வரங் (ஸ்ரீ நரஹரி பரிகூடன் சேர்ந்து எழுதியது), 1923
ஹிமாலய ப்ரவாஸ, 1924
காலேல்கர்னு லேகோ, இரண்டாம் பாகம், 1925
ஓதராலி திலாலோ, 1925
கரண்டியா பேகரி
ப்ரம்மதேசனோ ப்ரவாஸ், 1931
ஜீவதா தஹேவாரோ, 1934
லோகமாதா, 1934
ஸ்மரண யாத்ர, 1934
ஜீவனோ ஆனந்த், 1936
ஜீவன்-விகாஸ், 1936
ஜீவன்—பாரதி, 1937
சத்போத் சதகம், 1941
மானவி கண்டியெரொ (ஸ்ரீ கி. க. மசருவாலாவுடன் சேர்ந்து
எழுதியது: பேரி பர்ஜேஸ் எழுதிய ''ஹூ வாக் அலோன்''
என்ற நூலின் மொழிபெயர்ப்பு)
கிதா ஸார், 1947
ஸ்ரீநேத்ரமணி பாயினே, 1947
பூர்வ ஆப்ரிகா மான், 1951
தர்மோதய், 1952
ஏகடவானோ ஆனந்த், 1953
ஜீவன் லீலா (லோகமாதாவின் திருத்திய மறுபதிப்பு), 1956
ஜீவன் ப்ரதீப், 1956
அவாரன்வார், 1956
மதுசஞ்சய், 1957
உக்மணே தேஷ், ஜாபான், 1958
சிர்ஜீவ் சந்தனே, 1958
ஜீவன்—சிந்தன், 1959
மீடானா பிராதபே, 1959
நாரி கௌரவனோ கவி, 1960
சுத்த ஜீவன் திருஷ்டினி பாஷா—நீதி, 1960
பாரதீய சன்ஸ்கிருதினோ உத்காதா, 1961
சாஹித்யமான் சார்வபௌம ஜீவன், 1961
சிந்தன் அனே புருஷார்த்தமான் சமன்வய, 1961
ரவிச்சவினும் உபஸ்தான் அனே தர்பண, 1961
சர்க்கரா தீவிப் மொரீஷியஸ், 1962
ஜீவன் வ்யவஸ்தா, 1963

வித்யார்த்தினிநே பத்ரோன், 1964
ஸ்மரண யாத்ரா (சங்க்ஷிப்த்), 1967
பாரத் தர்சன்—பாகம் 1, 1967
பாரத் தர்சன்—பாகம் 2, 1967
பாரத் தர்சன்—பாகம் 3, 1968
பாரத் தர்சன்—பாகம் 4, 1968
குஜராத மான் காந்தியுக், 1969
ப்ராஸங்கிக் ப்ரதிஸாத், 1970
விரல் ஸஹவாஸ், 1971
வாத்ஸல்யமயி ப்ரஸாதி, 1972
பஜனாஞ்சலி, 1974
நாரி ஜீவன் பரிமன், 1977
ஜ்யான் தரேகனே பஹோசவன்சே, 1977
சந்தியா சாயா, 1976
ஜீவனனும் காவ்ய, 1972

ஹிந்தி

ராஷ்ட்ரீய சிக்ஷா கே ஆதர் சோங்கா விகாஸ், 1928
ஜிந்தா பனோ, 1930
சஹஜீவன் கி சமஸ்யா, 1937
கலா: ஏக் ஜீவன் தர்சன், 1937
ஹிந்துஸ்தானி கி நீதி, 1947
ஹிந்துஸ்தானி கே ப்ராசரக் காந்திஜீ, 1948
பாபு கி ஜாங்கியான், 1948
நாகரி வர்ணலிபி போத், 1951
ஹிமாலய நிவாஸியோன்ஸே, 1954
ஜீவன் சாஹித்ய, 1955
லோக் ஜீவன், 1955
ஜீவன் சன்ஸ்க்ருதி கி புனியாத், 1955
நக்ஷத்ரமாலா, 1958
காந்திஜீ கி அத்யாத்ம சாதனா, 1959
ஸ்வராஜ்ய பாஷா, 1959
சத்போத் சதகம், 1961
கடோர் க்ருபா, 1961
கீதா—ரத்ன—ப்ரபா, 1961
ஆஷ்ரம் ஸம்ஹிதா, 1962
ப்ரஜா கா ராஜ், ப்ரஜா கி பாஷா மேன், 1962
உட்தே பூல், 1964
யாத்ரா கா ஆனந்த், 1965
சத்யாக்ரஹ விசார் ஔர் யுத்த நீதி, 1965
பரமசகா ம்ருத்யு, 1966
சாந்தி சேனா ஔர் விஷ்வ சாந்தி, 1966
சமன்வய சன்ஸ்கிருதி கி ஓர், 1967
கீதா கே ப்ரேரக் தத்வ, 1967
ராஷ்ட்ரபாரதி ஹிந்தி கா ப்ரசன், 1967
யுகமூர்த்தி ரவீந்தரநாத், 1969
ஜீவன் யோக் கி சாதனா, 1969
விநோபா ஔர் சர்வோதய கிராந்தி, 1970

காந்தி யுக் கே ஜல்தே சிராக், 1970
காந்தி சரிக்ர கீர்த்தன், 1970
காந்திஜீ கா ஜீவன தர்சன், 1970
காந்திஜீ கா ரசனுத்மக் கிராந்தி சாஸ்த்ர (இரண்டு பகுதிகளில்), 1971
நவபாரத கே சந்த் நிர்மாதா, 1972
யுகானுகூல ஹிந்து ஜீவன்—த்ருஷ்டி, 1972
ஸ்வராஜ்ய சன்ஸ்க்ருதி கே சந்தரி, 1973
ப்ருக்ருதி கா சங்கீத், 1976
ஈசாவாஸ்ய உபநிஷத், 1976
உபநிஷதோங்கா போத், 1977
சிந்தனிகா
சாஹித்ய—ஏக் கலா ஔர் ஜீவன் தர்சன்
நவச்ருஜன் கி காந்தி நீதி
அஹிம்ஸா கி ஜீவன் த்ருஷ்டி
காந்திஜீ கே ஜீவன் சித்தாநித்
மஹாவீர் கா ஜீவன் சந்தேஷ், 1982
மஹாராஷ்டிர கே சந்தி, 1984

மராத்தி

ஸ்வாமி இராமதீர்த்த: ஜீவன் சரித்ர, 1907 (ஸ்ரீ குணுஜியுடன் சேர்ந்து எழுதியது)
கிதேசேன் சமாஜ ரச்ஞு சாஸ்த்ர, 1933
ஹிசன்டல்யாசா ப்ரஸாத், 1934
ஸாஹித்யசே மூலதன், 1938
வன சோபா, 1944
சப்ரேம வந்தேமாதரம், 1947
சாஹித்யாசி காமகிரி, 1948
ஸ்மரண யாத்ரா, 1949
ம்ருகஜலாந்தில மோதி (ஜிப்ரான்), 1951
மாலன்ச (ரவீந்த்ரநாத்), 1952
லோக ஜீவன், 1952
ரவீந்த்ர ப்ரதிபேசே கோன்வலே க்ரண, 1955
புண்யபூமி கோமன்தக், 1958
ரவீந்த்ர மனன், 1958
ரவீந்த்ர வீணு, 1961
ரவீந்த்ர ஜங்கார், 1962
கேல்கர் பாணேன், 1964
பாரத தர்சன்—பாகம் 1,2,3 (முறையே 1965,66,67ஆம் ஆண்டுகளில்)

சந்த் மாலை துகாராம், 1967
பாரத தர்சன், பாகம் 4, 1967
நைவேத்ய, 1968
பாரத தர்சன், பாகம் 5, 1968
பாரத தர்சன், பாகம் 6, 1970
பாரத தர்சன், பாகம் ; (குஜராத்தியில் எழுதிய ஜீவனஞெ ஆனந்த்தின் ஒரு பகுதி), 1970 (மொழிபெயர்ப்பு)
ஆந்தரிஜகாந்தில யாத்ரா, 1973

## மேற்கோள் நூல் வரிசை

| | |
|---|---|
| ஸன்ஸ்க்ருதி கே பரிவாஜக் (1965) | ஸ்ரீ மன்னாராயண முதலானோர் பதிப்பித்தது |
| சம்ன்வய கே சாதக் (1979) | யஷ்பால் ஜைன் முதலானோர் பதிப்பித்தது |
| ஹிமாலய கி யாத்ரா (1924) | காகா காலேல்கர் |
| ஸ்வாதீனதா சங்க்ராம் | விஷ்ணு ப்ரபாகர் |
| பாரதீய ஸம்விதான் | |
| சப்கி யோலி (ஹிந்தி மாத இதழ்) ஜனவரி சே ஏப்ரல், 1940 | காகா காலேல்கர் பதிப்பித்தது |
| ஜ்யோதிபுன்ஜ் ஹிமாலய் | விஷ்ணு ப்ரபாகர் |
| காந்தி யுக் கே ஜல்தே சிராக் | காகா காலேல்கர் |
| மங்கள் ப்ரபாத, 1981 | ,, |
| உட்தே பூல் | ,, |
| பாபு கி ஜாங்கியான் | ,, |
| கடோர் க்ருபா | ,, |
| ஜீவன் சாஹித்ய (முதல் பாகம்) | ,, |
| ஜீவன் சாஹித்ய (இரண்டாம் பாகம்) | ,, |
| யுகமூர்த்தி ரவீந்த்ரநாத் | ,, |
| ஸ்வராஜ்ய சன்ஸ்க்ருதி கே சந்தரி | ,, |
| சிரஜீவ சந்தனனே | ,, |
| பரமசகா ம்ருத்யு | ,, |

## உறுதுணை செய்தவர்கள்

| | |
|---|---|
| டாக்டர் சதீஷ் காலேல்கர் | காகா சாஹபின் மூத்த புதல்வர் |
| சரோஜினி நானுவதி | காகா சாஹபின் வளர்ப்பு மகள்—செயலரும்கூட |
| ஸ்ரீ ரவீந்த்ர கேலேகர் | கொங்கணி மொழியில் பெயர் பெற்ற எழுத்தாளர்; காகா சாஹபின் இளந்தோழர் |
| குமாரி குசும் சாஹ் | காகா சாஹபின் உதவியாளர் |

---

திரு. ஆசார்ய தத்தாத்ரேய பாலகிருஷ்ண காலேல்கர் (1885–1981) ''காகா சாஹப்'', ''சிறிய தகப்பனார்'' என்றே அனைவராலும் மரியாதையுடன் அழைக்கப்பட்டு வந்தார். புரட்சிக்காரராக வாழ்க்கையைத் தொடங்கிய இவர், முடிவில் தத்துவ ஞானியாக வாழ்ந்து புகழ் பெற்றார். காந்திஜியின் மாணாக்கரில் ஒப்பற்றதொரு தனி மாணாக்கராக இவர் விளங்கினார். பல்லாற்றானும் புகழ்மிக்கவராகவும், பன்மொழிப் புலவராகவும் விளங்கினார். தாகூரின் எழில்மிகு கவிதை நயத்திலும், மகாத்மா காந்தியின் சத்திய நெறியிலும் இவர் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்.

மராத்தி, ஹிந்தி, குஜராத்தி மொழிகளில் சிறந்த இலக்கியங்கள் படைத்த காகா சாஹப்பின் தாய்மொழியோ மராத்தியாகும். 1965ஆம் ஆண்டு இவரது கட்டுரை நூல் ''ஜீவன் வ்யவஸ்தா'' சாகித்திய அக்காதெமியின் சிறந்த குஜராத்தி இலக்கியத்திற்கான பரிசைப் பெற்றது. டாக்டர் பட்டங்களும், பாரத அரசு வழங்கிய ''பத்மவிபூஷண்'' பட்டமும் இவருக்கு அணிகலன்களாயின.

ஹிந்தியின் சிறந்த இலக்கியப் படைப்பாளர் திரு. விஷ்ணு பிரபாகர் இந்நூலில் காகா சாஹப்பின் கவின்மிகு வாழ்க்கை வரலாற்றினைப் படிப்போர் மனத்தில் நன்றாகப் பதியும் முறையில் கூறியுள்ளார்.

இந்திய இலக்கியச் சிற்பிகள் பற்றிய நூல் வரிசையில் சாகித்திய அக்காதெமியின் வெளியீடான இந்நூலை தமிழாக்கம் செய்தவர் திருமதி அகிலா சிவராமன்.

**Kaka Kalelkar** (Tamil) **Rs. 10**

ISBN 81 7021 047 8